உ

கடவுள் துணை

பிறர் உதவியின்றி தாமே தெரிந்துகொள்ளக்கூடிய

சத்தியாச்சாரியார் அருளிச்செய்த

ஜோதிட பலபாக கிரந்தமாகிய சத்தியரிஷி

துவாதச பாவபலன் நிர்ணயம்

என்னும்

# ஜாதக சத்தியாச்சாரீயம்

◆

இதன் ஆசிரியர்

ஜாதக கணிதம், பிருஹத் ஜாதகம், நவக்கிரகஸ்புட கணனம் என்னும் சித்தாந்த இராஜ சிரோன்மணி, லக்கினஸ்புடம், பாவஸ்புட கணனம் சர்வார்த்த சிந்தாமணி, ஜாதக பாவ இருவாக்ஷி, ஜாதக மனோரஞ்சிதம் முதலிய ஜோதிட புஸ்தகங்களின் ஆசிரியரும் ராமகள் திருக்கணிதம், தென்னாட்டு வாக்கிய பஞ்சாங்கம் இவைகளின் ஆசிரியருமாகிய

C. கோவிந்தராஜன் B. A., (Mathematics)

என்னும்

ஜோதிட பூஷண

**C. G. ராஜன், B.A., (Mathematics)**

ஸ்ரீமதி சி. கனகம்மாள் அவர்களால் பதிப்பிக்கப்பட்டது

ஸ்ரீமதி சி. கனகம்மாள் கம்பெனி,

31, ஆயலூர் முத்தையா முதலி தெருவு, சென்னை-1

 1951 [விலை ரூ. ~~2-0-0~~ 5/-

# முகவுரை

ஜாதக சத்தியாச்சாரியம் என்று நம்மால் பெயரிடப்பட்ட இந்த ஜோதிட சாஸ்திரம் சத்தியாச்சாரியார் என்ற சத்திய ரிஷியால் செய்யப்பட்ட ஜோதிட சாஸ்த்திரத்தின் விஷயங்கள் அடங்கியதாகும். ஜோதிட சாஸ்திரம் மிகவும் புராதீனமான ஒரு விசேஷமான சாஸ்திரமாகும். இதை உண்டுபண்ணி கையாண்டு வந்தவர்கள் பதினெட்டு ரிஷிகளாகும் அவர்கள் (1) சூரியன், (2) பிதாமகன், (3) வியாசர், (4) வஷிஷ்டர், (5) அத்திரி, (6) பராசரர், (7) கஸ்யபர், (8) நாரதர், (9) கர்கர், (10) மரீசி, (11) மனு, (12) அங்கிரசர், (13) லோமசர், (14) புலிசர், (15) சயனர், (16) யசனர், (17) இரண்டாவது மனு, (18) சௌனகர், ஆவர். இவர்களால் செய்யப்பட்ட பல கிரந்தங்கள் நாளடைவில் சிதருண்டுபோய் பூராகவும் இப்போது கிடைப்பது அரியதாக விருக்கின்றது. இவர்களுக்குப் பின்னல் வந்த ஜோதிடர்கள் இவர்களுடைய கிரந்தங்களில் தமக்குக் கிடைத்தவைகளை நன்ருய்ப் படித்து, ஆராய்ந்து, பரிசிலனைசெய்து, இவைகளின் சாராம்சத்தை எடுத்து பல கிரந்தங்களைச் செய்து இருக்கின்ருர்கள். இப்படிச் செய்தவர்களில் மிகவும் சிரேஷ்டமானவர்களில் சத்தியாச்சாரியார், வராஹமிகிராச்சாரியார், இன்னும் சிலர் ஆவார்கள். சத்தியாச்சாரியார் என்பவர், ஜோதிட சாஸ்திரத்தில் மிகவும் கீர்த்திபெற்ற வராஹமிகிராச்சாரியார் என்றவருக்கு முன் இருந்தவர். இந்த வராஹமிகிராச்சாரியார் விக்கிரமாதித்தன் என்ற அரசன் காலத்தில் இருந்தவர். வராஹமிகிராச்சாரியார் தன்னுடைய பிரபலமான கிரந்தமாகிய பிருஹத் ஜாதகம் என்ற ஹோராசாஸ்த்திரத்தில் பலவிடத்தில் சத்தியாச்சாரியாரைப்பற்றி புகழ்ந்து பேசி இவருடைய மதம் தமக்குச் சம்மதமானது என்று சொல்லி இருப்பதால் சத்தியாச்சாரியாருடைய பெருமை நாம் எடுத்துச் சொல்லாமலே தானுகவே விளங்கத்தக்கதாகும். சத்தியாச்சாரியார் தனக்கு முன் ஏற்பட்ட அநேக கிரந்தங்களை நன்ருய் வாசித்து தேர்ச்சி யடைந்தவராகும். இவர் பஞ்சசித் தாந்தம் என்ற ஒரு ஜாதக பலா பலன்களை அறியக் கூடிய ஜோதிடக் கிரந்தத்தைச் செய்திருக்கிருர். வராஹ மிகிரர் கூடவான சாஸ்திர அல்லது கணித கிரந்த மாகிய பஞ்ச சித்தாந்தம் என்ற கிரந்தத்தைச் செய்திருக்கிருர், இந்தக் கிரந்தத்தில் ஜாதக பலா பலன்கள் ஒன்றும் சொல்லப்படவில்லை. இந்த வராஹ மித்திரருடைய பஞ்ச சித்தாந்தம், சத்தியாச்சாரியாருடையபஞ்ச சிந்தாந்தத்தைவிட அதிகமாக எல்லோரும் சகஜமாகத் தெரிந்திருக்கிறது. சத்தியாச்சாரிருடைய பஞ்ச சித்தாந்தைத்தை அறிந்தவர்கள் கொஞ்சம் பேர்தான். ஆகையால் பஞ்ச சித்தாந்தம்

என்றால் வராஹ மிகிரருடைய கிரந்தத்தையே பெரும்பாலும் கருதுவார் களாகும். இந்தக் காரணத்தைக் கொண்டே சத்தி யாச் சாரியாருடைய பஞ்ச சித்தாந்த விஷயங்கள் அடங்கி யுள்ள இந்த ஜோதிட புஸ்தகத்திற்கு நாம் "ஜாதக சத்தியாச் சாரியம்" என்ற பெயர் கொடுத்திருக்கிறோம் என்று அறியவும்.

ஜாதக பலாபலன்களை அறிவதற்கு ஏது வாயும் முதற்கருவி யாயும் உள்ள விஷயங்களைச் சத்தியாச் சாரியார் ஐந்து வகுப்பாக வகுத்து ஒவ்வொரு வகுப்பிற்கும் "சித்தாந்தம்" என்று பெயர் கொடுத்திருக்கிறார். ஆகையால்இந்தஐந்துசித்தாந்தங்களும் "பஞ்ச சித்தாந்தம்" எனப்படும். சித்தாந்தம் என்றால் உண்மை என்று அர்த்தம். எப்போது உண்மையால் இருப்பது சித்தாந்த மாகும். ஓராவது சிந்தாந்தம் "நட்சத்திர சிந்தாந்தம்" எனப்படும் இந்த சித்தாந்தத்தில் இராசி மண்டலத்தில். உள்ள நட்ஷதிரங்களைப் பற்றியும் அவைகளால் குறிப்பிடப்பட்ட ராசிகள், பாவங்கள் ஆகிய இவைகளைப் பற்றியும், இந்த நட்சத்திரங்களில் கிரகங்கள் சஞ்சரிப்பதால் ஏற்படும் சுப, அசுப, பலன்களை நிர்ணயஞ் செய் வதைப் பற்றியும் விவரித்திருக்கின்றார். இரண்டாவது சித்தந்தம் "கிரக சில சிந்தாந்தம்" எனப்படும். இதில் கிரகங்களின் சொரூபத் தைப் பற்றி விவரித்திருபின்னால். மூன்றாவது சிந்தாந்தம் "கிரக சிந்தாந்தம்" எனப்படும் இதில் ஒவ்வொரு கிரகமும் எந்தெந்த விஷயங்களுக்கு அதிகாரியாய் இருக்கின்றது என்பதைத் தெரிவித் திருக்கிறார். நான்காவது சித்தாந்தம் வர்க் கோத்தம சிந்தாந்தம் எனப்படும். இதில் ஒவ்வொரு கிரகமும் ஆட்சி, உச்சம், நீச்சம், பகை, சத்துரு வீட்டில் இருப்பது, சாதாரணமாய்த் தசவர்க்கம் என்று சொல்லப் பட்டவர்க்கங்களில் கிரகம் இருப்பதால் அந்தக் கிரகத்திற்கு ஏற்படும் வலிவு அல்லது பலம் (அதாவது ஷட் பலம்) ஆகிய இவைகளைப்பற்றியும், இவைகளால் ஏற்படும் பலாபலன் களையும் விவரித்திருக்கிறார். ஐந்தாவது சித்தாந்தம் "ஆதிபத்திய சித்தாந்தம்" எனப்படும் இதில் ஒரு கிரகம் எந்த எந்த வீட்டிற்கு அல்லது பாவத்திற்கு அதிபதி என்பதையும். அந்த கிரகம் தன் பாவத்திற் எந்தெந்த பாவத்தில் இருந்தால், எப்படிப்பட்ட பலா பலன்களைத்தரும் என்பதைப் பற்றியும் தெரிவித்திருக்கிறார். இவ்விதமாக ஜாதகப் பலா பலன்களை அறிவதற்கு முதற் கருவி யாயும் இன்றியமை யாதன வாயும் உள்ள அம்சங்களை (அதாவது விஷயங்களைப்) பற்றிஇந்தப் பஞ்சித்தாங்களில்தெரிவித்திருக்கிறார்.

பிறகு சத்தியாச் சாரியார் பஞ்சசித்தாங்களை அஸ்திவாரமாக வைத்துக் கொண்டு ஒவ்வொரு பாவாதிபதியும் துவாதசபாவங்கள் என்று சொல்லப்பட்ட பன்னிரண்டு பாவங்களில் இருப்பதாலும், இதர பாவாதிபதி களுடன் சம்பந்தப் படுவதாலும், இதர பாவா திபதி களால் பார்க்கப் படுவதாலும், இருபத்தெழு நட்சத்திரங் களில் ஜென்ம நட்சத்திரத்தை அனுசரித்து நட்சத்திர சிந்தாந்தம்

பிரகாரம் எந்த தெந்த நட்சத்திரங்கள் சுப நட்சத்திர மாகுமோ என்று தீர்மானித்து அந்த நட்சத்திரத்தில் அந்தக் கிரகம் இருப்பதாலும் அந்தக் கிரகம் வர்க்கோத்தமம் முதலியவைகளை அடைந்திருப்பதாலும் கொடுக்கக் கூடிய பலன்களைப் பற்றி விஸ்தர்யமாகத் தெரிவித்திருக்கிறார்.

பிறகு ஒரு ஜாதகருடைய வாழ்நாளில் எந்தெந்த கிரகத்தால் எந்தெந்த காலத்தில் எவ்விதமான பலன்கள் நேரக்கூடும் என்பதை அறிவதற்கு ஏதுவாயுள்ள தெசாபுத்திகளைப்பற்றிச் சத்தியாச்சாரியார் தன்னுடைய கிரந்தத்தில் சொல்லி இருக்கின்றார். இவ்விடத்தில் லக்கினாதிபதியின் தெசை முதல் பன்னிரண்டாம் வீட்டதிபதியின் தெசைவரையிலுமுள்ள துவாதசா பாவாதிபதிகளின் தெசைகளில் நடக்கும் பலாபலன்களை மிகவும் விஸ்தாரமாகத் தெரிவித்திருக்கின்றார். இவ்வித தெசாபுக்தி பலன்களை அறிய ஆராய்ச்சி செய்யும்போது, கிரகங்கள் ஜெனன காலத்தில் இருக்கும நிலையை மாத்திரமே கவனியாமல், அவைகள் தற்காலத்தில் இருக்கும் நிலையை (அதாவது கோசாரம் என்று சொல்லப்பட்டகோசார நிலையையுங்கூட கவனித்துதச பலாபலன்களைச்சொல்ல வேண்டும் என்று தெரிவித்து கிரகங்களின் கோச்சார பலனையும் இந்தக்கிரந்தத்தில் தெரிவித்திருக்கின்றார்.

இவ்விதமாக ஜாதக பலாபலன்களை நிர்ணயிப்பதற்கு ஏதுவாயுள்ள கருவிகளை தனக்குக்கிடைத்தக் கிரந்தங்களை வாசித்தறிந்து சத்தியாச்சாரியார் இந்தக்கிரந்தத்தில் கொடுத்திருக்கின்றார்.

மேலும் இந்த ஜோதிட புத்தகத்தின் ஆரம்பத்தைவாசிப்போமானால் இந்தக்கிரந்தத்தின் விஷயங்களைச் சத்தியாச்சாரியார் தன்னுடைய சிஷியனுக்கு உபதேசஞ்செய்ததாக ஏற்படும். இந்தச்சிஷியன் மனித்தன் என்ற பெயருடைய சிஷியனாகும். இந்தச்சிஷியனுக்கு இந்தக்கிரந்தத்தின் விஷயங்களை எவ்விதமாக உபயோகப்படுத்தவேனும் என்ற எச்சரிக்கையையும் கொடுத்திருக்கின்றார். இவர் அடிக்கடி தன் சிஷியனைப்பார்த்து "நான் இந்த ஜோதிட சாஸ்த்திரத்தின் உண்மையை உனக்கு ஒருவித போக்காக அதாவது ஒருவித வழிகாட்டியாகச் சுருக்கமாகச் சொல்லி இருக்கிறேன், நான் அந்தந்த விடங்களில் விஸ்தாரமாகச் சொல்லாமல் விட்டுவிட்ட விஷயங்களை நீ உன்னுடைய அறிவாலும், யுக்தியாலும், சாமர்த்தியத்தாலும் நான் பஞ்சசித்தாந்தத்தில் முன்னமே சொல்லியுள்ள விஷயங்களை உபயோகப்படுத்தி பலன்களைக் கற்பித்துக் கொண்டு சொல்லவேண்டும். இவ்விதமாக நீ சொல்வயானல் நீ திறமை வாய்த ஜோதிடனுவாய் என்று எச்சரிக்கையாகச் சொல்லி யிருக்கின்றார். (பலனறியும் கிரகம் என்றதில் 57-வது பக்கத்தில் உள்ள 5-வது அயிட்டத்தைவாசிக்கவும்) இந்தக் கிரந்தங்களைப்போன்ற ஜோதிட சாஸ்திரங்கள் ஒரு

சிற்பிடம் இருக்கும். சிற்பம் செய்யத் தேவையான பல ஆயுதங்களைப போன்றது. சிற்பி தனக்கு வேண்டிய ஒரு சிற்ப உருவத்தைத் தன்னிடம் உள்ள சிற்பத்தின் உதவியால் தன்னுடைய புத்தி நுட்பம், சாமர்த்தியம் ஆகிய இவைகளுக்குத் தகுந்தாப் போல எப்படி ஏற்படுத்தி கின்ருனே அவ்விதமாகவே தான் ஒரு ஜோதிடரும் தனக்குக் கிடைத்துள்ள ஜோதிடசாஸ்திரிக் கருவிகளை உபயோகப் படுத்தித்தான் சொல்லும் பலா பலன்கள் தன்னுடைய அறிவு, யுத்தி, சாமர்த்தியம் ஆகிய இவைகளுக்கு அனுசரித்தாப்போல இருக்கும்என்று நீ அறியவும் இந்தத்தாத்பரியத்தைச் சத்தியாச் சாரியார் அடிக்கடிதன் சிஷியனுன மனிதனுக்குத் ஞாபகப் படுத்துகிருர். "சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம், வைத்த தொரு கல்வி மனப்பழக்கம், நித்தம் நித்தம் நடையும் நடைப்பழக்கம் என்ற மேற் கோளைக்கியா பகத்தில் வைத்துக் கொண்டு, இந்த ஜோதிட கிரந்தம் போன்ற முக்கியமான கிரதங்களை அடிக்கடிபடித்து என்று தயவு செய்து தெரிந்து கொள்ளவும். ஆடிக்கு ஒரு தடவை, அமாவாசைக்கு ஒரு தடவை என்றதைப் போல படித்து விட்டு அறுபொருளாய் எப்போதாவது ஒரு தடவை பலன் சொல்ல ஆரம்பித்தால், தேவையான விஷயங்கள் ஞாபகத்தில் இருமலும், சீக்கிரம் ஞாபகத்திற்கு வராயலும், ஜோதிடர் சொல்லும் பலா பலன்கள் தவறிப் போவது சகஜமாகும். ஆகையால் எந்த வித்தையாயிருந்த போதிலும் அடிக்கடி கையாண்டு கொண்டு வந்தா லொழிய அந்த வித்தை நலந் தராது. ஆகையால் தான், ஜோதிட சாஸ்திர வித்தையிலும் கூட அடிக்கடி யான பழக்கமும் அனுபோகமும் அவசிய மானவை என்று கருதப்படுகிறது.

மேலும் இந்தக் கிரந்தத்தில் சத்தியாச் சாரியார் கிரகங்கள் அம்சா இரத்தில் இருக்கும் நிலையை மிகவும் முக்கியமாகக் கவனிக்கின்ருர். (52-வது பக்கத்தில் 3-வது அயிட்டத்தையும் வாசிக்கவும்.) இவ்விதமாக அம்சா சக்கிரத்தில் கிரகங்கள் இருக்கும். நிலையைக் கவனிக்கிற கிரந்தங்கள் அருமையாகக் காணப்படுகின்றன. இந்த விசேஷம் சத்தியாச் சாரியருடைய கிரந்தத்தின் ஒரு அறிய பெரிய விஷயமாகும். அம்சாச் கிரகத்தில் கிரகம் 6, 8, 12 வது முதலிய அம்சையிலிருந்தால் பலன் பலான தென்று கத்தியாச் சாரியார் சுருக்கமாகச் சொல்லும் போதெல்லாம், 52-வது பக்கத்தில் அயிட்டங்கள் 3, 4, 5, 6, இவைகளில் விவரித்து சொல்லியது போல என்று அர்த்தம் அல்லது வியாக்கியாணம். ஏற்படுத்திக் கொள்ளவும்.

சத்தியாச்சாரியார் ஒரு திறமை வாய்ந்த சிறந்த ஜோதிடர் என்று நாம் முன்னமே எழுதி இருக்கிறோம். அவர் சத்தியசம்ஹிதை என்ற துருவ நாடி கிரந்தமும செய்திருக்கிருர். துருவ நாடி மிகவும் சிறந்த கிரந்தம் என்றது பலருக்குத் தெரிந்த விஷயம்.

இந்த நாடிக் கிரந்தத்தில் ஜாதகங்களின் பலா பலன்களை வெகு திறமையாகவும் ஆச்சரியப் படத்தக்கதாகவும் சொல்லி இருக்கிறார். இந்த நாடி ஜாதகங்களைப் படிப்பது அதிக அனுபோகத்தைக் கூடிய சீக்கிரத்தில் விளைவிக்கும். துருவ நாடி உதாரண ஜாதகங்கள் நம்மிடம் ஏராளமாக இருக்கின்றன. அவைகளை நாம் கூடிய சீக்கிரத்தில் உதாரன ஜாதகங்களாக (illustrative horoscopes ஆக) அச்சிடப்போகிறோம்.

நாம் இந்த ஜோதிட புத்தகத்தை அநேக வருஷங்களுக்கு முந்தியே எழுதி தயார் செய்து நமது பஞ்சாங்கங்களிலும் புத்தகங்களிலும் விளம்பரம் செய்து அச்சிடவைத்திருந்தும் இது வரையிலும் அச்சிட சந்தர்ப்பம் வாய்க்கததால் தாமதம் ஏற்பட்டது. அதற்கு நம்மை மன்னிக்கும்படியாய்க் கோருகிறோம், இந்தப் புத்தகத்தின் இங்கிலீஷ் மொழி பெயர்ப்பும் அனேக வருஷங்களுக்கு முந்தியே தயார் செய்யப்பட்டு அச்சிடுவதற்குத்தயாராய் இருப்பதால் அதுவும் கூடிய சீக்கிரத்தில் கடவுளுடைய கிருபையால் வெளியாக்கபடும் என்று நம்புகிறோம.

இந்தப் புத்தகத்தில் எழுத்துப் பிழை; சொற் பிழை முதலியவைகளிருந்தால் அவைகளை மன்னித்து இதிலுள்ள சாராம்சத்தை ஏற்றுக் கொண்டு இந்தப் புத்தகத்தை ஆமோதிக்கும் படியாய் இதை வாசிக்கும் பெரியோர்களையும் சிறியோர்களையும் வணக்கத்துடன் கேட்டுக் கொள்கிறேன்.

12—4—1950 C. G. ராஜன் B. A.

31 ஆபஹார் முத்தய்யா முதலி தெரு,
கிருஷ்ணப்ப நாய்க்கன் குளம் அருகில்,
சௌக்கார்பேட்டை போஸ்ட்டு. சென்னை-1.

## வியாக்கியானம்

(1) இரண்டாவது பக்கம், (8)-வது அயிட்டம் ஆகிய ஜென்ம நட்சத்திரம், எட்டாவது பக்கம் (30)-வது அயிட்டம் ஆகிய இவைகளுக்கு வியாக்கியானம் :—இங்கு சத்தியாச்சாரியார் ஜெனன லக்கினத்தையும், சந்திரனையும் கவனிக்கின்றார். இவைகள் இரண்டில் ஜெனன லக்கினத்தைவிடச் சந்திரன் வலிவாய் இருக்கும்போது, சந்திரன் ஜாதகருடைய ஜெனன காலத்தில் எந்த நட்சத்திரத்தில் இருக்கின்றாரோ அந்த நட்சத்திரமே ஜாதகருடைய ஜென்ம நட்சத்திரம் ஆகும். இந்த நட்சத்திரத்திற்குரிய அதிபதியின் தெசையே முதல் முதல் தெசை அல்லது ஜெனன தெசை ஆகும். நட்சத்திரங்களின் அதிபதிகள் 3-வது பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இரண்டாவது தெசை என்பது ஜென்ம நட்சத்திரத்திற்கு அடுத்த நட்சத்திரத்தின் அதிபதியின் தெசை ஆகும். மூன்றாவது தெசை ஜென்ம நட்சத்திரத்திற்கு மூன்றாவது நட்சத்திரத்தின் அதிபதியின் தெசையே ஆகும். இவ்விதமாகவே மற்ற அடுத்த தெசைகள் அடுத்த நட்சத்திரங்களின் அதிபதிகளின் தெசைகளே வரிசையாக வரும்

லக்கினம் (அதாவது ஜெனன லக்கினம்) சந்திரனைவிட வலிவாய் இருக்கும்போது லக்கினம் இருக்கும் நட்சத்திரமே ஜென்ம நட்சத்திரம் ஆகும். லக்கினம் இருக்கும் நட்சத்திரத்தை லக்கினம் இருக்கும் ஸ்புடத்திலிருந்து (அதாவது லக்கினஸ்புடத்திலிருந்து) அறியவேண்டும். இந்த லக்கினம் இருக்கும் நட்சத்திரத்தின் அதிபதியின் தெசையே முன் சொல்லியபிரகாரம் முதல் முதல் தெசை அல்லது ஜெனன தெசை ஆகும். இரண்டாவது தெசை என்பது லக்கினம் இருக்கும் நட்சத்திரத்திற்கு அடுத்த நட்சத்திரத்தின் அதிபதியின் தெசை ஆகும். மூன்றாவது தெசை லக்கினம் இருக்கும் நட்சத்திரத்திற்கு மூன்றாவது நட்சத்திரத்தின் அதிபதியின் தெசையே ஆகும். இவ்விதமாகவே மற்ற அடுத்த தெசைகள் அடுத்த நட்சத்திரங்களின் அதிபதிகளின் தெசைகளே வரிசையாக வரும்.

ஆகையால் ஜென்ம நட்சத்திரம் என்பது சத்தியாச்சாரிருடைய மதம் பிரகாரம் சந்திரன் ஜேனன லகினத்தை விட வலிவாய் இருக்கும் போது சந்திரன் இருக்கும் நட்சத்திரமே ஆகும், ஆனால் சந்திரனைவிட ஜெனன லக்கினம் வலிவாய் இருக்கும்போது

ஜெனன லக்கினம் இருக்கும் நட்சத்திரமே ஆகும், இந்த வித்தியாசத்தை முக்கியமாய்க் கவனிக்க வேண்டும் ஏனென்றால் இந்த வித்தியாசத்தை அனுசரித்தே ஜெனன காலம் முதல் நடைபெறும் தெசைகளை வரிசையாகத் தெரிந்து கொள்ள வேண்டியதாகவிருக்கின்றது.

சந்திரன், ஜெனன லக்கினம் (என்ற லக்கினம்) இவைகள் இரண்டில் எது வலிவுள்ளது என்று அறியும் விதம் இனி மேல் சொல்லப்படும். சந்திரன் இருக்கும் இராசி நிலே, விதம் இவருடன் கூடி இருக்கும் கிரகங்கள், இவரைப் பார்க்கும் கிரகங்கள் ஆகிய இவைகளால் சந்திரனுடைய பலத்தை நிர்ணயஞ் செய்ய வேண்டும். லக்கினத்தின், பலத்தை லக்கினதிபதி (அதாவது லக்கினதிபதி) யின், பலத்தாலும், லக்கினபாவத்தில் இருக்கும் கிரகங்கள் ஆகிய இவைகளாலும் நிர்ணயஞ் செய்ய வேண்டும். இவைகளை ஆட்சி, நட்பு, பகை, உச்சம், நீச்சம், மூலத்திரிகோணம் என்ற பல அம்சங்களைக் கொண்டு தோராயமாக நிர்ணயஞ் செய்யலாம். இவைகளைத் துல்லியமாகக் நிர்ணயஞ் செய்ய வேண்டுமானால் நமது "ஜாதக கணிதம் ஓராம் பாகம் என்னும் ஜோதிட கிரக சட் பலம் ஆயுள் கணிதம்" என்ற புத்தகத்தின். ஜாதக கணிதம் ஓராம் பாகம் என்னும் ஜோதிட கிரக சட் பலம் ஆயுள் கணிதம்—ஆசிரியர் C. G. ராஜன் B A விலை ரூ. 3—8—0 உதவியால் கணித ரீதியாய் நிர்ணயஞ் செய்யலாம். இந்தப் புத்தகத்தில் சொல்லிய பிரகாரம் சந்திரனுடைய சட் பலத்தைக் கணிக்க சந்திரனுடைய பலம் ஏற்படும், இந்தப் புத்தகத்தில் சொல்லிய பிரகாரம் லக்கின பாவத்தின் பலத்தைக் கணிக்க லக்கினத்தின் பலம் ஏற்படும். இந்தப் புத்தகத்தில் 37-வது கட்டங்களைப் பார்க்கவும்.

ஜெனன கால லக்கினம் (அதாவது ஜென்ம லக்கினம்) வலிவாய் இருக்கும் போது இந்த லக்கின பாவத்தை ஓராவது பாவமாகக் கருதி இதிலிருந்து மற்ற பாவங்களைப் பன்னிரண்டு பாவங்கள் வரையிலும். கணக்கிட வேண்டும். இவ்விதமாகக் கணக்கிட வருகின்ற பாவங்களுக்குத் தான் துவாதசபாவ பலா பலன்களை நிர்ணயிக்கவேண்டும். அதாவது உதாரனமாக இந்தலக்கின பாவத்திலிருந்து இரண்டாவது பாவம், குடும்ப பாவம், மூன்றுவது பாவம் சகோதரபாவம், நான்காவது பாவம் மாதுரு பாவம், ஐந்தாது பாவம் புத்திர பாவம், 12-வது பாவம் விரைய பாவம்,

ஆக 12 பாவங்கள் வரையிலும் ஏற்படும் (லக்கினம் என்று யாதொரு அடைமொழியும் இல்லாமல் சொன்னால் அது ஜென்ம லக்கினத்தையே குறிக்கும் என்று கருத வேண்டும்.)

சந்திரன் வலிவாய் இருக்கும் போது சந்திரன் இருக்கின்ற பாவத்தையே ஓராவது பாவமாகக் கருதி இதிலிருந்தே மற்றப் பாவங்களைப் பன்னிரண்டு பாவங்கள் வரையிலும் கணக்கிட வேண்டும். இவ்விதமாய் கணக்கிட வருகின்ற பாவங்களுக்குத்தான் தவா தச பலா பலன்களை நிர்ணயிக்க வேண்டும். அதாவது உதாரணமாகச் சந்திரன் இருக்கும் இந்த ஓராவது பாவத்திலிருந்து இரண்டாவது பாவம் குடும்ப பாவம், ஐந்தாவது பாவம் புத்திர பாவம், 12-வது பாவம் விரைய பாவம் ஆக 12 பாவங்கள் வரையிலும் ஏற்படும். சந்திரன் இருக்கும் பாவத்திற்குச் சந்திர லக்கினம் என்று சாதாரனமாய்ச் சொல்வதுண்டு.

ஆகையால் நாம் இது வரையிலும் மேலே கண்டுள்ளபடி கவனித்தவரையில் லக்கினம் (அதாவது ஜென்ம லக்கினம்,) சந்திர லக்கினம் என்ற இரண்டுவித லக்கினங்கள் ஏற்படுதப் பட்டிருக் கின்றன சத்தியாச்சாரியார் தன் மதம் பிரகாசம் லக்கின வலிபாய் இருக்கும் போது லக்கினத்தைக கொண்டும், ஜாதக பலா பலன்கள் எல்லாவற்றையும் செல்ல வேண்டும் என்று கண்டிப்பாய் நிர்ணயஞ் செய்திருக்கிறார். இதைத்தான் அவர் இந்தப் புத்த கத்தில் 8-வது பக்கத்தில் 30-வது அயிட்டத்தில் தெரிவித்திருக் கின்றார். என்று தயவு செய்து அறிந்து இதைக் தியாபகத்தில் எப்போது வைத்துக் கொண்டு பலா பலன்களைச் சொல்ல ஜோதிடர் ஆரம்பிக்கவேண்டும் இவ்விதமாக லக்கினம், சந்திர லக்கினம் ஆகிய இவ்விரண்டில் எதைக் கொண்டு பலா பலன்கள் சொல்ல வேண்டும் என்று தீர்மானிக்கச் சந்தர்பம் அல்லது அவகாசம் இல்லாத போது ஜோதிடர்கள் சம நிலையாக இவ்விரண்டுலக்கினங்கள் ரீதியாகவும் தனித்தனியாய்பலா பலன்களை ஆராய்ச்சியிலும் ஏற்படும் பலா பலன்களை ஒன்றாய்ச் சேர்த்துச் சமப்படுத்திசம நிலையாகப் பலா பலன்களைச் சொல்லி விடுவது பெரும் பாலும்சகஜமாக விருக்கிறது.

---

# விஷய அட்டவணை

## 1-வது அத்தியாயம்

---

## பிழை திருத்தம்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 32 | 10 | பலனும் மிச்சம் | பலனும் மிச்ரம் |
| 32 | 27 | கிலெயிராது. தயாருடன் | கிலெயிராது. தாயாருடன் |
| 33 | 3 | பற்கல்நேர் | பற்கள் நேர் |
| 33 | 21 | மிச்ரமாகில் மிச்ரபலன் | மிச்ரமாகில் மிச்ரபலன் |
| 37 | 2 | தனம் கினடக்கும் | தனம் கிடைக்கும் |
| 37 | 26 | பலமுள்ளவர்களாகிவ் | பலமுள்ளவர்களாகில் |
| 48 | 19 | ( -5-7 நக்ஷத்திரங்கட்கு) | (3-5-7 நக்ஷத்திரங்கட்கு) |
| 50 | 12 | ஜோதிடன் உண்மை | ஜோதிடன் உண்மை |
| 53 | 32 | (10) -க்கு உடையவன் | (10) 6-க்கு உடையவன் |
| 55 | 4 | கூட்டியிருந்தர்ல் | கூடியிருந்தால் |
| 57 | 27 | எட்டிறகு | எட்டிற்கு |
| 58 | 16 | சுவா தினமான | சுவா தீனமான |
| 58 | 23 | தனாதிபனுடன் (2-வமி | தனாதிபனுடன் (2-வது |
| 59 | 5 | வீட்டம் சதிலிருக்கை யாலும் | வீட்டம் சத்திலிருக்கையாலும் |
| 59 | 15 | பிரசிதியுறுவான் | பிரசித்தியுறுவான் |
| 63 | 4 | அம்சங்கலிருந்தாலும் | அம்சங்களிலிருந்தாலும் |
| 63 | 7 | கிரகங்கலின் ராசிக்குச் | கிரகங்களின் ராசிக்குச் |
| 64 | 1 | 11-மிடத்திலிகுக்கில் | 11-மிடத்திலிருக்கில் |

உ

கடவுள் துணை

சத்தியாச்சாரியார் அருளிச்செய்த
ஜோதிட பலபாக கிரந்தமாகிய
"சத்தியரிஷி துவாதச பாவ பலன் நிர்ணயம்"
என்னும்

# ஜாதக சத்தியாச்சாரீயம்

## அத்தியாயம் 1.

(1) சத்தியாச்சாரியார் சந்தோஷமுடையவராய்த் தன் சிஷியனைப் பார்த்து உனக்காக இனிவருவதை அறிவதற்கு ஏதுவாயுள்ள மிகுந்த ரகசியத்தை உனக்குச் சொல்லுகிறேன் என்கிறார்.

அந்த ரகசியம் ஜோதிஷ சாஸ்திரமாகும். இந்த ஜோதிஷ சாஸ்திர ரகசியம் உன்னால் ஏகாந்தமாய்க் காக்கக்கூடியது. குரு பணிவிடை செய்யாதவர்களுக்கும் நாஸ்திகர்கட்கும் இது கொடுக்கப்படாதது. இதை நீ தரித்திரர்கட்கும் அடிக்கடி வெகுபேர்கட்கும் சொல்லக்கூடாது. கவனத்தையுடைய மனதுடன் நீ துருவமதம் பிரகாரமுள்ள இந்த ஜோதிடத்தைக் கேள்.

(2) பகலும் இரவும்கொண்ட ஒருதினத்தில் பன்னிரண்டு லக்கினங்கள் உதிக்கின்றன.

(3) ஜராயு ஜாதி பேதங்களினல் பிராணிகள் வெகுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளின் சொரூப ஞானங்களும் உனக்குக் கலியுகத்தில் தெரிவது கஷ்டம். அந்த ஜராயுஜங்களும் மிருகங்களின் பேதங்களினல் வெகுவிதமாகும். இவற்றிலும் ஆண் பெண் என்ற இரண்டு பிறிவால் மானிட ஜன்மத்திலும் ஆண் பெண் என்ற இரண்டு பிரிவுகள் ஏற்படுகின்றன. பிறப்பு ஒரு க்ஷணநேரத்தில் உண்டாவதினல் அதை மந்த புத்தியால் அறியமுடியாது. ராஜ, நாபஸ ரேகாதி யோகங்கள் வெகுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

(4) இருபத்தேழு நக்ஷத்திரங்களிலும் நூற்றெட்டு பாதங்கள் இருக்கின்றன. மீன்கள் ஒருகுளத்தில் சஞ்சாரஞ் செய்வது போல இந்த நூற்றெட்டுப் பாதங்களிலும் கிரகங்கள் சஞ்சாரஞ் செய்யும். ஜோதிஷ சாஸ்திரம் ஒரு சமுத்திரத்தைப் போன்றது. அதைக் கடப்பது மிகவும் கஷ்டமானது. எக்காலத்தில் எவ்விதக் கிரகத்தினல் எவ்விதமான பலன்கள் உண்டாகும் என்பதை அறிவது மிகவும் கஷ்டமான காரியம். தன்னுடைய இடுப்பில்

ஒரு கல்லைக் கட்டிக்கொண்டு சமுத்திரத்தில் செல்லுபவன் சமுத்திரத்தில் சீக்கிரம் மூழ்கிவிடுவான். அப்படிப்பட்டவனுக்கு ஒரு ஓடம் இருந்தால் அவன் சமுத்திரத்தில் முழுகமாட்டான். ஒன்றுக்கொன்று வித்தியாசமுள்ள ஜோதிட சாஸ்திரக் கிரந்தங்கள் அனேகம் இருக்கின்றன. அவைகளைப் படிக்கின்ற ஒருவன் பலாபலன்களை ஆராயுங்காலத்தில் இதுதான் நடக்கும், இது நடவாது என்று தீர்மானஞ் செய்வதில் சக்தியற்றவனாய் ஊமத்தன்சாற்றைக் குடித்தவன்போல மயங்கி இந்த சமுத்திரத்தில் திகைக்கின்றான். அப்படிப்பட்டவன் இந்த ஜோதிட சாஸ்திரமாகிய சமுத்திரத்தில் மூழ்காமல் செல்லுவதற்கு ஒரு ஓடம்போல உதவுகின்ற இந்த ஜோதிடநூலை நான் சொல்லுகிறேன் என்று சத்தியாச்சாரியார் தன்னுடைய சிஷியனுக்குச் சொல்லுகிறார்.

(5) இலக்கினங்கள் பன்னிரண்டு ஆகின்றன. இவைகளைப் பற்றிய ஞானமே போதுமானதல்ல. இன்னம் அனேக விஷயங்கள் தெரியவேண்டியிருக்கின்றன. இந்த துவாதச லக்கினங்கள் ஒன்றுக்கொன்று பலவிதமான பேதங்களுடையவை. அவைகளின் தத்துவ ஞானமும், இன்னம் இதர அனேக விஷயங்களும் ஒரு ஜோதிடருக்குத் தெரிந்தால்தான் அவர் வல்லவர் என்று சொல்லப்படுவார்.

(6) பலனை அறியவேண்டுமானால் மூன்றுவிதமான காலத்தைக்கொண்டு அறியவேண்டும். அவைகள் (1) கற்பாதானகாலம், (2) சிரோதயகாலம், (3) பூபதனம் என்று சொல்லப்பட்ட பூமியில் விழும் காலம் என ஆகும். கற்பாதானகாலம், சிரோதயகாலம் ஆகிய இவ்விரண்டு காலங்களை அறிவது மிகவும் கஷ்டமானது. ஆகையால் பூமியில் விழும் (பூபதன) காலத்தைக் கொண்டே பலன் சொல்லவேண்டும். அதாவது பூபதன காலத்திற்கு லக்கினம் முதலானவைகளைக் கணித்து நிச்சயிக்கவேணும் என்பதாம்.

(7) ஜென்மகாலத்தில் எந்த ராசி உதிக்கின்றதோ, எந்த நக்ஷத்திரம் இருக்கின்றதோ அதன் நவாம்சாதிபதி, இந்த நவாம்சாதிபதி இருக்கும் ராசியின் அதிபதி, இவர்களுடைய பலத்தை அறிந்து ஜாதகருடைய யோகத்தை நிர்ணயிக்கவேண்டும்.

குறிப்பு:—நவாம்ச சக்கரம் போடும் வழியைப்பற்றி எமது ஜாதக கணிதம் ஓராம்பாகம் என்ற புத்தகத்தை வாசிக்கவும்.

(8) ஜென்ம நட்சத்திரம்:—சத்தியாச்சாரியாருடைய மதம் பிரகாரம் ஜெனன காலத்தில் சந்திரன் இருக்கும் நட்சத்திரம் ஜென்மதின சந்திர நட்சத்திரம் ஆகும். ஜெனன காலத்தில் உதிக்கும் லக்கினம் எந்த நட்சத்திரத்தில் இருக்கிறதோ அந்த நட்சத்திரம் லக்கின நட்சத்திரம் ஆகும். இவ்விரண்டில், சந்திரன் வலிவாய் இருந்தால் ஜென்மதின சந்திர நட்சத்திரமே ஜென்ம

நட்சத்திரம் ஆகும். லக்னம் வலிவாய் இருந்தால் லக்கின நட்சத்திரமே ஜென்ம நட்சத்திரம் ஆகும். நட்சத்திர அதிபதிகள் கீழ்கண்டபடி ஆகும்.

| நட்சத்திரங்கள் | | | அவைகளின் அதிபதிகள் |
|---|---|---|---|
| (1) கிருத்திகை | உத்திரம் | உத்திராடம் | சூரியன் |
| (2) ரோகிணி | அஸ்தம் | திருவோணம் | சந்திரன் |
| (3) மிருகசீரஷம் | சித்திரை | அவிட்டம் | அங்காரகன் |
| (4) திருவாதிரை | சுவாதி | சதயம் | ராகு |
| (5) புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி | குரு |
| (6) பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி | சனி |
| (7) ஆயில்யம் | கேட்டை | ரேவதி | புதன் |
| (8) மகம் | மூலம் | அசுவணி | கேது |
| (9) பூரம் | பூராடம் | பரணி | சுக்கிரன் |

(1) லக்கினுதிபதி, (2) லக்கின நவாம்சாதிபதி, (3) லக்கின நட்சத்திர அதிபதி அல்லது சந்திர நட்சத்திர அதிபதி(4) இவர்கள் மூவர்கள் இருக்கும் ராசி அதிபதிகள் ஆகிய இந்த நான்குவகைப் பட்டவர்களுடைய பலம், துர்பலம் ஆகிய பலாபலத்தை அறிந்து இந்த நால்வரும் பூர்ண பலமுடைபவராகில் ஜாதகர் ராஜாவாகவும், மூவர் பூர்ண பலமுள்ளவர்களானுல் மந்திரி அல்லது ஸேனுதிபதி யாகவும், இருவர் பூர்ண பலமுடையவராகில் மத்திம யோக முடையவராகவும், ஒருவர் மாத்திரம் பூர்ண பலமுடையவராகி லும் அற்ப யோகமுடையவராகவும், இந்த நால்வரும் பலஹீனர் களாகில் ஜாதகர் தரித்திர யோகமுடையவராகவும் ஆவார்.

(9) இவ்விஷயத்தில் உதாரணம் எழுதப்படுகிறது.

<table>
<tr><td></td><td></td><td></td><td></td></tr>
<tr><td></td><td colspan="2" rowspan="2">இராசிச் சக்கிரம்<br>(1)</td><td>சுக்</td></tr>
<tr><td></td><td>சூ<br>குரு</td></tr>
<tr><td>ல<br>அ<br>சந்</td><td></td><td>சனி</td><td>பு</td></tr>
</table>

<table>
<tr><td></td><td></td><td></td><td></td></tr>
<tr><td></td><td colspan="2" rowspan="2">நவாம்சச் சக்கிரம்<br>(2)</td><td>சுக்</td></tr>
<tr><td></td><td>குரு<br>சூ<br>ல</td></tr>
<tr><td>சந்</td><td></td><td>சனி</td><td></td></tr>
</table>

ஸிம்ஹ (ஆவணி) மாதத்தில் தனுர் லக்னத்தில் ஸிம்ஹ நவாம்சத்தில் உத்திராட முதல் பாதத்தில் ஒருவர் உண்டானூர். அக்கால லக்னத்தில் (தனுர் லக்னத்தில்) குஜசந்திரரிருவர். சிம்மத்தில் சிங்கநவாம்சத்தில் குரு சூரியரிருவர். கடகத்தில் கடக நவாம்சத்தில் சுக்ரன். கன்னியில் புதன். துலாத்தில் துலா நவாம்சத்தில் சனி. லக்னுதிபதி குரு, பாக்யாதிபதி சூரியனிருவருங்கூடி ஸிம்ஹத்தில் வர்க்கோத்தமாம்சத்தில் இருப்பதோடு ராஜ்ய லாபாதிபர்களான புதன், சுக்கிரன் இவர்கள் மத்தியிலுமிருக்கின்றனர்.

இங்கு லக்கினத்தைவிட சந்திரனுக்கே வர்க்கோத்தமம் என்கிற காரணத்தால் பலாதிக்யமிருப்பதால் ஜென்ம நக்ஷத்திரம் உத்திராடமாகும். அதன் அதிபதி சூரியன். லக்னுதிபதி குரு. நவாம்சாதிபதி ரவி. இந்த மூவருடைய வர்க்கோத்தமத்தினுல் இவர்களடைந்த ராசிபதிகளான குரு ரவிகளுக்கு முன் சொன்னபடி ஏற்பட்ட பலாதிக்யத்திலிருந்து நால்வருமே பல யோகமுடையவர்கள் ஆவதால் ஜாதகர் தீர்க்காயுளுடையவர், பிதாவின் வெகு ராஜ்யத்துக்கதிபர், வெகு ஐசுவரிய ஸம்பன்ன ராஜயோகத்தை யுடையவனுகிருர் என்று சொல்லப்படுகிறது.

(10) இவருடைய லக்னுதி துவாதச ராசிக்குரிய அந்தந்த பாவங்களைச் சொல்வது அவசியமானது. பாவங்களுடைய பலன்கள் அநேகமாகும். லக்னத்தால் மாத்திரம் அறியவேண்டிய பலன்கள் சொல்லப்படுகிறது.

(11) லக்னபாவம் :—சரீரம் வர்ணம் ஜாதி இது முதலிய லக்ஷணங்கள், குணுகுணங்கள், தேசாந்தரவாசம், சுகம் துக்கம், தான் இருக்குமிடம், பலம் பலமில்லாமை, யசஸ் வேறுபிறவி, சுபம், அசுபம், கொடி சுத்திக்கொள்ளும் யோகம், பாலாரிஷ்டம் முதலியவை சம்பவித்தல் ஆன இப்பலன்கள் யாவும் சந்திர லக்கினம் ஜன்ம லக்கினங்களிலிருந்து சொல்லவேண்டும் பண்டிதன். அந்தந்த பாவங்களைப்பற்றிச் சொல்லும் காலத்தில் அப்பாவ காரகனும், இவனுள்ள ராசிபதியும் பலவான்களாகில் அந்தந்த பாவபலன்களின் ஸமிருத்தியும், இவ்விருவருக்கும், மிச்ர (கலப்பு) பலமாகியதை அனுசரித்து பாவபலன் கலப்பாயிருக்குமென்றும், பலம் அதமமாகில் பலனில்லையென்றும் சொல்ல வேணும்.

(12) இவ்விஷயத்திலு முதாரணம் :—

| | | | |
|---|---|---|---|
| | ல | | |
| | | | |
| அ | | | |
| | | சனி | |

மேஷ லக்கினத்தில் மேஷ நவாம்சத்தில் ஒருவன் ஜனித்த போது, லக்கினாதிபதி குஜன் மகரத்திலும், இதனதிபதி சனி துலாத்தில் அல்லது கும்பத்திலும் இருந்தானேயாகில் ஜனித்த அவன் வெகு ராஜ்யங்களுக்கதிபனும் மிக்க கீர்த்திமானுமாகிறான். லக்னத்துக்கு குஜன் பார்வையிருப்பதால் சாதகன் குட்டை சரீரமுடையவன். லக்கினம் சனியின் பார்வையுடையதால் கொடி சற்றியதோடும் பிறப்பு என்று அறிக. இன்னும் இதர க்ரஹயோகமுமுண்டாகில் அவைகட் குறியதையுஞ் சேர்த்துச் சொல்லவேண்டும்.

(13) அதன் கிரமம் :—உதித்த லக்கினத்தின் நவாம்சத்திற்கு இருபக்கங்களிலும் சுபக்கிரகங்களிருந்திடில் விசேஷ யோகம் என்று சொல்லுதல் வேண்டும். அவர்களுக்கு ஆதிபத்யத்தினால் சுபத்வமுண்டாகில் சுபபலனும், இல்லையேல் அசுப பலமென்றும் அறியவும். இவைகளை மேல்வருமிடங்களில் சொல்லுகிறேன்.

(14) இரண்டாம் பாவம் :—முகம், கண், வார்த்தை, மூக்கு, பல்லின் வரிசையும், வரிசையற்றலும், குடும்ப வர்க்கச் சௌக்யங்களும், தானம், போஜன சௌக்யங்களும், இப்படியே வாக்கின் சாமர்த்தியமும், மரணமும், நாக்கும், யாசித்தலையும் பயத்தையும் இரண்டாம்பாவத்தைக் கொண்டு சொல்லவேண்டும்.

(15) மூன்றாம் பாவம் :—ஸஹோதரம், பயம், (சாகசம்) வீர்யம், தைரியம், ஸ்வரம், கர்ணாபரணம், வஸ்திரம், பழம் கிழங்கு இவைகளை யுட்கொள்வது பிதாவின் மிருத்யுவையும் பலத்தையும், மூன்றாம்பாவத்தால் சொல்லுக.

(16) நான்காம் பாவம் :—சுகம், வித்தை, வாகனம், ஹிருதயம், பூமி வீடு, முதலியவைகளும், தாய், பந்துக்களின் ஸ்நேகம், மித்ரமிவைகளை நாலாமிடத்தாலே சொல்லவேண்டும்.

(17) ஐந்தாம்பாவம் :—தேவதை, பிதாவிடத்தில் பக்தி, புத்திரன், புண்யம், புத்தி, ராஜா, பிரபுவாயிருத்தலும், சுற்றாசர் கார்ய விக்னத்தையும் ஐந்தாற் சொல்லவேண்டும்,

(18) ஆறாம்பாவம் :—அங்கஹீனம், சத்துருவாலுண்டாகும் பாதைகள், ரோகம், சைனியம், மனக்கிலேசம், காயபயம், துக்கங்களின் சேர்க்கை, மாமன் இவைகளை ஆறால் சொல்லுக.

(19) ஏழாம்பாவம் :—தேசாந்தர இருப்பு, யாத்திரை, பார்யை, போகம், கமநம் (செல்லல்) மரணம், ஜாதி, கலியாணம், குரோதம், இவைகளை ஏழினால் சொல்லவேண்டும்.

(20) எட்டாம்பாவம் :—ஆயுர்த்தாயம், தாரித்திரியம், முன் ஜன்மத்தில் ஏற்பட்ட சுபாசுபங்களும், கடன் ஏற்படுவதையும், விநாசத்தையும், பாபகார்யங்களையும், அபமிருத்யு உண்டாகுதலையும், விரோதமும், புண்யலோகாப் பிராப்தியையும் எட்டைக் கொண்டே சொல்லவேண்டும்.

(21) ஒன்பதாம்பாவம் :—தபஸ், தர்மம், அதர்மம், பிதாவின் பாக்யம், தகப்பன், குருவையடைவதையும், பெரிய ஆசிரயத்தையும், பெரிய பிடிப்பையும், இதர ஜன்மங்களிலுண்டான பலன்களையும், ஒன்பதால் சொல்லல் வேண்டும்.

(22) பத்தாம்பாவம் :—வியாபாரம், கீர்த்தி, வஸ்திரம், (ஆக்ஞை) ஏவுதல், தத்தம் ஜாதியாசாரமும், தத்தம் விருத்தி (ஜீவனுதி)களும், தீர்த்த யாத்திரை முதலியதும், புண்யங்களும், ஸாதுக்களிடத்தில் சேர்க்கையையும், பத்தாம்பாவத்தாலே சொல்லுதல் வேண்டும்.

(23) பதினோராம்பாவம், பன்னிரண்டாம்பாவம் :—மூத்தவன், லாபம், பணத்தின் வரவு, விலைப்பொருள்களின் பகுத்தறிவும் (வியாபாரம் செய்தேற்படும் திரவியலாபம்) இவைகளைப் பதினொரும்பாவத்தினுலே சொல்லுதல் வேண்டும்.

திருடர்களின் ஸம்பந்தமானவைகளையும், முக்தியை (மோக்ஷத்தை)யும், செலவு முதலியவைகளையும் பனிரண்டாம் பாவத்தைக் கொண்டு சொல்லல் வேண்டும்.

(24) பாவங்களைச் சிந்தனை செய்யும் விதி :—நூற்றுக்கும் மேலானதாக இந்த லக்னுதியில் நின்றும் ஏற்படும் பாவங்களை அறியவேண்டும். அந்தந்த பாவேசர்களும் அந்தந்த பாவகாரகர்களும் தங்கள் தங்களுக்குரியவைகளான உச்சராசிகளையும் மூலத்திரிகோண ராசிகளையும் சுபநக்ஷத்ரம் சுபராசி இவைகளுடைய மத்தியையும் அடைந்திருந்தால் தங்கள் தங்களுடைய பாவங்களை விருத்தியடையச் செய்கின்றனர். ஆறு எட்டு பனிரண்டாம் பாவங்களையடைந்தவரும், விபத் முதலிய மூன்று நக்ஷத்திரங்களையடைந்தவரும், பாபரின் மத்தியையடைந்தவரும் அஸ்தங்கதரும், தத்தம் நீசத்தையடைந்தவருமான கிரகங்கள் தங்கள் தங்களுக்குரிய பாவங்களை நாசம் செய்வார்கள். லக்னம் முதலிய பாவேசர்கள் அந்தந்த லக்னங்களுக்கு கேந்திர கோணங்களையடைந்தும்,

லக்னுதி ஆறு ராசிகளேயடைந்துமிருந்தால் பாவவிருத்தியையும் பாவ பலன்களைக் கொடுப்போரும் ஆகின்றனர். தத்தம் நீசத்தி லிருந்து உச்சத்தை யேறும் காலத்தையுடையதும், சுபக்கிரகங்க ளோடு கூடியவரும், வர்க்காதிகத்தோடு கூடியவரும், ஆறு ஏழு எட்டு அஷ்டகவர்க்க பிந்துக்களோடு கூடியவர்களும் தத்தம் பாவத்தைப் பார்ப்பவரும் ஆன கிரகங்கள் அந்தந்த பாவங்களே விருத்தி செய்கின்றனர். மேற்கூறியவாறு இல்லாதவர்கள் தத்தம் பாவத்துக்கு ஹானியை யுண்டுபண்ணுகின்றுர்கள். மேலும் அந்தந்த பாவங்களுக்கும் சுபர்களான கிரகங்களின் மத்தியிலிருப் பும், சுபக்கிரகங்களோடு சேர்க்கையும், சுபக்கிரகங்களின் பார் வையும் ஏற்பட்டிருக்குமாயின் அந்தந்த பாவங்களும் விருத்தியை யடைகின்றது. ஜனனமானவர்களுக்கு இவைகளுக்கு மாறுக இருந்திட்டால் அப்பாவங்கள் ஹானிக்கு உட்படுகின்றன. இப் படிப் பன்னிரண்டு பாவ ஸம்பந்தமாயுண்டாகிய பலங்களேயும், (பஞ்ச ஸித்தாந்தப்படிக்கு ஏற்பட்ட கிரக பலங்களேயும்,) கிரக ஸித்தாந்த பஞ்சகத்தையும் அறிந்தபின்பே ஜாதகனுக்கு பன் னிரண்டு பாவபலன்கள் சொல்லவேண்டும்.

(25) இப்படி பாவபலம் கிரக பாவங்கள் எவ்விதமிருந்தால் ஸம்பூர்ண பலமுடையதாகுமென்பதை முதலில் விவரித்து இரண் டாவதினுல் கிரகங்களுக்கு பஞ்சஸித்த ப்ரகாரத்தை (விதியை)ச் சொல்லுகிறுர். அதாவது பஞ்ச ஸித்தாந்தத்தில் சொல்லப்பட்ட கிரகங்களின் மந்தசீக்ர நீசோச்ச பாதகதி முதலியவைகளான கணிதத்தின் (கிரக ஸ்வபாவத்தின்) கரையைக் கண்டவனே பஞ்ச ஸித்தாந்தபாரகன் (பஞ்ச ஸித்தாந்தமறிந்த தன் தன்மைக் குரியவன்) என்ற உறையைச் சொல்லப்பட்டது.

(26) சிலரோ எனில் கணித சாஸ்திரப் பிரசித்தமான பிர்ஹ்மஸித்தாந்தாதி எட்டு ஸித்தாந்த கணித ஸம்ப்ரதாயம் (கிரகங்கணிக்கும் விவரங்கள்) அவசியம்தெரியவேண்டியது என்ற விடத்திலும் பஞ்சஸித்தாந்தமாவது தெரியவேண்டியது என்கின் றுர்கள். இதை தயா விஷயத்தினுல் வியவஹரிக்கிறுர்கள். அது சரியல்ல. ஹோரா பலங்களே விசாரிக்கும் காலத்தில் அவைகட்கு உபயோகமில்லை. அஷ்ட ஸித்தாந்தங்களே பஞ்ச ஸித்தாந்தங் களாக கொள்வது எப்படிப் பொருந்தும். ஆகையால் கிரகங்க ளுடைய பஞ்ச ஸித்தாந்த ஞானமில்லாமையில் பலத்தையும் நிர்ணயிப்பது (அஸம்பவம்) முடியாது என்பதால் "பஞ்சஸித் தாந்த பாரகஃ" என்பதை இங்கு விவரிக்கப்படுகின்றது.

(27) ஜன்ம லக்னுதிகளுக்குரியவைகளாகிய (ஸ்திதி) இருப்பு, சீலம், காரகத்வம், ஸ்வவர்க்கத்தையடைதல், ஆதிபத்தியம் என ஐந்துவித ஸித்தாந்தமாகப் பண்டிதர்களால் சொல்லப்பட்டது. இவைகளிலும் ஜன்ம லக்னுதிகளின் ஸ்திதியை முதல் ஸித்தாந்த

மாக இப்படியே கிரமமாக மற்றவைகட்கும் 2, 3, 4, 5 ஸித்தாந் தங்களாகத் தெரிந்தும் சொல்லவேண்டியது.

(28) நக்ஷத்ர ஸித்தாந்தம்:—ஜன்மம், ஸம்பத், விபத், க்ஷேமம், ப்ரத்யக், ஸாதகம், வதம், மைத்ரம், பரமமைத்ரம் என்று பெயருடையதாக மூன்று பரியாயமுண்டு. இந்த கிருத்திகையாதி மூன்று பரியாயங்களுக்கும் சூரியன் முதலிய ஒன்பது கிரகங் களும் முறையே திருப்பித் திருப்பி அதிபதிகள் ஆவார்கள். அயிட்டம் நெ. 8. யைப் பார்க்கவும்.

(29) ஸத்யாசாரியார்:—ஒரு கிரகத்திற்குத் தன் மூலத்திரிகோ ணத்திலிருந்து ஐந்து, பனிரண்டு, இரண்டு, நான்கு, எட்டு, ஒன்பது இக்கிரக உச்சராசி இந்த ஸ்தானங்கட்குடையவர்கள்தான் அந்த கிரகத்துக்கு மித்ரர்கள் ஆகின்றனர். மிகுந்த ராசிக்குடையவர்கள் அக்கிரகத்துக்கு மித்ரராகிறதில்லை. சவனுக்கு எவர்கள் மித்ரர்கள் ஆகிறார்களோ அவர்களுடைய நக்ஷத்திரங்களையும், ஆட்சி வீடு களையும் ஐந்து, நான்கு, எட்டு, பனிரண்டு, ஒன்பது உச்சவீடு கட்குடையோரையும் மித்திரர்களாக அவனுக்குச் சொல்லப்பட் டிருக்கின்றது. மேலே சொல்லப்பட்ட ஸ்தானங்களில் இரண்டு ஸ்தானங்களுக்குடையவர்கள் அவனுக்கு அதிமித்திரர்கள் ஆகின் றனர். ஒரே ஆதிபத்யமுடையவர்களை அவனுக்கு மத்யஸ்தராயும், ஆதிபத்தியமே அற்றிருப்பவர்களை சத்ருவாகவும் சொல்லப்பட் டிருக்கின்றது. இரண்டு, மூன்று நான்கு பத்து பதினொன்று, பன்னிரண்டு இவ்விடங்களில் இருக்கும் ஒருவர்க்கொருவர் தத்கால மித்திரர்கள் என்றும், கோசரத்தில் பலம் கொடுப்பவர்கள் என் றுஞ் சொல்லப்பட்டது.

(30) லக்னத்தைப் போலவே சந்திர லக்னத்தையும் இவ் விரண்டின் பல துர்ப்பலங்களையும் அறிந்து பலமுள்ள லக்னத் தினுல் துவாதச பாவபலத்தைச் சொல்லவேண்டும். இதற்கு மாருகச் செய்திட்டால் பலன் பொய்யாகிவிடும். சந்திரன் பலவா ஞகில் அவன் இருக்கக்கூடிய நக்ஷத்ரத்தையே ஜன்ம நக்ஷத்ரமாக சொல்லப்பட்டிருக்கின்றது. இங்கு சந்திர சாரத்தினுலே சென்ற நாடியையும், இங்கு சென்ற நக்ஷத்ர கடிகையின் சிரமத்திலிருந்து தசைப்பகுதி புத்திகளையும் நிச்சயித்தல் வேண்டும். லக்னம் பலிஷ்டமாகக் காணப்பட்டபோது பாதச்சாயை (தத்தம் காலடிச் சாயை) [ஸ்பஷ்டச்சாயை] யிலிருந்து சென்ற கடிகையை கணக் கிட்டு இதற்குச் சரிவந்த லக்னம் இருக்கின்ற நக்ஷத்திரத்தையே ஜன்ம நக்ஷத்திரமாகச் சொல்லவேண்டும் புத்திமானன பண்டி தன். இதிலிருந்து தசாபுத்தியையும் சொல்லக்கடவன்.

(31) மேற்சொன்னபடிக் கேற்பட்ட ஜன்ம நக்ஷத்திரத்தி லிருந்து ஏற்படும் ஜன்ம ஸம்பத் க்ஷேமதாரைகளும் ஸாதக மைத்ரதாரைகளும் மத்யமமான பலத்தையுடையதானல் மத்யம பலன்களையும், சூனியமான பலம் உடையதாகில் சூன்யமான பலன்களையுமுடையது என்று சொல்லவும். இருபக்கமும் மித்ரனை

உடைய சுபர்களாலும், உச்சத்தை ஏறுகின்றது என்கிற பலத்துடன் கூடினவர்களாலும், தத்தம் பாவத்தை பார்ப்பவர்களாலும், பார்க்கப்பட்டவனே அதிகம் சுபம் தருபவனுவான். ஜன்ம லக்னுதி ஆறு ராசிக்குள்ளிருப்பவன், பரம மித்ரம் வாய்ந்தவன் ஆன இவர்கள் சுபத்தைத் தருபவர்கள் என்று எண்ணப்பட்டது. விபத் பிரத்யக் வதம் ஆகிய இம்மூன்றும் குரூரமாகும். ஜன்ம லக்னுதிபனுக்கு மித்ரனையும், ஜன்ம லக்னுதி ஆறு இராசியில் சுபராசியை யடைந்தவனையும், எந்த பாவங்களடைந்திருக்குமோ எந்த பாபத்தில் சுபரிருக்கின்றனரோ இவர்களின்மூலம் சுபம் கொடுக்கப்படுவதாகின்றது. என்றால் :—

(32) லக்னுதிபனுக்கோ சந்திர லக்னுதிபனுக்கோ மித்திரனுனவனும், ஜன்மாதி ஷட்ராசிகளில் சுபரின் நக்ஷத்ரத்தையடைந்தவனுமான தசாநாதன் எந்த பாவத்தில் இருக்கின்றானே, இவனே இரண்டு, நாலு, ஐந்து, ஏழு, ஒன்பது, பத்து, பதினென்றுக்கும் உடையனுகில் அதன்மூலம் சுபபலத்தைக் கொடுப்பவனுக ஆகின்றான் என்று சொல்லப்பட்டது.

(33) இந்தமாதிரியே கோசாரத்திலும் பலத்தைக் கொடுக்கும் தசாநாதனே புத்திநாதனே இருக்கிற சுப நக்ஷத்ராதிபதியோ அல்லது சந்திரனே பலத்தையுடையவர்களாக இருக்கும்பக்ஷத்தில் அவர்கள் தம் தம் காலத்தில் தம் தம் சுபபலத்தைத் தருவார்கள். ஜன்ம லக்கினத்தின் ஆறை அடைந்தவனும், க்ரூரனும், யாதொரு பாவத்தில் பாப்பவர்களுடையமத்தியையடைந்தவனும், மிகுந்த கஷ்டத்தைக் கொடுக்கிறான். இரண்டு ப்ரகாரத்தாலேயும் (சுபாவமாயும் தத்காலாபேக்ஷையாயும்) சத்ருவாயும் குரூரனுயுமிருப்பவனும் ஆன இவர்களினுல் பார்க்கப்பட்டவனும் அத்யந்த கஷ்டத்தைத் தருகிறான். இப்படி நக்ஷத்ர ஸித்தாந்த பலத்தை யுக்தியினுல் அறிந்து கொள்ளவேண்டியது. ராசியில் உண்டான பலன்கள், விஸ்தார பயத்தினுல் சங்கிரகமாகச் சொல்லப்பட்டது. முகூர்த்தங்களிலும், பிரச்னைகளிலும், ஜனனங்களிலும் முறையே இவ்விதமே சுப அசுப பலன்களைச் சொல்லவேண்டியது.

## இரண்டாவது கிரகசீல சித்தாந்தம் :

ஹே குழந்தாய் ! இரண்டாவதான கிரகசிலமென்று சொல்லப்பட்ட ஸித்தாந்தத்தைக் கேள்.

(1) ரவிஸ்வரூபம் :—கருஞ்சிவப்பன், இளைத்தவன், குள்ளன், தேன்னிறக்கண்ணன், கொஞ்சக் தலைமயிருடையவன், பித்த தோஷமுடையவன், எலும்பில் பலமுள்ளவன், சூரன், மூர்க்கன், ஸ்திர சுபாவமுடையவன், அரசன், சதுரன் (ஸமர்த்தத்தன்மை வாய்ந்தவன்), நாலுகால் ஐந்து கட்குடையவன் கிழக்கு திக்குக்கு ஈசன், குரூரமான பார்வையை உடையவன், காட்டில் வசிப்பவன், ஸத்வகுணத்திலிருப்பவன், புல் சாப்பிடும் ஐந்து

பகலில் வலிவுள்ளவன். மேல்பார்வை யுடையவன், முப்பது வருஷமுடையவன், மத்யானத்தில் (நடுப்பகலில்) அதிகபலமுடையவன், பூர்வாயனத்தில் பலமுள்ளவன், தடி மனுன வஸ்திரமுடையவன், ஐந்து கிரணமுள்ளவன், சூரியகாந்தமணி, தாதுக்கள், கூரைவீடு, எட்டு யோஜனையுள்ளவன், ஈயம், பித்தளை, துத்தநாகம், வைடூர்யம், இவைகட்குடையவன், முள்ளுடைய மரம், தலை, மார்பு, மூக்கு, காது இவைகளிலணியும் பூஷணங்களுக்கும் உடையவன். எட்டுவயதான பெண்கள், குள்ளமான பழங்களைக் கொடுக்கும் விருக்ஷங்கள், வெள்ளைக்கொள்ளு சியாமாகம் (சாமை= கோதுமை) என்கிற ஒருவித தானியம், இஞ்சி முதலியவையும், காரத்தைப் பிரதானமாக உள்ள வஸ்துவும், கத்திரிக்காய், அவரைக்காய் இவைகளாகியமுதலியவைகளுக்கு உரியவனுகிறுன். ரவி லக்கினேசனும் அல்லது சந்திர லக்கினுதிபதியாயும் இருந்து பலஹீனனுனல் கோசாரத்திலும் அந்தந்த பாவங்களுக்கு சூரியன் நாசம் செய்வான்.

(2) சந்திரஸ்வரூபம் :—சபலன், பிரியமுள்ள வாக்கு உள்ளவன், எல்லாரிடமும் நேசம் உள்ளவன், சுபமான திருஷ்டியை உடையவன், மிருதுவானவன், சுப வெளுப்பானவன், வாதகபமுள்ள சரீரமுடையவன், வித்வான், தாதுகிரகம், சரசுபாவமுள்ளவன், ரத்தத்திலே பலமுள்ளவன், வைசிய ஜாதியில் உண்டானவன், ஸமன் வடிவான மண்டலமான சரீரமுடையவன், ஸாதுவானவன், ஸமமான (திருஷ்டி) பார்வையுடையவன், வாயு திக்குக்கதிபன், ஊர்ந்துபோகும் பிராணி உருவமுடையவன், பெண்களைப்போல ரூபமுடையவன், (ஸ்திரீ கிரகம்) சுக்ல பக்ஷத்தில் அதிகமான பலமுடையவன், இரவில் பலவான், ஒரு யோஜனை உடையவன், எழுவது வயதுடையவன், முகூர்த்தம் மாத்திரத்துக்கே அதிபதி, வலுவான வீட்டையுடையவன், சாந்தமான புத்தியை உடையவன், இருபத்தோறு கிரணமுடையவன், சங்குகள் முத்துக்கள் முதலியவைகட் குடையவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சந்திரகாந்தக்கல் வெண்கலம் தகரம், பித்தளை முதலிய தாதுக்களுக்கும் உடையவன், உப்புக் குடையவன், சங்கிலி, கயிறு, வெண்பட்டு, முத்துக்களுக்கும், நெற்றியின் ஆபரணம் சுட்டி சிறுவர் ஆபரணங்கட்கு முடையவன், பாலோடு கூடிய ஜலத்தில் உண்டாகும் வெள்ளை நிறமான மரங்கட்கும், அல்லிச்செடி புஷ்பங்கட்கும், வாழை, அரிசி, தண்டு, கோதுமையும் இவற்றுக்கும், வெள்ளரிக்காய் முதலிய காய்கரியும், ஜல ஜந்துக்கட்கும் சந்திரன் காரகனுகிறுன்.

(௩) குஜன்ஸ்வரூபம் :—சபலன், கொடியவன், பால்யமான ரூபமுடையவன், பித்தமான சரீரமுடையவன், மேற்பார்வையுடையவன், சதுரமாயுடைய தலைபாகத்தை யுடையவன், மிகுந்த மெல்லியதாகிய இடுப்பையுடையவன், கோபமுள்ளவன், ஹிம்சிப்பவன், கருஞ்சிவப்பன், ரஜோகுணத்தை யுடையவன், வனத்தில்

சஞ்சரிப்பவன், தாதுகிரகம் குரூரன், தெற்கு திக்கிற்குரியவன், நாலுகாலுள்ள ஜீவன் புருஷன், தாமஸன், (சுருக்கமடைந்த) மெல்லிய (வற்றலான) தேகமுடையவன், கிருஷ்ணபக்ஷத்தின் இரவில் வலிவுள்ளவன், மஜ்ஜை என்கிற கொழுப்பிலேயே வலு வுள்ளவன், எரியும் வீடுடையவன் (அல்லது உஷ்ண சரீரமுடை யவன்) மரவுரி வஸ்திரம் தரித்தவன், நாலு வயதுடையவன், குரூரப் பார்வையுடையவன், எழு யோசனைகளுடையவன், தாம் பரம், சங்கல் கபாலம், தாள் இவை முதலிய தாதுக்கள் ஸ்வர்ணத் தினுல் செய்யப்பட்ட அறை நூல் பவழத்தான ஆபரணம், மூல வஸ்துவாகில் சிவந்த தானியங்களுக்கும், முள்ளுள்ள மரங்கட்கு உரியவன் ஆகிறுன். ஜீவ வஸ்துவில் கொசு முதலியவுக்கும் மூட்டைப்பூச்சி முதலியவைக்கும், எறும்புகட்கும் உடையவன், மேலும் ஆடு, குரூர மிருகங்கள் இவைகட்கும் குஜன் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(4) புதன்ஸ்வரூபம் :—ஆண் பெண் இருவர் ஸ்வபாவம் அலி ஸ்வபாவமுடையவன், (மனுஷ்ய ஸ்திரீயின் ஸ்வபாவமுடை யவன்) சாந்தமான குணமுள்ளவன், சந்தோஷமடைந்தவன், தோளில் பலமுள்ளவன் ஆவான். பச்சையான காந்தியுள்ளவன், வைசியஜாதி, சரீரத்தில் வெளியில் ரோகமுள்ளவன், நரம்பு வெளி வந்தவன், (நரம்புச்சிலந்தி யுள்ளவன்) பாபரோடு கூடினுல் பாபி யாகிறுன், கிராம ஸம்பந்தமுள்ளவன், (நாகரிகமற்றவன்) ஜீவன் பக்ஷி ரஜஸ குணமுமுடையவன், புகைநிறமான வஸ்திரத்தைத் தரிப்பவன், கருங்கண்ணன், (கம்பளி தரிப்பவன்) கசப்பு ரஸ முள்ள போஜனத்தில் பிரியன், இருகால் ஜீவன், எப்போதும் பலவான், குறுக்கு பார்வையை உடையவன் வடக்குதிசைக்குஅதி பதியுமாவான், வெகு வேலைக்காரர் (சில்பிகளால்) செய்யப்பட்ட வீட்டிலிருப்பவன், ஆறு கிரணங்களையும், எட்டு யோஜனையும் உடையவன், இந்திர நீலமணி நல்ல மண்ணுலான பாலமணி (பாசிமணி) வளையல் முதலிய ஆபரணம், புஷ்பங்களால் செய்யப் பட்ட கழுத்திலணியும் மாலை நீலோத்பலம் முதலியவைகளையும், தாம்பூலம் முதலியது அவைகளின் கொடியையும், உள்ளே விதை களையுடைய பழங்களையும், கசப்பு பழவர்க்கங்களையும், ஊமத்தை முதலிய பழங்களையும் உடையவனுகிறுன். பச்சைப்பயர் கருமை வர்ணமான நெல், சங்கு முத்து முதலிய வகிப்போர்களையும், இரண்டு காலுடைய ஜந்துக்கள் வெகுகாலுடைய ஜந்துக்கள் இவைகளையும் புதரூபமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

(5) குருவின் ஸ்வரூபம் :—நீண்டு பெருத்த சரீரத்தையுடை யவனும், பொன் வர்ணமான கிரணமுடையவனும், கபத்தை யுடையவனும், பெருத்த தொடை, பெருத்த வயிர் இவற்றை யுடையவனும், பிராமணனும், தேன்நிறக் கண்ணனும், சுத்தமான வாக்கை உடையவனுமாவான், ஸாத்வீகனும், தீரமான கார்ய முடையவனும், கொஞ்சம் நீண்ட வட்டமுடையவனும், சுபனும்,

இருகாதுள்ளவனும், புருஷனும், மாம்ஸம் சாப்பிடுபவனும், வடகிழக்கு திக்குக்கு அதிபதியும், சுக்ல பக்ஷத்தில் பகலில் வீர்ய முள்ளவனும், முப்பதுக்குட்பட்ட வயதுகளை உடையவனும், (முப்பது வயது உடையவனும்) ஸமமான பார்வையுடையவனும், மிச்ர சாரமும், தடித்த வஸ்திரமும், பெருத்த காதும் உடையவனும், விசித்திரமான கட்டைகளால் செய்யப்பட்ட வீடு உடையவனும், ஒன்பது யோஜனைக்கு நாயகனும், ஸ்வர்ணம், பொன்வர்ண மணிகள், மண்மணிகள், (பாசிமணிகள்) ஜாதி புஷ்பம், ஆம்பல் புஷ்பம், சம்பக புஷ்பம், கரும்பு, தென்னை மரங்கள் பாக்கு முதலிய கனத்த தோலால் மூடப்பட்ட பழமுள்ள மரங்கள், மதுரமான பழவர்க்கங்கள் ஆன இவைகள் குருவின் ரூபங்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(6) சுக்ரஸ்வரூபம்:—வெளுத்த வர்ணம், மதுரமான பேச்சையுடைய வாக்கு, சிலேஷ்மவாத சரீரம், வக்கிரித்தபோது மிகுந்த வீர்யம் பலமுள்ளவனும், பிராமணன், க்ஷத்திரிய நடத்தையுடையவன், ராஜாக்களின் குணமுடையவனும், ஆக்னேய திக்குக் கதிபதி உயர்ந்த வடிவுள்ளவன், உயர்ந்த புருவம் ரப்பைகளுள்ளவனும், இருகால் உடையவனும் ஆகிறுன். பெண் ஸ்வரூபம், ஜலத்தில் சஞ்சரிப்பவன் பதினறு வயது, கடைக்கண் பார்வை இவைகளை யுடையவன், சுக்லபக்ஷத்தில் இராத்திரியில் பலவான், மிகு மெல்லியதான வஸ்திரமுடையவன், பிரசித்தன், பதினைந்து நாட்களுக்கதிபன், மிக்க சித்திரப்பாடமைந்த வீட்டில் வசிப்பவன், முத்து வெள்ளி இவைகட்கும் நாயகன், எட்டு யோஜனையுடையவன், தாதுமூல ஜீவன்கள் என்று சொல்லும் மூன்றில் மூலத்துக்குடையவன், மூலகிரகம் மிகுந்த அழகு, குண விசேஷங்கள் இவைகளுக்கு நாயகன், தாழை, மல்லிகை, ஜாதி, வஞ்சுலம் (நீர்வஞ்சு) முதலிய புஷ்ப வகைக்கும், ஜலவிருட்சங்களுக்கும், அதிகமான விதைகளடங்கிய மரங்கட்கும், மாமரங்களுக்கும் புளிப்பு மரங்கட்கும் இம்மரங்களின் ஸத்தான மெழுகு (பிசின்)களுக்கும், நல்ல விருத்தியையுடைய நவதானியப் பயிர் முதலியவைகளுக்கும், துவரைக்கும், சிகப்புச் செம்பா நெல்லுக்கும், வண்டு முதலியவைகளுக்கும் சுக்ரன் உடையவனுகச் சொல்லுகிறுர்கள்.

(7) சனி ஸ்வரூபம்:—கருமை வர்ணமுடையவன், நீண்ட சரீரமுடையவன், மாம்ஸமில்லாதவன், நரம்பில் வலிவுள்ளவன் அல்லது நரம்பு மட்டுமுள்ளவன் சதையிராதவன், தடித்த பல் நகம் இவையுள்ளவன், தடித்த மயிரையுமுடையவன், தாதுக் குரியவன், பொன் வர்ணமான கண்களையுடையவன், வஞ்சனை செய்பவன், தாமஸன், சுருங்கிய இளைத்த சரீரமடைந்தவன், கீழ் நோக்குங்கண்ணன், கிழவன், ஓட்டைவீடு, பாபத்தில் செலுத்தும் புத்தி, குரூரன், எட்டுயோஜனை இவைகளுக்குடையவன், தோல் மாத்திரமுடையவன், கருப்புக்கல், இருட்டு வஸ்திரம், காட்டில்

டுண்டாகும் புஷ்பங்களையுடையவனும், கசப்பைச் சாரமாக உடைய பழம் முதலியவைகளையுடையவனுமாகிறான். மூள்ளடர்ந்த மரங்கள். மேல் தோல் வலுவுள்ள பழங்கள், மூங்கில், பனை, வேம்பு முதலிய மரங்கள், எள்ளு, உளுந்து, வரகு முதலிய கருமை வர்ண தானியங்கள், துஷ்ட மிருகங்கள் ஆன இவைகளைச் சனியினால் அறியவேண்டுமென்று பண்டிதர்களால் எண்ணப்பட்டிருக்கின்றது.

(8) ராகு கேதுக்கள் :—சனிக்குச் சொல்லியபடி ராகுவுக்கும், குஜனுக்குச் சொல்லியபடி கேதுவுக்கும் ஸ்வரூபங்களைச் சொல்லப்பட்டிருக்கிறது. இம்மாதிரி சொல்லப்பட்ட ஸ்வரூபங்களை கிரகங்களுடைய பல நிச்சயத்திலிருந்து அறிந்து ப்ரச்னத்திலும் ஜாதகத்திலும் அந்தந்த லாபாதிகளைச் சொல்லவேண்டும்.

## மூன்ருவது காரக ஸித்தாந்தம் :

காரகமென்று சொல்லப்பட்ட மூன்ருவது ஸித்தாந்தத்தைக் கேள். ஹே ! குழந்தாய் !

(1) சூரியனுக்கு :—பிரதாபம், ஸ்ரீஸம்பத்து, பிதா (தன் சரீரம்), (ஆத்மா), (தான்) தைரியம், வீர்யம், சிரோரோகம், பெரும் ஜ்வரம், அக்னி மாந்தியம் (ஜீர்ணக்குறைவு), அதிஸாரம், கண் ரோகம், ராஜா தேவதை இவர்களின் ஹிம்ஸை, ஆன இவைகளுக்குச் சூரியன் காரகனுகிறான்.

(2) சந்திரன் :—ராஜப்ரஸாதம் (அரசனின் அருள்) தாயார் தன் மனஸ்' புத்தி முதலிய ஸம்பத்துக்கள், காமிலம் = (காமாலே) பாண்டு முதலிய ரோகங்கள், ஜலதோஷத்தாலும், பீநஸ தோஷத்தாலுமேற்படும் வியாதிகள், ஸ்திரீகளால் ஏற்படும் வியாதிகள் (இதனுலேயே) காலகதியடைவது, தேவகன்னிகை சாபங்கள் ஏற்படுவது, இவைகளுக்குச் சந்திரன் காரகனுகிறான், தன் பிரயத்தனத்தினுல் மற்ற காரகங்களையும் கற்பித்துக்கொள்க.

(3) குஜன் :—ஸத்வம், ரோகம், கூடப்பிறந்தவன், சத்துரு, பூமி, தன் பங்காளிகள், குணங்கள், சூரனுயிருத்தல், விக்ரமம், ஸைநியங்கள், பெரிய அண்டம் (விதை) நொண்டியாயிருத்தல், ஆயுதங்களால் காயம், அக்னியினுலுண்டாகும் பீடைகள், கிரந்தி என்னும் ரோகம், காயத்தாலுண்டாகும் பீடை, நாயிடமிருந்து பயம், (நாய்கடி முதலியது) வீரசைவர் முதலியவர்கள், சிவகணங்கள் இவர்களால் ஏற்படும் பீடைகள், காட்டிலுண்டான (கிடா முதலிய) கொம்புள்ள மிருகங்களினுல் பயம் ஆன இவைகளுக்குக் குஜன் காரகனுகிறான்.

(4) புதன் :—விவேகம், (எதையும் நன்ருய் யோசித்து உணர்தல்) பந்துக்களை அறிவது, பந்துக்கள் விக்ஞானம், வித்தை, மாதுலன் (அம்மான்) ஹிருதய குணங்கள், (நல்ல மனோபாவங்கள்) தெளிவான அறிவு ஸாதுவாயிருத்தல், மூலரோகம், உதர

வயிறு ரோகம், மலங்கழியுமிடத்தில் வரும் ரோகம், வாதபித்தம், அக்னி மந்தம், குஷ்டம் ஆன இவைகள், தேவர்கள் அல்லது விஷ்ணு பக்தர்கள் இவர்களா லேற்படும் சாபங்கள் ஆன இவைகட்கும் (எவ்விஷயங்களையும் அறிந்தவர்களுடைய சாபத்துக்கும்) காரகனுக புதனுகின்றுன்.

(5) குரு :—சரீரபுஷ்டி, புத்தி, பணம், (ஆஸ்தி) கம்பீர புத்தி அல்லது பெருந்தன்மை, யாகம் ஹோமம் செய்வது செய்து வைப்பது முதலியவைகளுக்கும், மாமாவின் பிள்ளை, தர்மமான கார்யங்கள், மந்திரியாயிருத்தல், அரசர்களின் ஸன்மானம், ஆசாரியன், தேவதை இவர்களிடத்தில் பக்தியோடு இருத்தல், (குரு, பிராமணர் இவர்கள் சம்பத்து) குரு, பிராமணன், ஸர்ப்பம், புத்திரன் இவர்களிடத்திலிருந்தும் சோகமும். சவுக்யமும் குரு, பிராமணன் இவர்கள் மூலமுண்டான சாபம், குல்ம சம்பந்த வியாதி, பெரிய வயிறு இவைகட்கு காரகனுக குரு ஆகிறுன்.

(6) சுக்ரன் :—ஆபரணம், வாஹநம், களத்திரம், காமத்தினுல் ஏற்படும் கஷ்டம், ஸம்போகஞ் செய்வது, ரத்நங்கள், பசுக்கள், வஸ்திரங்கள், பல்லக்கு, குடை, சாமரம், முத்தால் செய்யப்பட்ட மாலை, மோதிரம் முதலியது புஷ்பமாலை, சந்தனம், அவைகளின் குணம் இவை முதலியவும், நடனம் செய்தல், பாட்டு பாடல் முதலிய ஸம்பத்துக்கள், துஷ்ட ஸ்திரீயினுல் ஏற்படும் கஷ்டங்கள் முதலிய பெரிய ரோகங்கள்,மோஹம் முதலியவைகள் ஆகிய இவைகளைச் செய்கிறுன் சுக்ரன்.

(7) சனியன் :—ஆயுள், மிருத்யு, ஜீவனம், ஏவல், பெரியப்பன், சிற்றப்பனின் ஸம்பத்துக்களும் ஆபத்துக்களும், பொய் வார்த்தையில் தழதழப்பு-குளறல்-தத்தல், பயம், தரித்திரம், தண்டனை செய்யும் அதிகாரம், வரகு தானியம் சாப்பிடுதல், பாபம், பயிரிடுவதாலுல் ஜீவனம், மனக்கஷ்டம், பிசாசு, திருடனிவர்களால் பாதை, வாதரோகம் முதலிய வியாதி, பூட்டுக்களில் பிடிப்பு, சூலரோகம் இவைகளைச் செய்பவனுகச் சனியாகிறுன்.

(8) ராகு :—சிங்காசநத்திலேறிச் செய்யும் ஆதிபத்தியமுடைமை, வெள்ளைக்கொடை, பிதாமகன் (தகப்பனின் தகப்பன்) அபஸ்மாரம் (காக்கை வலி), வைசூரி (அம்மை), பூதகணங்களால் ஏற்படும் ரோகம், (ஏவல், சூனியம் முதலியது) புழு இவைகளைக் கொடுப்பவனுகிறுன், மேலே கட்டுப்படுவது, கயிற்றுல் கட்டுப்படுவது, தூக்குப்போடுவது, துருக்கன், நீசன், இவர் முதலியவர்களிடத்தில் சங்கமம், அன்னத்வேஷம், சர்த்தி (வாந்தி) ரோகம், விக்கல், க்ஷயம், குஷ்டம் முதலிய ரோகங்கள், விஷபீடை, ஸர்ப்ப பீடை ஆன இவைகளை ராகு செய்பவனுகிறுன்.

(9) கேது :—சொறி, சிரங்கு, வைஸூரி, அம்மை, சத்ருவினுல் பீடை, மாதா மகன், அபிசார காரியம், சூனியம் வைப்பது முதலிய கர்மரோகம், தாழ்ந்த ஜாதி, கருமத்தை விடுவது,

எலி பூனைகளின் பயம், (துருக்கர்) மிலேச்சர்களோடு சம்பாஷணை முதலியது இப்பாவங்களைக் கேது உண்டுபண்ணுபவனுகிறான்.

இப்படி காரக ஸித்தாந்தங்களையறிந்து பலத்தைச் சொல்ல வேண்டும்.

## நாலாவது வர்க்கோத்தம ஸித்தாந்தம் :

(1) என்னுல் சொல்லப்படும் நாலாவது ஸித்தாந்தத்தினுடைய பலத்தைக் கேள். 1. ராசி, 2. நவாம்சம், 3 திரேக்காணம், 4. தசாம்சம், 5. துவாதசாம்சம், 6. திரிம்சாம்சம், சூரிய சந்திரர்களுடைய ஹோரை என்று சொல்லப்பட்ட இவைகளில் கிரகங்கள் நிற்கும் பக்ஷத்தில் அது ஷட்வர்க்க பலத்தோடு கூடியதாகும். இவைகளில் 5-4-3 அல்லது இரண்டு சக்கரத்தில் (வர்க்கத்தில்) சுபகிரகம் இருந்தால் அப்போது அது உச்சத்திலிருந்தால் பூர்ண பலனும் திரிகோணத்திலிருந்தால் முக்கால் பலனும் தன் வீட்டிலிருந்தால் அரைப்பலனும் சிநேகிதன் வீட்டிலிருந்தால் கால்பலனும் சத்துரு வீட்டிலிருந்தால் குறைவான பலனும் நீசனுகிலும் சூரியனோடு சேர்ந்து அஸ்தங்கதனுனாலும் பலனே இராதென்றும் சொல்லலாம்.

(2.) 1. தீப்தன், 2. ஸ்வஸ்தன், 3. ப்ரமுதிதன், 4. சாந்தன், 5. தீனன், 6. அதிதுக்கிதன், 7. விகலன், 8. கலன், 9. கோபீ என்று கிரகங்கள் ஒன்பது விதமாகின்றன.

ஏ! குழந்தாய்! இப்படிப்பட்ட கிரகங்களின் பலனை முறையே சொல்லப்போகிறேன் கேள். உச்சத்தில் வர்கபலத்தோடு கூடி சுபகிரகமிருந்தால் ராஜயோக பலனைக் கொடுப்பான். தன் தசையில் ஜாதகன் விரும்பிய உயர்ந்த ஸம்பத்தையும் கொடுப்பான்.

மூலத்திரிகோணத்தில் வர்க்க பலமுள்ளவனிருந்தால் ஜாதகன் மந்திரியாகவிருத்தல், ஸேனுதிபதி, அரசனின் சிநேகம், அதிகப்புகழ் இவைகளைச் செய்கிறுன்.

ஸ்வ (தன்) க்ஷேத்திரத்தில் வர்கபலமுள்ள கிரகமிருந்தால் வாகனம் வஸ்திரம் இவைகளின்லாபத்தைச் செய்யும், பசு, நிலம், தனம் இவைகளையும் எப்பவும் ஸந்தோஷத்தையும் செய்கிறது.

மித்ர (ஸ்நேகித - நட்பு) கிரக வர்கபலத்தோடு கூடிய கிரகம் ஸம்பத்து, தேஜஸ், சுகம் முதலியது, தனலாபம், ஐசுவரியத்தின் ஸ்திரம், அரசனின் அன்பு இவைகளைச் செய்கிறது.

சத்துரு ராசியிலிருக்கும் வர்கபலமுள்ள கிரகம் பகைவரிடம் பயத்தையும் அரசனிடம் பயத்தையும் ஜெயிலில் அடைபடுவதும், ரோகம் முதலியதையும் தன் பாகத்தில் எப்பொழுதும் செய்கிறது.

நீசனுயிருந்து வர்கபலமுள்ள கிரகம் திருடபயம் எருதினிடமிருந்து பயம், மிலேச்சர் நீசர் இவர்களிடமிருந்து பயம் சரீர கஷ்டம் இவைகளைச் செய்கிறுன்.

சூரியனால் மறைவடைந்த கிரகம் ஒருபலனையும் தராது. உபத்திரவமும் செய்யாது. குறைவுகளையும் குரூரத்தையும் மனதின் சஞ்சலத்தையும் உண்டுபண்ணும். தசாபுத்திகளை யனுசரித்தும் சுபயோகம் சுபர்பார்வை முதலியதாலும் சுபர்பாபி இவர்களின் மத்தியஸ்திதியாலும் பலாபலன்களை யுக்தியைக்கொண்டு சொல்லவேண்டும்.

## ஆதிபத்திய சித்தாந்தம் :

(1) ஏ! குழந்தாய்! ஐந்தாவதான ஆதிபத்திய சித்தாந்தத்தைக் கேள். மேஷம், விருச்சிகம் இவைகட்கு செவ்வாயும், விருஷபம் துலாம் இவைகட்கு சுக்ரனும், மிதுனம் கன்னி இவைகட்கு புதனும், தனுசு மீனம் இவைகட்கு குருவும், மகரம் கும்பம் இவைகட்கு சனியும், கடகத்திற்கு சந்திரனும், சிம்மத்திற்கு சூரியனும், அதிபதியாவார்கள். ஒரு பாவத்திற்கே அதிபதியாகவும் அந்த பாவத்திற்கு காரகனாகவும் அதிலிருப்பதாகவும் ஓர் கிரகம் ஆகலாம்.

(2) பாவாதிபதி, லக்னத்திற்கும், லக்னாதிபதிக்கும், அந்த பாவத்திற்கும் 8 அல்லது 12-ல் இருந்தாலும், பாபிகளின் நடுவிலிருந்தாலும், அல்லது பாபர்களால் பார்க்கப்பட்டிருந்தாலும், சத்துரு வீட்டிலிருந்தாலும், நீச ராசியிலிருந்தாலும் மறைவடைந்திருந்தாலும், பாவாதிபதியிருக்கும் ராசியின் அதிபதி நீசராசியிலோ தன் சத்துரு வீட்டிலோ இருந்தாலும் அந்த பாவத்தின் பலன் ஒன்றுமிராது (சூன்யம் ஆகும்) கோசாரத்திலு மிவ்விதமே சொல்லவேண்டும்.

எந்த பாவாதி லக்னத்திற்கும் லக்னாதிபதிக்கும், தன் பாவத்திற்கும் கேந்திர ஸ்தானத்திலோ திரிகோணங்களிலோ இருந்தாலும் அல்லது உபசய (ஜெய) ஸ்தானத்திலிருந்தாலும் சுபர்களின் நடுவில் இருந்தாலும் அல்லது சுபர்களால் பார்க்கப்பட்டாலும், அந்த பாவாதிபதி இருக்கிற ராசியின் அதிபதி தன் இடம் அல்லது உச்சஸ்தானம் அல்லது மூலத்திரிகோணத்திலிருந்தாலும், அந்த பாவத்தின் பலன் பூரணமாக உண்டென்று ஜோதிடன் சொல்லலாம்.

(3) இவைகள் கலப்பாகவிருந்தால் பலனையும் கலப்பாக (அதாவது மத்யமமாக) அந்தந்த யுக்திகளைக் கொண்டு ஏற்படுத்த வேண்டியது.

(4) இப்படிக்கு பஞ்ச சித்தாந்தங்களை கிரகங்களின் பலத்தை நன்றாக நிர்ணயித்து தைரியமுள்ளவன் சொல்லலாம். அவன் பொய்யாகமாட்டான்.

ஊஹாபோஹபடு: என்பதை விவரிப்பதற்காக லக்னம் முதலிய துவாதச பாவபலன்கள் எழுதப்படுகின்றன.

## த்வாதச பாவ பலன்கள் :

## லக்ன பாவ பலன் :

(1) லக்னம் சரமாயிருக்க அம்சம் சுபவீடாகவிருக்க சர ராசியின் அதிபதிகள் கேந்திரத்திலோ திரிகோணத்திலோவிருந்து சுபவீடு சுபராசி சுபாம்சத்திலிருந்தால் பெரிய அரச குலத்தில் உதித்தவனாவான். பரவிய அதிக கீர்த்தியும் ஐசுவரியமுமுள்ளவனாவான்.

(2) லக்னாதிபதி கேந்திரத்திலோ திரிகோணத்திலோ விருந்து சுபராசி சுபாம்சம் சுபநக்ஷத்திரம் சுபாம்சம் இவற்றிலிருந்தால் தன் கையால் சம்பாதித்த புகழ் உடையவனும் அரசனுக்கு ரொம்ப வேண்டியவனுமாவான்.

(3) லக்னாதிபதி ஆறுவது வீட்டிலிருக்க சுபயோகம்பெற்று பலமுள்ளவனாக விருந்தால் சுபர்கள் நடுவிலிருந்தாலும் அவர்களால் பார்க்கப்பட்டாலும் ஸேனாபதியாவான் அல்லது வைத்யத்தில் வல்லவனாய் பெரிய வைத்யன் (முதல் டாக்டர்) ஆக ஆவான்.

(4) லக்னாதிபதி 5-ல் இருந்து சுபராசியிலோ சுபாம்சத்திலோ சுப நக்ஷத்திரத்திலோ விருந்தாலும் சுபர் நடுவிலிருந்தாலும் சுபர்களால் பார்க்கப்பட்டாலும் பிரபுக்களுக்கு ரொம்ப வேண்டியவனாகிறான். அல்லது பிரபுவுக்கு ஸ்வீகாரம் ஆகிறான். தானாகவாவது பிரபுவாகிறான். அல்லது அந்த சுபகிரகங்களின் தேவதைகளின் ஸாந்நித்யம் (சமீபம்) அல்லது சித்தியை அடைகிறான். (அதாவது அந்த தேவதையின் மந்திரஸித்தி யடைவான் என்பது.)

(5) இப்படி சுபயோகம் பெற்று லக்னாதிபதி 4-ல் பலத்தோடு கூடியிருந்தால் வெகுநிலங்கள் சம்பாதித்து தனவானாகி சுகமுள்ளவனாய் தாயின் பொருள் சேர்ந்தவனாய் அநேகம் வாகனங்களோடு கூடியவனாய் புகழ் உடையவனாய் ஆகிறான், நிச்சயம்.

(6) லக்னாதிபதி 3-ல் (பலவானாகி) சுபயோகமடைந்தவனாயிருப்பின் சகோதர மூலமாய் பிரஸித்தியடைவான். ஸங்கீத (பாட்டு) வித்தையில் பிரசித்தனாவான். கணக்கினால் (ஜோசியம்) பிரசித்திபெறுவான்.

(7) இப்படி லக்னாதிபதி 2-ம் பாவத்தில் (வீட்டில்) சுபயோகம் பெற்றிருந்தால் குடும்பத்தைக் காப்பாற்றத் திறமையுடையவனாகவும் பணமுள்ளவனாயும் சுகத்தையனுபவிக்க விருப்பமுடையவனாகவும் விசாலமான கண்களையுடையவனாகவும் இருப்பான்.

(8) லக்னாதிபதி சுபயோகம் பெற்று லக்ன கேந்திரத்திலிருந்தால் சூரனாயும் லக்னாதிபதிக்குச் சொல்லப்பட்ட சுபாவமுடையவனாகவும் எல்லாருமறிந்த புகழ் உடையவனாகவும் சிறந்தவனாயும் தன் ஜாதி குலங்களில் சிறந்தவனாகவும் இருப்பான்.

(9) 12-ல் லக்னாதிபதி (சுபயோகம் அடைந்து) பலவானுகி யிருந்தால் தகப்பனுர் சம்பாதித்த சொத்துக்களை நல்வழியில் செலவிடுவான். எப்பவும் தர்மத்தில் புத்தியுடையவனுகவும் சாந்தமாயும் பரலோகங்களிலுள்ள பலனில் ஆசையுடையவனுகவும் தன் காலம்வரை சுகமாய் ஜீவிப்பவனுகவும் நாளடைவில் குறைந்த சம்பத்தை யுடையவனுமாவான்.

(10) இலக்னாதிபதி 11-ல் சுபயோகமடைந்து இருந்தால் எப்பொழுதும் (எல்லா) லாபங்களோடு கூடியவனுவான். தமையன் மூலமாய் பிரசித்தியுண்டாகும். லாப ஸ்தானுதிபதிக்குச்சொல்லப் பட்ட வஸ்து முதலியதின் லாபமுடையவனுவான்.

(11) 10-ல் லக்னாதிபதி சுபயோகமடைந்திருப்பின் ரொம்ப பிரவிலித்தனும் தன் சொத்து (ராஜ்ய) முடையவனுகவும் அந்த பத்தாம் பாவாதிபதிக்கு சொல்லப்பட்ட விருத்தி (ஜீவனம்) உடையவனுக விருப்பான்.

(12) 9-ல் லக்னாதிபதி சுபயோகம் அடைந்திருந்தால் தகப்பனுரின் பாக்யமுடையவன், தகப்பன் பிரவிலித்தனுவான், தர்ம காரியங்களைச் செய்வான். எப்பவும் குருபக்தி தைவபக்தியுள்ளவனுவான்.

(13) 8-ல் லக்னாதிபதி சுபயோகமடைந்திருந்தால் தீர்க்காயுசு. ஏழை. பிறருக்கு உபகாரம் செய்வான் எல்லாருக்கும் பிரியமான வார்த்தை சொல்வான். அநாயாஸ மரணம் உண்டு. தன் கர்மங்களைச் செய்வதில் சிரத்தையுடையவன்.

(14) 7-ல் லக்னாதிபதி சுபயோக மடைந்திருந்தால் எப்பொழுதும்தேசாந்தரத்தில் (ஸஞ்சாரத்தில்) இருப்பான். தன் மாமனுர் வீட்டிலாவதிருப்பான். எப்பொழுதும் ஸ்த்ரீ லோலனு யிருப்பான். அநேக ஸ்த்ரீ போகமுள்ளவனுகவும், மாலை சந்தன மிவைகளின் சுகமுள்ளவனுகவு மிருப்பான்

(15) (இப்படியே) பாபராசியிலும் பாபாம்சத்திலும் ஜன்மம் முதல் 3-5 நக்ஷத்ரங்களிலும் பாபர்களின் நடுவிலும் ஜன்ம காலத்தில் லக்னாதிபதியிலிருந்து பாபர்களால் பார்க்கப்பட்டாலும் முன் சொன்ன பலனெல்லாம் விபரீதமாய் (சொன்னதிற்கு எதிராக) நேரிடும்.

(16) சுபயோகம் கொஞ்சமும் பாபயோகம் கொஞ்சமுமிருந்தால் சுபமும் அசுபமும் கலப்பாயிருக்கும். லக்னாதிபதி பலவானுனுலும் அவனிருக்கும் ஸ்தானத்தின் அதிபதி பலமிராவிடில் மத்திமபலன்.

(17) லக்னாதிபதி, அவனிருந்த ஸ்தானுதிபதி இருவர்களும் பலஹீனர்களாகில் பலம் விபரீதமாய் (சுபத்திற்கு எதிராக) நேரும் என்று சொல்லவும். இப்படிப் பார்த்து சொல்லாவிட்டால் சொல்வது பொய்யாகிவிடும்.

(18) லக்னத்திலும் சந்திர லக்னத்திலும் (அம்சத்திலும் ராசியிலும்) லக்னாதிபதி சுபர்களால் பார்க்கப்பட்டாலும் சுபர்கள் மத்தியிலிருந்தாலும் அந்த லக்னபதி பலவானாயிருந்தால் முந்தி சொன்னபடி சுபபலன்கள் சொல்லவேண்டியது. கலப்பாகவிருந்தால் பலனையும் கலந்தாப்போல் சொல்லவேண்டியது. பாபயோகமிருந்தால் வேறு (விபரீத) பலனைச் சொல்லவேண்டியது.

(19) லக்னம் எந்த பாவாதிபதிகளின் நடுவில் இருக்கிறதோ அல்லது எந்த பாவாதிபதிகளால் பார்க்கப்பட்டிருக்கிறதோ அந்த கிரகங்களின் (பாவாதிபதிகளின்) பலனையும் பார்த்து ஜாதகனுக்கு சொல்லவேணும். வேறு சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட பலனையும் இங்கு சேர்த்துக்கொள்ளவேணும்.

இப்படி லக்னபாவம் முற்றிற்று.

---

## (2) தன பாவ பலன் :

(1) இரண்டாம் பாவாதிபதி சுபநக்ஷத்திரத்திலுடையவோ சுபராசியிலுடையவோ சுபாம்சத்திலுடையவோ பலத்தோடு கூடியிருந்து சுபர்மத்தியிலிருந்தாலும் சுபரால் பார்க்கப்பட்டாலும், தனாதிபதி தன் ராசியிலோ உச்சராசியிலோ த்ரிகோணத்திலோவிருந்தாலும், லக்னாதிபதி (அல்லது அந்த) தனபாவம் இவைகள் கேந்திரத் திரிகோணத்திலிருந்தாலும் அந்தந்த யோககாரகனால் தனம் உண்டாகும். அல்லது பார்க்கும் கிரகங்களைக் கொண்டும் அதன்படி தனம் வரும் தனாதிபதியிருக்கும் ராசியதிபதியைக் கொண்டு தனலாபத்தைச் சொல்லவும்.

(2) தனாதிபதி பாபராசியிலிருந்து பாபர்களின் மத்தியிலோ பாபர்களால் பார்க்கப்பட்டோவிருந்து அந்த தனாதிபதியிருக்கும் ராசியின் அதிபதி பலமிராமலிருந்தால் அந்தந்த பாவம் (குடும்பம் முதலிய) மூலமாய் பணம் செலவாகும். சாப்பாடு சௌக்யமிராது. வரகு சோறு முதலியதைச் சாப்பிடுவான். அல்லது சவுண்டி (ப்ரேத சாப்பாடு) சாப்பிடுவான். இவைகளால் தனலாபமுண்டு. குடும்ப பீடையும் தேகபீடையும் கண், பல் இவைகளின் வியாதியுமுண்டாகும்.

(3) சுபயோகமிருந்தால் சுபபலன், சுபா அசுபயோகமிரண்டுமிருந்தால் கலப்பான பலன், பாபயோகமிருந்தால் அசுபபலன் என்று சொல்லவும். இனி இதின் சாரத்தின் பலன் சொல்லப்படுகிறது.

(4) தனாதிபதி ஆரும் வீட்டிலிருந்து சுபயோகமடைந்திருந்தால் சத்துருவின் வழியாகவும் வைத்யத்தின் மூலமாயும், திருட்டு மூலமாயும் வியாஜ்யத்தின் வழியாகவும் பந்தய விளையாட்டிகளின் வழியாகவும் பணம் கிடைக்கும். தனாதிபதியிருக்கும் ஆறும்

பாவாதிபதி எதற்கு காரகனோ அதன் மூலமாய் பணமகப்படும். பந்து (பங்காளி) மூலமாயும் தனமகப்படும். அந்த தனாதிபதி ஆறும் ராசியில் பாபயோகம் பெற்றிருந்தால் கீழ் சொன்னதிற்கு விபரீதமான (அசுப) பலன்.

(5) தனாதிபதி 5-ல் சுபயோகத்தோடிருந்தால் பிரபுக்களாலோ பிள்ளையினாலோ தைவங்களாலோ (அதாவது கோவில் முதலியதில் எதாவது வேலைபார்ப்பதால்) தனங் கிடைக்கும். 5-ல் பாபயோகம் பெற்றிருந்தால் அந்த (பாபயோகத்திற் கனு குணமான) வழியால் பணச்செலவு.

(6) 4-ல் தனபாவாதிபதி சுபயோகமடைந்திருந்தால் பூமியின் வழியாகவோ படிப்பின் வழியாகவோ ஜனங்களைக் கவரும் (வசப்படுத்தும்) வழியாலோ வாகனங்கள் செய்வதாலோ, கிருஷியாலோ தனம் வரும். 4-ல் பாபயோகம் பெற்றிருந்தால் அந்த (பாபர் பார்வை முதலியதிற்குத் தகுந்த) அந்த வழியால் பணம் செலவாகும்.

(7) 3-ல் சுபயோகம்பெற்று தனாதிபதி யிருப்பின் சகோதரர் மூலமாயும் பாட்டு கூத்து வாத்தியம் முதலிய வித்தைகளாலும் ஜாமீன் (தரகு) முதலியதாலும் தனம் வரும். பாபயோகம் பெற்றால் மேல்சொன்ன வழியாய் பணம் செலவாகும்.

(8) லக்னத்தில் தனாதிபதி சுபயோகமடைந்திருந்தால் தன் கையினால் சம்பாதித்த பணமுடையவனாவான். அல்லது தகப்பனார் சொத்து உடையவனாவான். அப்போது லக்னாதிபதி பித்ரு ராசியிலிருந்தால் (பெரியோர்) தகப்பனார் மூலம் பணம் வரும். தனலக்னாதிபதிகட்கு பாபயோகமிருந்தால் பணம் செலவாகிவிடும்.

(9) 12-ல் தனாதிபதி சுபயோகம் அடைந்திருந்தால் வைதீகத்தாலும் தனம் வரும். 12-ல் பாபயோக மிருப்பின் அந்தந்த வழியால் தனம் செலவாகும்.

(10) 11-ல் சுபயோகம் பெற்றிருப்பின் வட்டி வாங்குவதாலும் வஸ்துக்களை விற்பதாலும் பணம் வரும், மூத்த சகோதரனின் பணம் வரும் (அவன் மூலமாகவாவது வரும்) பாபயோக மிருந்தால் பணச்செலவு.

(11) 10-ல் தனாதிபதி சுபயோகமுள்ளவனானால் வியாபாரத்தினால் ஜீவனம் செய்வதாலாவது, வைதீக யாகாதிகளைச் செய்து வைப்பதாலாவது (புரோகிதம் செய்வது) பயிர் மூலமாவது, சேவகத் தொழிலாலாவது பணம் வரும். எந்த கிரகம் யோக காரகமோ அதன் தொழிலினாலாவது பணம் வரும்.

(12) 9-ல் சுபயோகமடைந்திருந்தால் அந்த 9-ம் வீட்டிற்கு அதிபதி லக்னத்திலிருந்தால் பித்ரார்ஜிதப் பணம் வரும். பெரியவர் (குரு) மூலமாய் தனம் வரும், தனாதிபதி இருக்கும் ராசியாதி

பதி எந்தந்த பாவத்தில் பலம் பெற்றிருக்கிறரோ அதின் வழியாகவோ அந்த கிரகம் சம்பந்தப்பட்ட கிரகங்களினாலாவது தனம் கிடைக்கும்.

(13) 8-ல் இந்த சுபயோகமிருந்தால் பணத்தைச் சம்பாதித்து அழித்துவிடுவான். யோக காரகனைக்கொண்டோ அதின் அதிபதியைக் கொண்டோ கொஞ்சம் பணம் உண்டென்று சொல்லவேண்டியது. பாபயோகம் இருந்தால் குறைந்தபலன் கலப்பாயிருந்தால் பலனும் (சுபா அசுபங்கள்) கலந்தாப்போலிருக்கும்.

(14) 7-ல் தனாதிபதி சுபயோகமடைந்திருப்பின் தேசாந்தரத்திலிருந்து பணம் வரும். தனாதிபதி யிருக்கும் ராசியாதிபதி அல்லது அம்சாதிபதி அல்லது நக்ஷத்திராதிபதி பெண் கிரகமாயின் ஸ்த்ரீ மூலமாக தனம் வரும். 7-ல் பாபயோகமிருந்தால் ஸ்த்ரீ மூலமாய் தனம் செலவாகிவிடும்.

(15) 7-ல் தனாதிபதிசுபயோகமடைந்தும் அசுபர்களான சனி செவ்வாய் நடுவிலிருந்து சுக்ரன் தன் க்ஷேத்திரத்திலிராவிடில் அவன் மனைவி கெட்ட நடத்தையாவாள். அதன் வழியாக தனம் உண்டு. சமாசாரம் தெரிவித்தல் (தூது செல்லல்) காகிதம் எடுத்துப்போவது மூலமான ஜீவனத்தால் தனம் வரும்.

(16) இப்படி பஞ்ச சித்தாந்தத்தை நன்றாக ஆராய்ந்து அந்தந்த காரகர் மூலத்தால் அந்தந்த பலனை யுக்தியினால் விசாரித்து ஜோதிடர் தனத்தின் காரணத்தைச் சொல்லவேண்டும். விஸ்தரித்தால் அதிகமாகுமென்று நினைத்து இங்கு தனம் வருகிற வழி சுருக்கமாய் சொல்லப்பட்டது.

(17) 4-அல்லது 11-ல் சுபயோகமிருந்து கீழ்பார்வையின் பலமுள்ள கிரகம் தனயோக காரகனாக விருப்பின் புதையல் (லாபம்) உண்டு. பாபயோகமிருந்தால் தனம் விரயமாகிவிடும்.

இப்படி தனபாவம் முற்றிற்று.

---

## மூன்றும் பாவ பலன் :

(1) சகோதர ஸ்தானாதிபதி சுபநக்ஷத்திரம், சுபாம்சம், சுபராசி, அல்லது சுபர் நடுவு சுபர்பார்வை இதிலிருந்தாலும் அவனிருக்கும் ஸ்தானாதிபதியும் காரகனும் பலவான்களாயிருந்தால் விலையுயர்ந்த காதின் ஆபரணங்கள் நல்ல வீரியம் தைரியம் பராக்ரமம் இவைகள் உள்ளவனாவான். சகோதரர்கள் தீர்க்காயுள் உள்ளவர்களாயும் பிரசித்தர்களாயு மிருப்பார்கள்.

(2) சகோதர ஸ்தானாதிபதி லக்னாதிபதிக்கு மித்ரனாகி யிருந்து லக்னத்திற்கோ லக்னாதிபதிக்கோ த்ரிகோணங்களிலிருந் தால் சகோதரர் ஒருவர்க்கொருவர் பாகம் பிரிக்காமல் ஒரே வீட்டிலிருப்பார்கள்.

(3) சகோதராதிபதி லக்னத்திற்கு உபஜய ஸ்தானத்தில் பலமுடையவனாகி யிருந்தால் சகோதரர்கள் அநேகம்பேர் இருப் பார்கள்.

(4) ஸ்த்ரீ ராசி, ஸ்த்ரீ அம்சம் அல்லது ஸ்த்ரீ நக்ஷத்திரம் இதில் சகோதர ஸ்தானாதிபதி இருந்தால் அநேகம் சகோதரிகள் என்றும் புருஷ ராசி, அம்சம், நக்ஷத்திரம் இவைகளில் இருந்தால் புருஷர்கள் அநேகர் என்றும் இரட்டை (உபய) ராசியிலிருந்தால் இரட்டைக் குழந்தையான சகோதரர்கள் என்றும் சொல்லவும். ராசியில் அம்சம் எவ்வளவு இருக்கிறதோ அந்த கணக்கில் சகோ தரர்கள் உண்டாவார்கள்.

(5) சகோதர ஸ்தானாதிபதி பாபநக்ஷத்திரம், பாபராசி, பாபாம்சம் அல்லது பாபர்கள் நடுவு, இதில் இருந்து பாபரால் பார்க்கப்பட்டு, அவனிருக்கும் ஸ்தானாதிபதி சத்ருவாகியிருந்து சகோதர காரகனும் பலமில்லாமலிருக்க அவனுக்குப்பின் சகோ தரனில்லை. அப்படியிருந்தாலும் அவன் எப்பவும் கலகம் செய் வான். (அதாவது ஜாதகனோடு ஒத்திருக்கமாட்டான்.)

(6) 3-ம் பாவாதிபதி ஸ்த்ரீ ராசி கிரகயோகமுடையவனா யிருந்தால் அந்த ஸகோதரி ஒதுக்கப்பட்டவளாகவோ விபசாரி யாகவோ இருப்பாள். ஜாதகனாவது செவிடாகவோ காதில் எதா வது குறைவு உடையவனாகவோ இருப்பான்.

(7) மூன்றும்பாவத்திற்கு 6, 8, 12-களில் பாபர்களிருந்து அந்த ஸ்தானாதிபதி மூன்றும் பாவத்தின் சம்பந்தமுடையவனாகில் அந்த தசையில் (மூன்றும் பாவாதிபதி தசை) சகோதர மரணம் உண்டாகும். மூன்றும் பாவாதிபதி பாபஸ்தானத்தின் ஆதிபத்யம் பெற்றிருந்தால் அவன் மூன்றும் பாவத்திற்கு மிருத்யுவைத் தரு வான். சகோதர காரகன் சகோதர ஸ்தானாதிபதி இவர்களிருக்கிற நக்ஷத்ரம் அம்சம் ராசி இவைகளின் அதிபதியிருந்த விடத்திற்கு த்ரிகோணத்தில் கோட்சாரத்தில் சனி இருந்தால் புத்திமான் அந்த பாவத்திற்கு நாசத்தைச் சொல்லலாம்.

(8) கோட்சாரத்தில் குரு, அந்தந்த பாவ காரகனிருக்கும் ராசி, அம்சம், நக்ஷத்திரம் இவைகளின் அதிபதிக்குத் திரிகோணத் தில் வந்தால் அந்தந்த பாவத்திற்கு சுபத்தைச் சொல்லவேணும்.

(9) அங்காரகன் 3-ம் பாவாதிபதியாகி அந்த ஸ்தானத்தி லிருந்தால் பிறகு சகோதரநாசம் உண்டாகும். அங்கு சனி இருப்பின் ஒன்று இரண்டுவிட்டு சகோதரன் [illegible]மடைவான்.

சூரியனிப்படியிருந்தால் மூத்த சகோதரனைக் கொல்வான். மற்ற கிரகங்கள் தம் தம் ஆதிபத்யத்தின் பலத்திற்குத் தக்கவாறு செய்வார்கள். ராகு மூன்றும் பாவத்திலிருந்தால் சகோதரர் விருத்தியாவார்கள்.

(10) மூன்றும் பாவாதிபதி சுபயோகங்கூடி 6-ல் இருக்க சகோதரன் சேனாதிபதியாயிருப்பான் அல்லது வைத்யனாகவிருப்பான். தனம் கீர்த்தி இவைகள் பெறுவான். (இப்படியிருக்க) 6-க்கு அதிபதி மூன்றும் பாவத்தின் சம்பந்தம் பெற்றிருந்தால் தேகப்பயிற்சியில் (ட்ரில்) சமர்த்தனாயிருப்பான். பாபயோக மிருந்தால் ரோகியாகவோ, திருடனாகவோ, சத்ருவினால் உபத்ர விக்கப்பட்டவனாகவோ இருப்பான். மிச்ரயோகமாகில் பலன் கலப்பாக விருக்கும், பாபயோகமாகில் பலன் விபரீதமாயிருக்கும்.

(11) மூன்றும் பாவாதிபதி சுபயோகம்பெற்று 5-ல் இருந்தால் அநேகம் சகோதரர்கள் உண்டு. சகோதரன் பிரபுவையோ தைவத்தையோ அடைந்து ஜீவிப்பான். தானாவது பிரபுவாவான், ஸ்வீகாரமாவது அடைவான் நிச்சயம். மிச்ரயோகத்தில் மிச்ர பலனும் பாபயோகத்தில் விபரீதபலனையும் அறிக.

(12) சகோதராதிபதி சுபயோகத்தோடு 4-ல் இருக்க 9-க்கு உடையவன் பலவீனமாகில் பிறகு சகோதரனில்லை. 9-க்கு அதிபதி பலமுள்ளவனானால் மாற்றும்தாய் வயிற்றில் சகோதரனுண்டு.

(13) 3-ம் பாவாதிபதி 4-ல் இருக்க 4-ம் பாவாதிபதி பலவீனமாகி குஜனும் பலமிராமலிருந்தால் தன் பூமி அழியும். எப்பவும் பிறர் வீட்டிலேயே வசிப்பான்.

(14) இப்படியே 4-ம் பாவாதிபதி பலவீனமாயிருந்து குறைகளைச் செய்பதனாயிருக்க 4-ம் பாவத்தில் மூன்றும் பாவாதிபதி இருந்தால் அந்த 4-ம் பாவத்தின் பலன்களை நாசம் செய்வான். சுபாதிபத்யம் அல்லது சுபயோகமிருந்தால் பலன் மிச்ரமாயிருக்கும். எந்த எந்த பாவத்தின் 12-க்கு உடையவர்கள் மூன்றிலிருக்கிறார்களோ அந்தந்த பாவங்கள் நாசத்தை அவர்கள் செய்வார்கள்.

(15) 3-ம் பாவாதிபதி சுபயோகம் பெற்று 2-ம் பாவத்தில் இருந்தால் அவனுக்குப்பின் சகோதரன் கிடையாது. அப்படி ஜனித்து ஜீவித்திருந்தால் பணக்காரனாகவும் இந்த ஜாதகத்தினால் ரக்ஷிக்கப்படுவனாயு மிருப்பான். பாபயோகமடைந்திருந்தால் குடும்பங்களுக்கு எப்பொழுதும் கலகம் செய்பவனா யிருப்பான்.

(16) 3-ம் பாவாதிபதி சுபயோகமடைந்து லக்னத்திலிருந்தால் பாட்டு கூத்து இவைகளில் வல்லவனாயிருப்பான். பெண் வேஷம் பூண்டவனாய் பிரசித்திபெறுவான். பாபயோகம் பெற்றிருந்தால் எல்லாராலும் நிந்திக்கப்படுவான்.

(17) 12-ல் சகோதராதிபதி சுபயோகமடைந்திருப்பின் பிறகு சகோதரர் கிடையாது. அல்லது பணமில்லாமல் கொஞ்ச காலம் இருப்பான். பாபயோகமிருந்தால் பலன் விபரீதம்.

(18) 3-ம் பாவாதிபதி சுபயோகம்பெற்று 11-ல் இருந்தால் சகோதரர்கள் வெகுபேர்கள். சகோதரர் மூலமாய் தனம் ஜாதகனுக்கு நிச்சயமாய் உண்டு. பாபயோகமிருந்தால் சகோதரர்க்கு ஹானி உண்டு. கலப்பாயிருந்தால் பலனும் கலப்பு.

(19) 3-ம் பாவாதிபதி 10-ல் சுபயோகமடைந்திருந்தால் சகோதரர்கள் பிரசித்திபெற்று இருப்பார்கள். ஜாதகனுக்கு என்ன வியாபாரமோ அதில் சகோதரர்கள் காரியம் பார்ப்பார்கள். சகாயம் செய்து ஒத்துழைப்பார்கள். சுபயோகம் பாபயோகமும் கலந்திருந்தால் பலனும் கலந்திருக்கும்.

(20) 3-ம் பாவாதிபதி 9-ல் சுபயோகம் பெற்றிருந்தால் சகோதரன் தகப்பனரின் பாக்யத்தைப் பெறுவான். தகப்பனுருக்குச் சிநேகிதன். 9-க்கு உடையவன் லக்னத்தில் இருந்தால் தகப்பனர் (சகோதர) பாக்யமுள்ளவன்.

(21) பாபயோகமிருந்தால் சகோதரன் மூலமாய் பிதுரார்ஜித சொத்தை நாசம் செய்வான். அல்லது தகப்பனருக்கு விரோதியாயிருப்பான். சகோதரனும் தர்மங்களை அழிப்பான். யோகம் கலந்திருந்தால் பலனும் கலந்திருக்கும். எல்லாவற்றையும் ஊகித்துச் சொல்லவும்.

(22) 3-ம் பாவாதிபதி 8-ல் சுபயோகமடைந்திருந்தால் பிறகு சகோதர நாசம் உண்டாகும். பாபயோகமிருந்தால் தரித்திரனயிருப்பான். அல்லது அதிகச் செலவுள்ளவன்.

(23) 7-ல் சுபயோகம் அடைந்திருந்தால் சகோதரரோடு நட்பாயிருப்பான். 7-ம் பாவாதிபதி லக்னத்திலிருந்தால் சகோதரன் தேசாந்தரத்திலிருப்பான். அவன் அனுப்பிய பணத்தை ஜாதகன் தன் வீட்டிலிருந்துக்கொண்டு எப்பொழுதும் அனுபவித்துக்கொண்டிருப்பான்.

(24) (சகோதர ஸ்தானதிபதி) 3-ம் பாவாதிபதி ஸ்த்ரீ நக்ஷத்ரம் ஸ்த்ரீ ராசி ஸ்த்ரீ அம்சம் இவைகளிலிருக்க சனி அங்காரகனிவர்க ளிருபுறமிருந்தால் தேசாந்தரத்திலிருக்கும் சகோதரன் பத்னியை இவன் ரகசியமாக அனுபவிப்பான்.

(25) 3-ம் பாவாதிபதி 7-ல் இருக்க அது சரராசியாகில் சகோதரன் தூரதேசத்திலிருப்பான். உபயராசியானல் ரொம்ப தூரத்திலிருக்கமாட்டான். ஸ்திர ராசியாகில் தன் தேசத்திலிருப்பான்.

(26) 3-ம் பாவாதிபதி இருக்கும் ஸ்தானதிபதி யோக காரகன் இவர்களின் சித்தாந்தத்தைக்கொண்டு சகோதரரின் காரியத்

தைச் சொல்லவேணும். மிச்ர யோகமானல் மிச்ரபலன். பாப யோகமாகில் விபரீதபலன். இதில் சொல்லாத விஷயத்தை எல்லாம் பாவ காரகனைக்கொண்டு சொல்லவேண்டியது.

மூன்றும்பாவம் முற்றிற்று.

---

## நான்காம் பாவ பலன்.

(1) 4-ம் பாவாதிபதி 4-ல் சுபயோகம் பெற்று இருந்தால் வெகுவான பூமியுடையவன். படிப்பு நல்ல வாகனம் இவைகளுடையவனுகவும் நல்ல கீர்த்தியுள்ளவனுகவு மிருப்பான்.

(2) 4-ம் பாவாதிபதி 2 அல்லது 11-ல் இருந்து கீழ்நோக்கும் கிரகங்களால் பார்க்கப்பட்டால் புதையல் லாபம் உண்டு. அகலம் உயரமுள்ள வீடு உள்ளவனுவான். திர்யக்முக கிரகங்களால் பார்க்கப்பட்டால் பக்கத்து நிலங்கள் கிடைக்கும். அதன் வழியாய் புதையல் கிடைக்கும். வெகுவான திரவியமுடையவனுயிருப்பான். மேல்நோக்கும் கிரகங்களால் பார்க்கப்பட்டால் பயிர்களின் மூலமாய் தனம் வரும். மிச்ர யோகமாகில் பலனும் மிச்ரமாயிருக்கும். பாபயோகமாகில் விபரீதபலன்.

(3) 4-ம் பாவாதி 6-ல் சுபயோகம் பெற்றிருந்தால் மாமா (அம்மான்) பலவானுக விருப்பான். அந்த வீட்டுக்காரன் லக்னத்திலிருக்க (அல்லது லக்னுதிபதியோடு சேர) அம்மான் தன் வீட்டில் வசிப்பான். அல்லது தேகபீடை அல்லது சத்ருபீடை உண்டாகும். பாபயோகமிருந்தால் தாயாருக்கு பீடை உண்டு. அல்லது தாயார் கெட்ட நடத்தையுடையவளாக விருப்பாள். சந்திரனும் வலிவில்லாமலிருந்தால் தாயாருக்கு மரணம் நேரும்.

(4) 4-க்கு அதிபதி உபயராசி அம்சங்களிருந்தால் அவனுக்கு சக்களத்தித் தாயார் உண்டு. மாதுர் ஸ்தானுதிபதி மாதுர் காரகர்கள் இவர்களை பஞ்ச சித்தாந்தப்படி நிர்ணயிக்கவும்.

(5) மாதுர் ஸ்தானுதிபதி பாபயோகமடைந்து, செவ்வாய் பலவீனனுயிருந்தோ 8—12-க்கு (10-க்கு) உடையவனுல் பார்க்கப்பட்டிருந்தாலும் அல்லது பாபர்கள் நடுவிலே இருந்தாலும் வாக்கின் மரியாதை, உத்திரவுகள், வியாபாரம் போய்விடும். பூமியும் நாசமடையும் என்று பண்டிதர்கள் சொல்கிறுர்கள்.

(6) ஷை ஜாதகனுக்கு சர்மாதிபதி பார்வை இராவிடில் அவன் பூமி கடனுக்கு அகப்பட்டுவிடும் (அதாவது கடன்காரனுக்கு அதீனமாகும்) சுக்ரன் பலவீனமாகியிருந்தால் பசு, வாகனங்கள் நாசமாகும். மிச்ரயோகமாகில் மிச்ரபலனும் பாபயோகமிருந்தால் விசேஷமாக ஷை ஜாதகனுக்கு கழுதை (துஷ்ட) வாகனம் கிடைக்கும். அவ்வாகனத்திலிருந்து விழ நேரிடும். தைதால்

எதாவது அங்கம் ஒடிந்துவிடும். இதை எல்லாம் யூகித்துப் பார்த்துச் சொல்லவேணும்.

(7) 4-ம் பாவாதி 5-ல் சுபயோகமடைந்திருந்தால் தாயார்பணக்கார வீட்டில் பிறந்திருப்பாள். வீட்டிற்கு எஜமானியாயிருப்பாள். அல்லது தேவதா (தைவ) பக்தி உள்ளவளாக விருப்பாள். நல்ல ரூபம், குணம், நல்ல சுபாவமுள்ளவளாக விருப்பாள். அல்லது பிள்ளையாவது வெகு பாக்யவானாக விருப்பான். வாகனம் ஐசுவரியங்கள் உடையவனாக விருப்பான். அரசர்க்கு மந்திரியாகவும் ஆவான் நிச்சயம்.

(8) 4-க்கு உடையவன் அவனிருக்கும் ராசிக்கு அதிபதி அதாவது இவ்விடத்தில் 5-க்கு உடையவன் இவர் பலத்தைக் கொண்டு எல்லா பலனையும் சொல்லவேணும். இருவரும் வலுவுடையவராகில் ஜாதகன் பிரபுவாயும் நல்ல ஸம்பத்துடையவனாகவும் வெகு கிராமங்கட்கு அதிபதியாகவு மிருப்பான். மிச்ரயோகமாகில் மிச்ரபலன் பாபயோகமாகில் விபரீதபலன்.

(9) 4-ம் பாவாதி 3-ல் சுபயோகம் அடைந்திருந்தால் ஸ்வல்பமான ஐசுவரியமுள்ளவன். மாற்றாந்தாய் மகன் உண்டு. அவனோடு த்வேஷம் கொண்டவனாயிருப்பான் நிச்சயம். சுவல்பமான நிலத்திற்கு உடையவனாக விருப்பான். அல்லது வீடு விற்கப்பட்டிருக்கும். மிச்ரயோகமாகில் பலன் மிச்ரம். பாபயோகமானால் விபரீத பலன்.

(10) 2-ல் சுபயோகமடைந்திருந்தால் மாதா மகன் சொத்து சேரும். நிலங்கள் செழிக்கும். வெகுவான வாகனங்கள் விருத்தியடையும். பூமியின் மூலமாய் பணம் சேரும். ராஜாக்களுக்கு வெகுவான கப்பம் (கிஸ்துகள்) கொடுப்பான். குடும்பத்திலுள்ள ஜனங்களை போஷிப்பான். ராஜபோஜனமடைவான். தன் காலம் வரை சௌக்யமுடையவன். மிச்ரயோகமானால் பலன் மிச்ரமாயிருக்கும். பாபயோகமாகில் பலன் வேறு விதமாயிருக்கும்.

(11) 1-ல் (லக்னத்தில்) சுபயோகமடைந்திருப்பின் ராஜவம்சத்தில் பிறந்தவனாக விருப்பான். தனக்கு இஷ்டமான வாகனம் கிடைக்கும். வெகு கிராமங்கட்கு அதிபதியா யிருப்பான். தடங்கலற்று சுகங்களை அனுபவிப்பான. எல்லா வித்யைகளிலும் வல்லவனாய் (நிபுணனாய்) இருப்பான்.

(12) ஷை லக்னம் ஜலராசியாகில் ஆற்றங்கரைகளில் வசிப்பான். (ஆற்றுப்பாச்சல் நிலமுண்டு) இவனுக்கு மதில் உள்ள பெரிய மித்தை வீடு உண்டு. தாயாரின் வெகு ப்ரீதியுடையவன். எல்லார்க்கும் சினேகிதனாயிருப்பான். பசுக்கள் (4-கால் பிராணிகள்) நிலங்கள் இவைகளில் செழிப்பு உடையவனாக விருப்பான். யோகம் மிச்ரமாகில் பலனும் மிச்ரம். பாபயோகமாகில் விபரீத பலன்.

(13) அந்த விபரீத பலனாவது தகப்பனார் சம்பாதித்த (பிதுர் ஆர்ஜித) சொத்தை வித்து தன் வயிற்றை வளர்ப்பான். படிப்பு தடைப்பட்டுவிடும். தான் பிறக்கும் காலத்தில் தாய் இறப்பாள். கெட்ட வாகனங்கள் (ஆபத்து நேரும்) கிடைக்கும். இப்படி எல்லாம் யுக்தியால் தெரிந்துகொள்ளவேணும்.

(14) 4-ம் பாவாதி 12-ல் பாபயோகம் பெற்றிருப்பின் ஜாதகன் தரித்ரனாகவிருப்பான். வீடு நிலம் ஒன்றுமிராது தாயார் சிறுவயதிலே (இவனுக்கு) இறப்பாள் ரொம்ப கஷ்டப்படுவான்.

(15) 11-ல் சுபயோகம் பெற்றிருந்தால் விசேஷமாக தாய் பாக்கியமுண்டு. நிலங்களின் லாபமும் மாட்டு வியாபார லாபமும் படிப்பு லாபமும் வாகனம் வஸ்திரம் இவைகளின் லாபமும் உண்டு. தாயின் சக்களத்திகள் அநேகம்பேர் இருப்பார்கள். மிச்ரயோகமானால் மிச்ரபலன். பாபயோகமாகில் பாபபலன்.

(16) 10-ல் சுபயோகமடைந்திருந்தால் அநேக ராஜ்ஜியத்திற்கு அதிபதி ஆவான். பூமியின் மூலமாய் பிரசித்தியுண்டாகும். அதிக வேகமுள்ள (வாயுவேகமான) குதிரையுள்ளவனா யிருப்பான். வித்தையினாலும் பிரஸித்தியுண்டு. இவைகளை எல்லாம் அந்தந்த காரகர்களின் பலத்தைக்கொண்டு சொல்லவேணும். மிச்ரயோகமானால் மிச்ரபலன் பாபயோகமாகில் பூமிநாசம் ஏற்படும். சத்ருக்கள் இவன் ராஜ்ஜியத்தைக் கொண்டுபோவார்கள். தானும் பூமியை விற்பான். கௌரவத்திற்கு ஹானி ஏற்படும். எல்லாவற்றையும் யுக்தியால் சொல்லவேணும்.

(17) 9-ல் சுபயோகமடைந்திருந்தால் பிதுரார்ஜிதமான பூமிக்கு அதிபதியாயிருப்பான். வித்தையினால் (வித்தையின்) பாக்யமுண்டு. அநேக வாகனங்களின் பாக்யமுடையவன். மிச்ர யோகமானால் பலனும் மிச்ரம். பாபயோகமானால் விபரீதபலன்.

(18) 8-ல் சுபயோகமடைந்திருந்தால் அநேகம் பூமிக்கு நாசமேற்படும். கொஞ்சம் பூமி மிச்சப்படும். அதன் மூலமாய் விருத்தி (ஜீவனம்) உண்டு அதிலும் கடன் அதிகமும் உயிருள்ள வரை ஏழ்மையுமிருக்கும். மிச்ரயோகமாகில் மிச்ர பலன் பாப யோகமாகில் விபரீதபலன்.

(19) 7-ல் இப்படி சுபயோகமடைந்திருந்தால் உயிருள்ள வரை சுகமுள்ளவனாயிருப்பான். மாமனார் வெகு நிலங்களுள்ளவன் அல்லது தானாவது வெகு பூமியுடையவனாயிருப்பான். இந்த ஏழாம் ராசி சர ராசி யாகில் வெகுதூரத்திலும் ஸ்திர ராசி யாகில் வீட்டின் அருகிலும் உபயராசியாகில் சமீபத்தில் (அதிகதூரமி ராமலும்) பூமி வித்தை இதுகளின் லாபம் முதலியதைச் சொல்லவும்.

(20) யோகம் மிச்ரமாகில் பலனும் கலந்து இருக்கும். பாபயோகமாகில் சிறுவயதில் தாய் இறப்பாள். பிரயாண காலத்

தில் வாகனங்களுக்கு பங்கம் ஏற்படும் இதில் சந்தேகமில்லை. மற்றதை பஞ்ச சித்தாந்தமறிந்தவர்கள் யோசித்து தகுந்தபடி பலனை சேர்த்துக் கொள்ளவேணும்.

(21) அந்த அந்த பாவத்திற்கு 6-8-12-ல் க்ரூரகிரகமிருந்து அந்த வீட்டுக்கு உடையவன் அந்த பாவத்தில் (சம்பந்தப்பட்டு) இருந்தால் அவன தசையில் அந்த பாவத்திற்கு ஹாநி உண்டாகும். (அதாவது கெடுதல் அல்லது நாசம் உண்டாகும்.)

(22) பாவாதிபதியிருந்த அம்சத்திலோ நக்ஷத்திரத்திலோ ராசியிலோ சனி கோட்சாரப்படி வந்தால் அப்பொழுது அந்த பாவத்திற்கு ஹானியுண்டாகும். எல்லாம் யுக்தியில் சொல்லவும் இங்கு கொஞ்சம் வழி காட்டப்பட்டது. தன் புத்தியால் இதை விவரித்துக் கொள்ள வேணும்.

## ஐந்தாம் பாவபலன்.

(1) ஐந்தாம் பாவாதிபதி சுப யோகத்திலிருந்தால் பிள்ளைகளின் ப்ராபல்யத்தைச் சொல்லலாம். இவன் பிரபுவாகிய பிரசித்தனுயிருப்பான் (அல்லது இவனுடைய யஜமானன் பிரசித்தனுயிருப்பான்.) அல்லது இவனுக்கு மந்திரஸித்தி யிருக்கும். அரசனுக்கு முக்கிய மந்திரியாகவும் சிநேகிதனுகவும் கணிதமறிந்தவனுகவும் வெகு புத்திமானுயுமிருப்பான் வெகு சிஷ்யக் கூட்டங் கூடியவனுய் மடாதிபதியாகவாவது இருப்பான்.

(2) ஸ்த்ரீ ராசி, அம்சம், நக்ஷத்திரம், இவைகளிலிருந்தால் ஸ்த்ரீ ப்ரஜை (பெண்குழந்தை) அதிகமுண்டாகும். ஆண ராசி முதலியதில் (ஆண்வர்க்கத்தில்) இருந்தால் ஆண் பிள்ளைகள் அதிகம். உபயராசியிலிருந்தால் இரட்டைக் குழந்தைகளுண்டாகும. நபும்ஸக நக்ஷத்திரத்திலோ அம்சத்திலோ ராசியிலோ விருந்தால் நபும்ஸகனுண்டாகும்.

(3) லக்னத்தின் உபசய ஸ்தானத்தில் புத்ரஸ்தானுதிபதி பலம்பெற்றிருந்தால் புத்ரகாரகனும் பலமுள்ளவனுகில் அநேகம் பிரஜைகள் (குழந்தைகள்) உண்டென்றறியவும்.

(4) 5-க்கு அதிபதி மறைவான ஸ்தானத்தில் (யோகமுள்ளவனுக) இருந்தால் சொற்ப பிள்ளைகள் உண்டு. லக்னத்திலிருந்து 6 வீடு வரையில் 5-ம் பாவாதிபதி இருந்தால் சீக்கிரமாய் பிள்ளைகள் பிறக்கும், அதற்கப்பாலிருந்தால் வெகு காலம் கழித்து பிள்ளைகள் பிறக்குமென்றும் அறியவும். 5-ம் பாவாதிபதி இருக்கும் ராசியின் அம்சத்தின் தொகையைக் கொண்டு புத்திரர்கள் (மக்கள்) தொகையைச் சொல்லவேணும்.

(5) புத்ராதிபதியின் நக்ஷத்திரம் அம்சம் ராசி இவைகளிலிருக்கும் குரு புத்ரஸ்தானத்தைப் பார்த்தால் அந்த கோசார காலத்தில் புத்ராதானம் (புத்ரகர்ப்பம் தரித்தல்) உண்டென்று சொல்லவும்.

(6) ஒற்றை ராசியாகில் ஆண் குழந்தை கர்ப்பத்தில் என்றும் இரட்டை ராசியாகில் ஸ்திரீ குழந்தை கர்ப்பத்தில் என்றும் க்லீபயோகம் (அலியோகம்) இருந்தால் கர்ப்பத்தில் அலி என்றும் பாபர் பார்வை யிருப்பின் கர்ப்பத்திற்கு பங்க முண்டென்றும் அறியவும் யோகம் கலப்பாகில் பலனும் கலப்பென்றும் எல்லாம் யுக்தியால் சொல்ல வேண்டியது. பாபயோகமிருந்தால் பிள்ளை பிறக்காமலோ அல்லது பிறந்தாலும் இறந்ததாகவோ ஆகும்.

(7) லக்னாதிபதி 5-ல் இருப்பினும், 5 உடையவன் லக்னத்திலிருந்தாலும் புத்திரஸ்தானம் சனி புதனிவருடையதாகவிருந்தாலும் அல்லது சனியாலோ குளிகனாலோ கூடப்பட்டோ பார்க்கப்பட்டோ இருந்தாலும், குளிகன், சனி, இவர்களின் நடுவே இருந்தாலும் அந்த ஜாதகனுக்கு தத்து (ஸ்வீகார) புத்திரன்.

(8) பாக்கியாதிபதி (9-க்கு உடையவன்) ஸ்த்ரீகிரகத்தால் பார்க்கப்பட்டிருந்தால் பெண் வயிற்றுப் பிள்ளை தத்து புத்திரனாவான்; ஆண்கிரகத்தால் (9-க்கு அதிபதி) பார்க்கப்பட்டிருந்தால் சித்தப்பன் அல்லது பெரியப்பன் பிள்ளையோ அவர்கள் பிள்ளையோ ஸ்வீகாரபுத்திரனாவான். 6-க்கு அதிபதியால் பார்க்கப்பட்டால் பங்காளி பிள்ளையே ஸ்வீகாரம் ஏற்படும்.

(9) எந்த பாவாதிபதியால் 5-க்கு உடையவன் பார்க்கப்படுகிறானோ அந்த பாவாதிபதியைச் சேர்ந்த (அவன் ஜாதியான) பிள்ளை ஸ்வீகாரபுத்திரனாவான். ஜாதகனுக்கு பிள்ளையை யுக்தியால் எல்லாவற்றையும் யூகித்துச் சொல்லவேணும்.

(10) 5-க்கு உடையவன் 6-ல் சுபயோகமடைந்திருந்தால் அம்மான் பிரபலமாயிருப்பான். பிரபு (எஜமானன்) அல்லது பிள்ளை சத்துருவாக ஆவான் நிச்சயம். மிச்ரயோகமடைந்திருந்தால் பிள்ளையுண்டாகாது. (மலடன்) நிச்சயம். அல்லது பிள்ளை மரித்துவிடும், ரோகத்தாலாவது பிடிக்கப்படும் ஷ ஜாதகனுக்கு ஸ்வீகாரத்திற்கு (தத்துக்கு) யோகமிருந்தால் அம்மான் பிள்ளை தத்து வருவன். ஸ்த்ரீ ராசி, அம்சம், நக்ஷத்திரம் இவைகளில் இருந்தால் முன் சொன்ன ஸ்வீகார யோகத்திலிப்படியிருந்தால்) அம்மான் வம்சத்தில் பிறந்த பெண் மனைவியாவாள். பாபயோகமிருந்தால் பிள்ளையில்லை. ராஜதண்டனை அடைவான்.

(11) 4-ல் 5-க்கு உடையவன் சுபயோகம் பெற்றிருந்தால் சொற்பமான பிள்ளையுண்டு. அப்பிள்ளை பூமியைக் கொண்டு ஜீவிப்பான். மிச்ரயோகமாகில் குழந்தைகள் இறந்துவிடும். அல்லது பெண் குழந்தை நீண்டிருக்கும். பாபயோகமானல் பிள்ளையில்லை.

(12) 5-க்கு உடையவன் 3-ல் சுபயோகம் பெற்றிருப்பின் அநேகம் பிள்ளைகள் உண்டாவார்கள் சீக்கிரமாகவே. பிரபுவை

வசம் செய்வாள். தெய்வானுக்கிரகம் ஏற்படும். சகோதரன் பிரபலமாயிருப்பான். யோகம் மிச்ரமாகில் பலனும் கலந்தாப் போலிருக்கும். பாபயோகமானல் விபரீத பலன்.

(13) 5-க்கு உடையவன் 2-ல் சுப யோக மடைந்திருந்தால் பிள்ளை பெண் இவர்களால் குடும்பியாயிருப்பான். பிரபு மூலமாய் பணம் சம்பாதிப்பான். சோதிடமறிந்தவனுகவும் பலிக்கும் வாக்கு உடையவனுகவுமிருப்பான். தெய்வ மூலமாய் பணம் கிடைக்கும். போஜன சௌக்கிய முடையவன். மனைவி அனுகூல மாயிருப்பாள். மிச்ரயோகமானல் பலன் கலந்தாப்போலிருக்கும்.

(14) பாபயோகமடைந்திருந்தால் ஏழையாகவும் பிரபு மூல மாய் பணச்செலவு உடையவனுகவும் குடும்பத்தைக் காப்பாற்ற சக்தியற்றவனும் எப்பொழுதும் குடும்பத்தில் கலகமுடையவனும் சைவ பிராம்மண குலத்தில் பிறந்தவனும் சிவன் சொத்தை (சிவனுக்கு உபயோகித்து மிச்சமானதை) சாப்பிடுவனுமாவான்.

(15) 5-க்கு உடையவன் லக்னத்தில் சுபயோகமடைந்திருந்தால் அநேகம் வேலைக்காரர்களைக் காப்பாற்றுபவன் தண்டனை விதிக்கும் அதிகாரமுள்ள மந்திரியாக (மாஜிஸ்ட்ரேட்) முதலியது மாகவிருப்பான். சக்கிரவர்த்தியின் (ஜகதீச்வரனின்) கிருபையுள்ள வனுகவும் சொற்பமான புத்திரனுடையவனுகவும் சத்துரு இராத வனுகவும் எல்லார்க்கும் இஷ்டத்தைச் செய்கிறவனுமாக விருப்பான்.

(16) யோகம் மிச்ரமானல் பலன் கலந்தாப் போலிருக்கும். பாபயோகமாகில் பிள்ளை இல்லை. துர் தேவதையை பூஜிப்பான் துர்மந்திரியாகவும் துஷ்டஜனங்கட்கு யஜமானனுமாக விருப்பான்.

(17) 12-ல் சுபயோகமடைந்திருந்தால் எப்பவும் பிரமத்தைப் பற்றிய விசாரணைகள் செய்வான். படுக்கை சௌக்கியமுள்ளவன். விரக்தையுள்ளவன். அந்தியத்தில் பிரம பதத்தை (மோக்ஷத்தை) அடைவான். கொஞ்சகாலம் புத்திரனிருந்து பிறகு இறந்துவிடுவான். அதன் மூலமாய் எல்லாத்திலும் ஒழிவடைந்து சாந்தி குணமுடையவனும் எப்பவும் பிக்ஷை எடுத்துக் கொண்டிருப்பான். (சன்னியாசியாகவும் ஆகலாம்) மிச்ரயோக மானல் மிச்ர பலன் பாபயோகமானல் பலன் விபரீதம்.

(18) 11-ல் சுபயோகமடைந்திருந்தால் பிள்ளையின் வழியாய் தனம் வரும். பிரபுக்களால் லாபமடைவான். தான் முயற்சித்த காரியங்கட்கு சித்தியுண்டு. மிச்ரமாகில் பலன் கலந்திருக்கும். பாபயோகமானல் பலன் வேறுவிதமாகவிருக்கும்.

(19) 10-ல் சுபயோகமடைந்திருப்பின் வெகு பூமிக்கு அதிபதியாவான் கோவில் முதலியது கட்டுவான் அல்லது யாகம் செய்வான்.

அரசர்களின் உத்திரவுகளை எழுதுபவனுயிருப்பான். புத்தி மானுயிருப்பவன். யோககாரகனைக் கொண்டு எல்லாவற்றையும் யோசித்துச் சொல்லவேணும்.

(20) மிச்ரயோகமானுல்

ஜீர்ணோத்தாரண தர்மம் செய்வான். அல்லது யாகம் ஹோமம் முதலியது செய்விப்பான். (தான் கூட்ட கலந்து செய்வான்) அதன் மூலமாய் பிழைப்பான். கோவில் பூஜகனுகவாவது இருப்பான்.

(21) பாபயோகம் பெற்றிருந்தால் பாபத்தொழில் செய்யும் பிள்ளையுண்டாவான். அவன் துஷ்காரியங்களைச் செய்வான். தெய்வத்திற்காக வென்று பிச்சையெடுத்துத்தான் சாப்பிடுவான். கோவில் அல்லது பிரபுவின் கிரகத்தில் பரி சாரகம் செய்து பிழைப்பான்.

(22) 9-ல் சுபயோகமடைந்திருந்தால் அநேகம் புத்திரர்களுண்டாகும். தகப்பனுர் பிரசித்தி பெற்றவராகவிருப்பார். தர்ம காரியங்களைச் செய்வார். தெய்வம் அல்லது பிரபுவின் மூலமாய் வெகு பாக்கியத்தை அடைவான்.

(23) மிச்ரயோகமானுல் மிச்ரபலன் பாபயோகமாகில் அனர்த்தமுண்டாகும். அரசன் (அல்லது பிரபு) கோபத்தாலோ தெய்வ மூலமாகவோ, பிள்ளையின் மூலமாகவோ வெகு பாக்ய நாசம் உண்டாகும். அதில் 8-க்கு உடையவன் கூடியிருந்தால் கடன் மூலமாய் தன நாசமேற்படும். அந்தந்த பாவாதிபதிகளின் சம்மந்தத்தைக் கொண்டு அந்தந்த பாவாதிபதிகளின் வழியாய் பாக்கிய நாசத்தைச் சொல்லவேணும்.

(24) 8-ல் 5-ம் பாவாதிபதி சுபயோகம் பெற்றிருந்தால் ஜாதகனுக்கு ஸந்ததி நசித்துவிடும் இவனுடைய யஜமானன் பாக்கியமிழந்தவனுவான். தெய்வ பக்தி இராது இவனுக்கு பிள்ளையாவது தரித்திரனுவான். மிச்ரயோகமானுல் ஸ்வீகார புத்திரனுண்டு. பாபயோகமாகில் ஸ்வீகாரம் வந்த பிள்ளையும் மரிக்கும்.

(25) 7-ல் சுபயோகம் பெற்றிருந்தால் பிள்ளை தேசாந்தரத்திலிருப்பான். (தேசாந்தரம் செல்வான்) பிரசித்தமான கீர்த்தியுடையவன். நல்ல போகமுள்ளவன். அநேகம் பிள்ளைகளுடையவன் அல்லது எப்பவும் தேவதா பக்தியுள்ளவன். பிரபுக்களுக்கு பிரியன் அல்லது தானுவது புரபுவாகவிருப்பான். மிச்ரயோகமாகில் மிச்ரமான பலன் பாபயோகமாகில் அநேக பிள்ளை பிறந்தாலுமிறக்கும். தேசாந்தரம் சென்ற பிள்ளையும் கூட நிச்சயமாய் இறந்துவிடும்.

(26) ஜாதகனுடைய யோககாரக கிருகங்களின் பலன்களைப் பார்த்து சோதிடம் தெரிந்தவர்களால் எல்லாம் யூகித்து சொல்

லப்பட வேண்டும். வேறு சாஸ்திரங்களில் சொன்னதெல்லா மிங்கு சேர்த்துக் கொள்ளவும்.

ஐந்தாம் பாவம் முற்றிற்று.

## ஆறும் பாவபலன்.

(1) ஆறும்பாவத்தில் சுபயோகமிருந்து அந்த 6-ம் பாவ காரகன் பலவானுகில் பங்காளிகள் பிரபல மாவார்கள் ஜாதகனு டைய அம்மான் யோகமுள்ளவனுயிருப்பான். இப்படியிருக்க லக்னுதிபதியோடு சேர்ந்தால் சேனுதிபதியாவான். எந்த பாவாதி பதி சேருகிறுனே அந்த பாவத்தின் மூலமாய் யோக விருத்தி யுண்டாகும். காரகனைக் கொண்டு மிதையறியவும்.

(2) யோகம் மிச்ரமானுல் பலனும் மிச்சம் பாபயோகமா கில் சத்துரு விருத்தி ஏற்படும். 6-க்கு அதிபதி லக்னுதிபதியோடு கூடி பாப யோகமடைந்திருந்தால் பெரிய ரோகமுண்டாகும். ரோக காரகர்களைக் கொண்டு இந்த ரோகமென்று பண்டிதன் நிச் சயிக்கவேணும்.

(3) 6-ல் 6-க்கு உடையவன் சுபயோகமடைந்திருந்தால் இவன் அம்மானுல் ஸ்வீகாரம் செய்யப்படுவான். பாக்கியமுள்ளவ னுகவும் பிரசித்தியுள்ளவனுகவும் இருப்பான். மிச்ரயோகமாகில் பலன் மிச்ரமாயிருக்கும். பாபயோகமானுல் பிள்ளைக்கு ரோக முண்டாகும் அல்லது பிள்ளைக்கு நாசமேற்படும்.

(4) 4-ல் சுபயோகமடைந்திருந்தால் வீடு ஜீர்ணமாக (பழ சாகவும் ஒட்டையாகவும் இடிந்ததாகவும்) இருக்கும் படிப்பிற்கு பங்கம் (நாசம் அல்லது தடங்கள் உண்டாகும் தாயார் ரோக முள்ளவளாகவிருப்பாள் அநேகம் அம்மான்களிருப்பார்கள், எல்லா அம்மான்களும் பயிரிடுபவராயிருப்பார்கள். மிச்ரயோக மானுல் ஈனத்தொழிலுடையவனுக விருப்பான். கிராம காரியங்க ளில் இவனுக்கு பிரவிர்த்தி (முயற்சி அல்லது பெருதனம்) ஏற் படும். குள்ளமான வீடு உடையவன். குடி நிலையாயிராது. தயா ருடன் சண்டை செய்வான்.

(5) பாபயோகமாகில் தரித்திரனுயிருப்பான். வேலைக்காரனுக (பரிசாரகம் செய்பவனுக) இருப்பான். வீடும் பூமியும் கடனுக்கு உட்பட்டதாகவாகும் தாயார் விபசாரியாகவிருப்பாள். எங்கா னும் கஷ்டப்பட்டு ஜீவிப்பான். ஜெயிலிலும் ஒரு சமயம் இருப்பான்.

(6) 3-ல் சுபயோகம் பெற்றிருப்பின் சகோதரன் சத்துரு வாக ஆவான். அம்மான் ஜாதகனுடைய சகோதரனுக்கு ஸ்னேகி தனுகவிருப்பான். ஜாதகனுடைய காரியத்திற்கு தடங்கல் செய் வான். அல்லது சகோதரன் வியாதியால் பீடிக்கப்படுவான். மிச்ர மானுல் மிச்ரபலன். பாபயோகமாகில் பாப பலன் (கெட்டபலன்) இவனுக்குப் பிறகு சகோதரனில்லை.

(7) 2-ல் சுபயோகமடைந்திருப்பின் எப்பவும் குடும்பத்தில் சண்டைசச்சரவு உண்டாகும். சத்துருவின் மூலமாய் தன நாச முண்டாகும். பற்கல் நேர் வரிசையாக விருக்காது. கண்ணில் கொஞ்சம் ஒச்சமுள்ளவனாகவும் சொன்னவார்த்தையை திருப்பித் திருப்பிச் சொல்லுகிறவனுமாகவிருப்பான்.

(8) மிச்ரயோகமானல் மிச்ரபலன். பாபயோகமானல் சமயத்தில் பத்னி நாசமடைவாள். சுக்ரனும் பலமிராமலிருந்தால் (கலியாணமாகாமல்) பிரம்மசாரி விருதம் பூண்டிருப்பான். பசி காலத்தில் ஆகாரம் கிடைக்காது தரித்திரனின் பலத்தை அனு பவிப்பவனாகவிருப்பான்.

(9) லக்கினத்தில் சுபயோகம் பெற்றிருப்பின் யுத்த வீர னாகவோ (சிப்பாய்) சேனாபதியாகவோ இருப்பான். அரசாங்க அடையாளம் (முத்திரை, சில், பட்டையம்) தரிக்கும் வேலைக்கார னாகவோ ஜெயில் அதிகாரியாகவோ இருப்பான். அம்மான் ஜாதக னுடைய வீட்டில் வசிப்பான். மிச்ரமானல் மிச்ரபலன். பாப யோகமானல் வியாதியுண்டாகும் அல்லது திருட்டுத் தொழிலு டையவனாக விருப்பான்.

(10) 12-ல் சுபயோகமடைந்திருந்தால் ஜாதகன் கெட்ட காரியங்களில் ஈடுபட்டிருப்பான். எப்பவும் சூதாட்டம் முதலிய காரியம் செய்வான். கெட்ட வழியால் பணச்செலவு செய்வான். மிச்ரமாகில் மிச்ரபலன் பாபயோகமானல் நரகத்தையடைபவனு வான்

(11) 11-ல் சுப யோகமடைந்திருந்தால் மூத்தவன் தண் டனை விதிக்கும் அதிகாரியாக (மாஜிஸ்ட்ரேட்) இருப்பான். மிச்ர யோகமாகில் மூத்த குழந்தைகளுக்கு (ஜாதகனுடைய மூத்த சகோதரர்கட்கு) தடங்கல் உண்டாகும். பாபயோகமானல் தரித் திரம் உண்டாகும்.

(12) 10-ல் சுபயோக மடைந்திருப்பின் கெட்ட காரியங் களைச் செய்வான். வைதீகமான ஆசாரமுடையவன். சிராத்தங் களில் பிராம்மணார்த்த மிருப்பான். பாபச் செய்கைகளில் பயப் படாதவன். மிச்ரயோகமானல் தான் செய்யும் தொழில் (தன் ஜீவன விருத்தி) பங்கமடையும். தான் செய்யும் உத்யோகத்தில் சத்ரு விருத்தியுடையவன். பாப யோகமானல் பாபத் தொழி லுடையவன். பரிசாரக வேலை செய்பவன், அல்லது வேலை யிழந்து பிச்சை எடுத்து சாப்பிடுகிறவனாய் யாசகம் செய்வான்.

(13) 9-ல் சுபயோக மடைந்திருந்தால் தகப்பனர் நியா யாதிபதி (ஜட்ஜி, முன்சீப்) ஆவான். ஆனல் அவன் ஜாதகனுக்கு சத்ருவாக விருப்பான். அம்மான் பாக்கியசாலி ஆவான், பங்காளி மூலமாகவாவது பாக்கிய முண்டாகும். பாக்கிய காரகரின் பலத்தைக்கொண்டு சொல்லவேணும். மிச்ரயோகமாகில் பலஞ்

மிச்ரமாயிருக்கும். பாபயோகமானல் தரித்திரனவான். சத்துருவின் மூலமாய் பாக்கியம் குறையும். குருவுக்குத் துரோகம் செய்வான். தர்மவழியில் பக்தி குறையும். தர்ம காரியங்கட்கு நாசம் உண்டுபண்ணுவான்.

(14) 8-ல் சுபயோக மடைந்திருந்தால் மத்திம ஆயுள் உடையவன். யோகம் மிச்ரமாகில் கடன் உண்டாகும், அல்பாயுள் உடையவன். பாபயோக மடைந்திருந்தால் அரிஷ்டங்கள் (உபத்திரவங்கள்) உண்டாகும், உயிருள்ளவரையில் வியாதியால் பீடிக்கப்படுவான்.

(15) 7-ல் சுபயோக மடைந்திருந்தால் அம்மான் பெண் ஜாதகனுக்கு மனைவியாவாள். அம்மான் தேசாந்தரத்திலிருப்பான். ஜாதகனுடைய மனைவி விபசாரியாவாள். அம்மானுவது பிரபலனுக விருப்பான். அவனுல் ஜாதகன் ஏவப்படுவான், (அதாவது அம்மானுக்கு ஏவலாளாக விருப்பான்). யோகம் மிச்ரமானல் பலன் மிச்ரம். பாபயோகமாகில் இவனுல் மனைவி தள்ளப்படுவாள்,. அல்லது மனைவி மரணமடைவாள். ஸ்த்ரீயின் போகம் (அனுபவம்) இராது. அலி நக்ஷத்திரம், அம்சம், ராசி இவைகளில் (7-ல்) (-க்கு உடையவனிருந்தால் மனைவி நபும்ஸகமாயிருப்பாள், அல்லது மனைவி ரோகமுள்ளவளா யிருப்பாள். அவன் தசையில் மரணமுண்டாகும். லக்னுதிபதியும் நபும்ஸக ராசியிலிருப்பின் ஜாதகனுவது நபும்ஸகனுக விருப்பான். எல்லாவற்றையும் அந்தந்த காரகர்களின் யோகத்தைக்கொண்டும் ஜாதகனுடைய யோக காரகர்களைக்கொண்டும் சொல்லவேணும்.

ஆரும்பாவம் முற்றிற்று.

## ஏழாம் பாவம்

(1) 7-ல் சுபயோகமிருந்தால் (7-ம்பாவம் சுபயோகத்தோடிருந்தால்) ஜாதகன் பிரபலமாக விருப்பான். போகம் செய்யும் ஸத்ரீகளின் சௌக்கிய முடையவனுகவும், ஸ்த்ரீகட்கு மன்மதன் போலுருவம் கொண்டவனுமாக விருப்பான். ஜாதகனுடைய மனைவியாவது பெரிய தனவானுடைய குலத்தில் பிறந்திருப்பாள். தன் வீட்டிற்காவது அவள் யஜமானியாக விருப்பாள். அதன் மூலமாய் பாக்கியங்களின் லாபமுண்டு.

(2) பாவாதிபனுக்கு இரட்டைராசி, நக்ஷத்திரம், அம்சம் இவைகளின் யோகமாகில், காரகனும் அப்படியேயாகில் வெகு ஸ்த்ரீக்கட்கு நாயகனுகவும் ராஜாவாகவு மிருப்பான். மிச்ரயோகமாகில் மூன்று பாரியைக ளிருப்பார்கள். அல்லது இரண்டு பாரியைக ளிருப்பார்கள். மிச்ரயோகமாகில் மிச்ர பலனென்று சொல்லவேணும். பாபயோகமானல் மனைவி இறப்பாள். நீச்சகிரகம் 7-ல் இருந்தால் ருதுஸ்னனம் செய்யாத (பகிஷ்டை ஸ்னனம் செய்யாத) பெண்ணை யனுபவிப்பான். 7-ல் அங்காரகனிருந்

தால் விதவையை அனுபவிப்பான். ராகு இருந்தால் மிலேச்சஜாதி ஸ்த்ரீயை அனுபவிப்பான். சனியும் செவ்வாயும் 7-ம் ராசியிலிருந்து அவர்கள் நடுவில் சுக்கிரன் இருந்தால் பாபமுள்ள ஸ்த்ரீயை அனுபவிப்பான். சுபயோகமிருந்தால் இவைகள் இராது.

(3) 7-க்கு உடையவனிருக்கும் நவாம்சாதிபதியைக்கொண்டும் அவனோடு சேர்ந்திருக்கும் கிரகங்களின் பலத்தைக்கொண்டும் ஜாதகனுடைய வர்ணம், ஜாதி இவைகளின் பேதம் முதலியதை பண்டிதன் சொல்லலாம்.

(4) களத்திர ஸ்தானாதிபதியும், களத்திர காரகனும் பலவானாகி உப-ஜெய ஸ்தானத்திலிருந்தால் குரு முதலில் சுற்றும் போது விவாகம் உண்டாகும். அவ்விருவர்களும் மத்திமமான பலமுடையவர்களாகில் இரண்டாவது குருவின்சுற்றில் கலியாணம் நடக்கும். இருவர்களும் பலம்பெருமல் இருந்தால் மூன்றும்சுற்றில் விவாகம் நடக்கும். அவர்கட்கு எவ்வித பலமுமிராமல் (விபரீத பலம்) துர்பலமுமிருந்தால் ஜாதகனுக்கு விவாகம் நடக்காது. நடந்தாலும் அந்த மனைவி இவனால் அனுபவிக்கப்படாமலே பாலியத்திலேயே இறப்பாள்.

(5) அந்த அந்த பாவங்களின் 6-8-12-ல் பாபகிரக மிருந்து அந்த பாவாதிபதி லக்னத்தில் சம்பந்தப்பட்டால் அவன் தசையில் அந்தந்த பாவத்திற்கு ஹாநியுண்டாகும்.

(6) (7-க்கு அதிபதி) 6-ல் சுபயோக மடைந்திருந்தால் மனைவி (ஜாதகனுக்கு) அம்மான் வம்சத்தில் பிறந்தவளாகவிருப்பாள். அல்லது வியாதியால் பீடிக்கப்படுவாள். ஜாதகனுக்கு இரண்டு மனைவிகள் ஏற்படுவார்கள். மிச்ரயோகமாகில் மிச்ர பலன். பாபயோகமாகில் மூலரோகத்தால் பீடிக்கப்படுவான். சுக்கிரனும் பலமிராமலிருந்தால் லிங்க ஸம்பந்தமான (ஆண்குறியைச் சேர்ந்த) ரோக முடையவனாகவிருப்பான். அல்லது சத்துருவால் ஜாதகனுடைய பாரியை அபஹரிக்க (கொண்டுபோக)ப்படுவாள், அல்லது ஜாதகனால் விடப்படுவாள்.

(7) 5-ல் சுபயோகம் அடைந்திருந்தால் ஜாதகனுக்கு சிறு வயதில் கலியாணம் ஆகும். அந்த பெண் பிரபுவின் பெண்ணாகவும், வீட்டு வேலைகளில் கெட்டிக்காரியாகவு மிருப்பாள். யோகம் மிச்ரமாகில் ஜாதகனுக்குப் பிள்ளை பிறக்காது. அல்லது பெண் குழந்தை மாத்திரமாவது உண்டு. பாபயோகமானால் குழந்தையே ஜனிக்காது. அல்லது ஜார (திருட்டு) புருஷனால (இவன் மனைவிக்கு) குழந்தையுண்டா யிருக்கும். இவன பிரபு தேசாந்தரத்தில் சத்துருவால் துன்பமடைவான்.

(8) 4-ல் சுபயோக மடைந்திருப்பின் இவன் மனைவி வெகு ஸௌக்கியமுடையவள். (வெகு பிள்ளையுடையவள்.) தேசாந்திரத்

தில் வாகனம் கிடைக்கும். அல்லது நல்ல படிப்பு கிடைக்கும். மிச்ரயோகமானால் மிச்ரபலனும், பாபயோகமானால் விபரீத பலனும் உண்டாகும்.

(9) 3-ல் 7-க்குடையவன் சுபயோக மடைந்திருந்து 3-க்கு உடையவன் 7-ல் இருந்தால் தேசாந்திரத்தில் ஜாதகனுடைய சகோதரன் பிரசித்தனும் பாக்கிய முடையவனுகவு மிருப்பான். பாபயோகமாகில் சகோதரனுக்கு ஹானியுண்டாகும். சகோதர னின் மனைவியை இவன் அனுபவிப்பான்.

(10) 2-ல் சுபயோக மடைந்திருந்தால் ஸ்த்ரீ மூலமாய் பணம் வரும். மிச்ரயோகமாகில் இரண்டு மனைவிகள். பாபயோக மாகில் மனைவி இறப்பாள். அல்லது மனைவி விபசாரியாயிருப் பாள் அதன் மூலமாய் தனலாபமுண்டு. ஜாதகன் ஊர் சுத்திக் கொண்டு சாப்பாடு அடைவான். (பிராம்மணனுகில்) சபிண்டீ கரணம் சாப்பிடுவான். அல்லது பிரேத போஜனம (நக்னம் வாங் குவது சாப்பிடுவது ஏகாணம் சாப்பிடுவது முதலியது) செய் வான். அவன் (7-க்கு உடையவன்) தசையில் இறப்பான்.

(11) லக்னத்தில் சுபயோக மடைந்திருந்தால் எப்பொழு தும் சஞ்சாரம் செய்வான், ஜீவனத்திற்காக காகிதங்கள் (லெட் டர்கள்) (சமாசாரங்கள்) எடுத்து ஊர் ஊராகச் செல்வான். (போஸ்டு ப்யூன், ரன்னர் முதலியது) ஜன்மம் முதல் தன் வீட்டி லிருக்கும் பெண்ணை யாவது கலியாணம் செய்துகொள்வான். அல்லது ஜாதகன் அவனால் கர்ப்பமடைந்த பெண்ணை மணம் செய்துகொள்வான். எப்பவும் பெண் கூட்டத்தி லிருந்து கொண்டு ஸ்த்ரீகளின் போகத்தையே கதியாக வுடையவனுக விருப்பான். மிச்ரயோகமானல் மிச்ரபலன். பாபயோகமானல் விபரீதபலன்.

(12) 12-ல் சுபயோக மடைந்திருந்தால் கொஞ்சகாலம் ஸ்த்ரீயினுல் சுகமுண்டு, அல்லது தேசாந்தரத்தில் இறப்பான். மிச்ரயோகமானல் மிச்ரபலன். பாபயோகமானல் ஸ்த்ரீ இறப் பாள், அல்லது பிரம்மசாரியாக (கலியாணமாகாதவனுகி) இருப் பான், அல்லது ஸ்த்ரீ நினைவாகவே படுத்துக்கொண்டிருப்பான். அயலார் பாரியாளை நினைப்பான்.

(1ம) 11-ல் சுபயோக மடைந்திருப்பின் அநேகம் பெண் களுக்கு கணவனுக விருப்பான். (அதாவது அநேகம் ஸ்த்ரீகளை கலியாணம் செய்துகொள்வான்). மிச்ரயோகமானல் மிச்ரபலன். பாபயோகமாகில் எப்பவும் நடந்துகொண்டிருப்பான், அல்லது முதுகில் மூட்டை சுமப்பான். எப்பவும் சுமந்தே ஜீவிப்பான். அநேகம் மனைவிக ளிறப்பார்கள். மறுபடியும் ஸ்த்ரீலாபம் (அதா வது விவாகம்) நடக்கும். (இதனுல் கடைசிதாரம் தங்கலாமென்று தோனுகிறது) அந்த (11-ம) வீட்டுக்காரன் 2-ல் இருந்தால்

தேசாந்தரத்திலிருந்து தனம் வரும். ஸ்திரீ (களத்திரம்) வழியாக தனம் கிடைக்கும். எல்லாவற்றையும் ஊகித்துச் சொல்லவேணும்.

(14) 10-ல் சுபயோக மடைந்திருந்தால் ஜாதகனுடைய மனைவி ஜாதகனுக்கு சுச்ருஷை (பணிவிடை) செய்வாள். ஸ்திரீ (களத்திரம்) வழியாய் ஜீவனம் கிடைக்கும், அல்லது தேசாந்தரத்தில் ஜீவனம் நடக்கும், அல்லது நடந்து நடந்தாவது பிழைப்பான். மிச்ரயோகமானல் மிச்ரபலன். பாபயோகமாகில் விபரீத பலன், எல்லாவற்றையும் புத்தியைக்கொண்டு தீர்மானிக்க வேணும்.

(15) 9-ல் சுபயோகமாகில் தேசாந்தரத்தில் (ஜாதகனுக்கு) நல்ல பாக்கியமுண்டாகும், அல்லது தகப்பனர் தேசாந்தரத்திலிருப்பான். தேசாந்தரத்தில் தர்மம் செய்வான். அல்லது ஜாதகனுடைய மாமனர் ஸ்ரீமானக (பணக்காரனக) இருப்பான். மிச்ரயோகமாகில் தகப்பனர் இறப்பார். பாபயோகமானல் பாக்கியம் குறையும். சிறுவயதிலேயே தகப்பனர் இறப்பார்.

(16) 8-ல் சுபயோக மடைந்திருந்தால் ஜாதகன் தேசாந்தரத்தில் மரணமடைவான். அவனுடைய மனைவியும் மரணமடைந்துவிடுவாள். மிச்ரயோகமானல் மிச்ரபலன். அல்லது அவன் மனைவி அனுபவிக்கப்பட்டு மரிப்பாள். அல்லது ஜாதகன் பிரம்மசாரியாக விருப்பான். அல்லது இவன் மனைவி பெரிய ரோகமுடையவளாக விருப்பாள். அல்லது ஜாதகனல் தள்ளப்படுவாள்.

(17) 7-க்கு உடையவனும் களத்திரகாரகனும் அவர்களிருக்கும் வீட்டுக்கு அதிபதியும் பலவானகில் சனியினுடைய மூன்றும் பரியாயத்தில் (சுற்றில்) பத்னி மரணமடைவாள். மத்திய பலமுள்ளவர்களாகில் இரண்டாம் சுற்றில் பத்னி மரணமடைவாள். அதம பலமுள்ளவர்களாகில் (பலமிராதவராகில்) முதல் சுற்றில் பத்னி மரணமடைவாள்.

(18) ஸ்திரீ ஜாதகத்தில் 2-7-8 இடங்களிலோ அதன் பக்கங்களிலோ ராகு, செவ்வாயிருந்தால் அந்த ஸ்திரீக்கு அமங்கலியத்தைச் சொல்லவேணும். 4-ல் இப்படியிருந்தால் அந்தப் பெண் தாயாருக்கு அமங்கலியத்தைச் சொல்லவேணும்.

ஏழாம்பாவம் முற்றிற்று.

## எட்டாம் பாவம்

(1) எட்டாம்பாவத்தில் சுபயோகமிருந்தால் ஜாதகன் சிரஞ்சீவியாக (தீர்க்காயுள் உள்ளவனக) விருப்பான் யோகம் மத்திமமாகவிருந்தால் மத்திம ஆயுள், அதமமாக விருந்தால் அல்பாயுள் என்று சொல்லவேணும்.

(2) லக்னம், லக்னாதிபதி, சந்திரன் இவர்கள் பூரண பலமுள்ளவராகி நக்ஷத்திராதிபதி (ஜாதகனுடைய) நவாம்சாதிபதி சனி இவர்களும் நல்ல பலமுடையவர்களாகில் ஜாதகனுக்கு பூரண ஆயுள். இது அதமமானல் அல்பாயுள்.

(3) 12-ம் ராசி முதல் 6-வீடுவரை தலைகீழாகப் பார்க்கில் ஒவ்வொரு வீட்டிலிருக்கும் பாபர்கள் கீழ்கண்டபடி ஆயுளைப் போக்கடிப்பார்கள், அதாவது 12-ல் இருக்கும் பாபி (கொடுத்த) எல்லா ஆயுளையும், 11-லிருக்கிறவன் பாதி ஆயுளையும் 10-லிருப்பவன் மூன்றிலொன்றையும், 9-லிருப்பவன் 4-ல் ஒரு பாகத்தையும் 8-லிருப்பவன் ஐந்திலொரு பாகத்தையும், 7-லிருப்பவன் 6-ல் ஒரு பாகத்தையும் ஆயுளைக் குறைப்பான், மேற்படி வீடுகளில் சுபரிருந்தால் மேல்சொன்னதில் பாதிதான் போகும். ஓர் வீட்டில் அநேகம கிரகமிருந்தால் அவைகளில் எது பலமுள்ளதோ அதைக் கொண்டே மேற்சொன்னபடி ஆயுளைக் குறைக்கவேணும். சூரியன், செவ்வாய், சனி இவர்களில் ஒருவன் லக்கினத்திலிருந்தால் சொன்ன லக்கினத்தில் ஆயுள் பாதி குறையும். எல்லாவற்றையும் யுக்தியைக்கொண்டு புத்தியால் சொல்லவேணும்.

(4) சத்துரு வீட்டிலிருக்கும் கிரகம் மூன்றிலொருபங்கையும், நீச்ஸ்தானத்திலிருக்கும் கிரகம் பாதியையும், சூரியனேடிருப்பவன் பாதியையும் ஆயுளைக் குறைப்பான். ஆனல் புதனும் சுக்கிரனும் அஸ்தமன மடைந்திருந்தாலும், சத்துரு ராசியில் குஜன் இருந்தாலும் தோஷமில்லை. (ஆயுள் குறைக்கவேண்டாம்). இது த்ருவாபஹானி. இதற்கு காரணம்பல விருந்தாலும், பல வழியிருந்தாலும் குறைக்கவோ பெருக்கவோ ஒரே வழி வைத்துக் கொள்ளவேணும்.

(5) கிரகம் வர்க்கோத்தம மடைந்திருந்தாலும், தன் நவாம்சம், தன் திரேகாணம், தன் வீடு (ராசி) இவைகளிலிருந்தாலும் அந்த கிரக ஆயுளை 2-ஆல் பெருக்கவும் வக்ரம் அல்லது உச்சமாயிருந்தால் அக்கிரக ஆயுளை 3-ஆல் பெருக்கவேணும், இப்படி கிரக ஆயுளைக் கூட்டவும் கழிக்கவும் செய்யவேணும், இப்படி ஆயுள் கணக்கு செய்யும்விதம் முன்னேர்களால் வெகு விதமாகச் சொல்லப்பட் டிருக்கிறது. ஆனல் அதில் மிகவும் ஸாரமான (உத்தமமான) இந்த வழி தயவுசெய்து என்னல் உனக்குச் சொல்லப்பட்டது.

(6) 6, 8 ஆகிற துஷ்ட(க்ரூர)ராசியில் பாபி இருந்து அவன் சுத்தமான (அஸ்தமனமாகாத) சத்துருகிரகத்தால் பார்க்கப்பட்டால் அவன் தன் தசையில் ஜாதகனுக்கு மரணத்தைக் கொடுப்பவனுகிறுன். எந்த கிரகம் லக்னாதிபதிக்கு சத்துருவோ அவன் லக்னாதிபதியினுடைய தசையில் தன் அந்தரத்தில் வரும்போது நிட்சென்று ஜாதகனுக்கு மரணத்தைக் கொடுக்கிறுன், அரிஷ்டங்களைவிட்டு மற்றதைப் பார்த்து வயதைச் சொல்லவேணும்.

(7) 4-வயதுவரையில் தாய் (மாத்ரு) தோஷம். 8-வயது வரையில் பித்ருதோஷம், 12-வயதுவரையில் பாலதோஷம். (அதாவது அந்த குழந்தையின் தோஷம்) இவைகள் பாலர்கட்கு மிருத்யுவை (கண்டத்தை) ச்செய்யும். அதன் பிறகுதான் ஆயுள் நிர்ணயம் சாஸ்திரத்தில் ஸம்மதமானது. (அதாவது சாஸ்திரத்தில் ஏற்பட்ட ஆயுள் சரியாகவிருக்கும்).

(8) மிருத்யு (மரண) காலத்தையும் அதன் காரணத்தையும் சொல்லுகிறேன். குழந்தாய் நீ கேள். மாரகன் லக்னம், நக்ஷத்திரம், அம்சம், ராசி, இவைகளின் அதிபதிக்கு 3, 5, 7—(நக்ஷத்திரங்களி) லிருந்தோ, லக்னத்திற்கு 6-8-12-லிருந்தோ, பாபர்களின் நடுவிலோ பாபர்களால் பார்க்கப்பட்டோ விருந்தால் பாப கிரகத்தின் தசையில், மாரகாதிபதியாகிய கிரகமிருக்கும் நக்ஷத்திரம், ராசி, அம்சம் இவைகளின் திரிகோணத்தில் சனி கோசாரத்தில் வரும்போது நிச்சயமாய் மரணம். மேற்சொன்ன கோசாரத்தின் நடுவிலும் மரணம் நேரும். (ஷை காரணம் மத்தியமாகில்) அல்லது தனக்குச் சமமானவர்கட்கு கண்டம் (ஆபத்து) உண்டாகும், யோககாரகனுடைய வசத்தினால் கண்டத்தை வித்வான் சொல்லவேணும்.

(9) 8-ல் பாபரிருக்க பெரிய வியாதியால் மரணம் உண்டாகும். அல்லது அந்த ஜாதகனுக்கு துர்மரணம் ஏற்படும். யோகம் கலந்தாப்போல் (மிஸ்ரமாக) இருந்தால் பலன் கலப்பாயிருக்கும். சுபயோகமாகில் சுகமாக கஷ்டமின்றி மரணம் உண்டாகும். 8-6-க்கு அதிபதிகள் கூடினால் ரோகத்தால்தான் மரணமென்று நிச்சயம்.

(10) 8-க்கு உடையவனிருந்த ராசி, அம்சம், நக்ஷத்திரம் இவைகளின் அதிபதியின் பலத்தால் மரணமுண்டாகும். கர (துஷ்டனான) திரேக்காணாதிபதியின் ராசி அம்சம் இவைகளைக் கொண்டாவது (அந்த அதிபதிகளுக்குத் தக்க வியாதி முதலியதால்) மரணத்தைச் சொல்லலாம். அந்தந்த கிரகத்திற்கு என்ன தோஷம் சொல்லப்பட்டதோ அதால் மரணமுண்டாகும். அந்தந்த கிரகங்கட்குச் சொல்லப்பட்ட தேசத்தில் மரணத்தையும் அந்தந்த கிரகங்கட்குச் சொல்லப்பட்ட லோகாந்தரத்தையும் சொல்லவேணும். லக்னத்தில் சென்ற காலத்தைக்கொண்டு அக்காலத்தில் ஜாதகனுக்கு மோஹத்தை (விழிப்பு அல்லது அறிவின்மை) சொல்லவேண்டியது வித்துவான்.

(11) லக்னத்திற்கு உபசயஸ்தானத்தில் 8-க்கு உடையவனிருந்தால் ஆயுள் விருத்தியென்று அறியவும். மரண காரகன் பலவானாகி அங்காரகனும் பலவானாகில் கடனால் (வெட்டு காயங்களால்) பீடிக்கப்படுவான். 8-க்கு உடையவன் மறைவிடத்தில் (பீடர்க்ஷத்தில்) இருந்தால் ஆயுள் மத்திமமாயிருக்கும். 12-ல் இருந்தால் அல்பாயுள். வீணாக திரவியம் செலவாகும்.

(12) 6-8-12-ல் 8-க்குடையவ னிருந்தால் அந்த பாவங்களுக்கு விருத்தியைச் செய்வான்.

(13) 6-8-பாவங்களில் சுபர் சேர்ந்தால் மத்திமம்.

(14) 12-ல் சுபரிருந்தால் பாவவிருத்தி விசேஷமாயுண்டு. (6-8-12 தவிர) மற்றபாவங்களில் 8-க்கு உடையவனிருந்தால் அந்தந்த பாவங்களுக்கு விநாசமேற்படும். க்ரூர கிரகமும் அவனோடு சேர்ந்தால் அந்த பாவம் விசேஷமாய் குறையும். சுபயோகமிருந்தால் அந்த பாவபலன் மத்திமம். அந்த (8-க்கு அதிபதியின்) தசையும் சுபமாயிருக்கும்.

(15) 8-க்கு அதிபதி, 8-லிருப்பவன், 8-க்கு அதிபதியோடிருப்பவன்; 8-க்கு அதிபதியிருக்கும் நக்ஷத்திரம் - அம்சம் இவைகளின் அதிபதி, கர (துஷ்ட) திரேக்காணதிபதி,

(16) இவர்கள் சித்ர (துஷ்ட) கிரகங்களெனப்படுவார்கள். பாபயோகத்தை (கஷ்டத்தை)க் கொடுப்பார்கள். இந்த எட்டாம் பாவம் உனக்கு என்னால் சொல்லப்பட்டது. தோஷமற்ற சிஷ்யனே அதன் கோசாரபலனை யுக்தியைக்கொண்டு பண்டிதன் சொல்லவேணும் (ஏற்படுத்தவேணும்).

எட்டாம் பாவம் முற்றிற்று.

## ஒன்பதாம் பாவ பலன்

(1) 9-ல் சுபயோகமிருந்தால் தகப்பனார் பாக்கிய வம்சத்தில் (நல்ல பாக்கியம் (சம்பத்து) பொருந்திய குலத்தில்) பிறந்தவனா யிருப்பான், தீர்க்காயுள் உள்ளவனா யிருப்பான். ஜாதகனாவது பிதுர்பாக்கிய முள்ளவனாக விருப்பான். குருபக்தியுள்ளவனாகவும் எப்பொழுதும் தர்ம காரியம் செய்பவனாகவுமிருப்பான்.

(2) 8-ல் யோகம் மிச்ரமானால் பலன் மிச்ரம். பாபயோகமாகில் விபரீத பலன் 9-க்கு அதிபதி இருந்தால் தகப்பனார் பாலியத்திலே (ஜாதகனுக்கு) இறப்பார். பிதுர்பாக்கியமிராது. அல்லது தர்மங்கள் நசிக்கும் (வீணாகும்) சுபயோகமிருந்தால் சுவல்ப பாக்கியமுண்டு. மிச்ரமாயிருந்தால் பலனும் கலந்தாப்போ லிருக்கும்.

(3) 7-ல் சுபயோகம் பெற்றிருந்தால் தகப்பனார் தேசாந்தரத்திலிருப்பார். (அல்லது தேசாந்தரம் செல்வார்) இவன் தேசாந்தரத்தில் தர்மம் செய்வான் இவன் குருவும் தேசாந்தரத்தி லிருப்பார். ஜாதகனுக்கு தூரதேசத்தில் தபசு (தவம்) சித்திக்கும். மிச்ரமாகில் பலன் மிச்ரம். பாபயோகமாகில் தகப்பனார் சுவல்பமான ஜீவனத்தை யுடையவர். (அதாவது கொஞ்சகால மிருப்பார்) தேசாந்தரத்தில் இறப்பார் இவன் தேசாந்தரத்தில் செய்த தர்மமும் ஸ்வல்பகாலத்தில் நசிக்கும்.

(4) 6-ல் சுபயோகமிருந்தால் தகப்பனர் வியாதியால் பீடிக்கப்படுவார். பாபயோகமாகில் தகப்பனர் சம்பாதித்த பாக்கியத்தை சத்துருவான பங்காளி அல்லது மற்ற சத்துருக்கள் அபகரிப்பார்கள்.

(5) 5-ல் சுபயோகம் பெற்றிருந்தால் தகப்பனர் பிரபுவாக இருப்பார் அல்லது (ஜாதகனுடைய) பிள்ளையாவது பிரபுவாக இருப்பான். 5-க்கு உடையவன் லக்கினத்திலிருந்தால் தானே பிரபுவாக இருப்பான். மிச்ரயோகமாகில் பலன்மிச்ரம். பாப யோகமாகில் விபரீதபலன்.

(6) 4-ல் சுபயோக மடைந்திருந்தால் பூமி மூலமாய் நல்ல பாக்கிய முண்டாகும். பித்ரார்ஜிதக்ஷேத்திரம் செழிக்கும். தாய் பாக்கிய முள்ள குலத்தில் பிறந்தவளாக இருப்பாள். மிச்ர யோகமாகில் பலன் கலப்பாயிருக்கும். பாபயோகமானல் பலன் விபரீதமாயிருக்கும்.

(7) 3-ல் சுபயோகம் பெற்றிருப்பின் தகப்பனர் சொல்ப மான பாக்கியமுள்ளவராகவிருப்பார். 2-ல் சுபயோகமாகில் பிதுரார்ஜித (தகப்பன் சம்பாதித்த) தனமுள்ளவனாக இருப்பான். ஜாதகனுவது நல்ல தனபாக்கியமுள்ளவனாக இருப்பான். பாப யோக முண்டானல் பலன் வேறுவிதமாயிருக்கும்.

(8) லக்கினத்தில் சுபயோகமடைந்திருந்தால் ஜாதகன் தனது கையால் சம்பாதித்து பாக்கியமுள்ளவனாக இருப்பான். 12-ல் (சுபயோகம் பெற்று) இருந்தால் பாக்கியம் நசித்துவிடும் (இராது), 9-ல் இருந்தால் (சுபயோகமடைந்து) பாக்கிய முள்ளவன்.

(9) 10-ல் சுபயோக மடைந்திருந்தால் தர்மகாரியங்களில் பற்றுள்ளவனாக இருப்பான். எப்பொழுதும் வெகு பாக்கிய முள்ளவன். உலகமறிந்த புகழுடையவன். அநேக யாகங்களைச் செய்கிறவன். அரசனுக்கு மந்திரியாக இருப்பான். அந்தந்த யோக காரகர்களின் பலத்தைக்கொண்டு எல்லா சுபாசுபங்களையும் சொல்ல வேண்டும்.

ஒன்பதாம் பாவம் முற்றிற்று.

## பத்தாம் பாவம்

(1) 10-ல் சுபயோக மிருந்தால் (10-ம் பாவம் சுபயோகம் பெற்றிருந்தால்) சுப காரியங்களால் பிரசித்தி அடைவான். குரு வும், சுக்ரனும் இயற்கையாகவே உத்தமசுபர்கள். புதன் மத்தி மன். சந்திரன் மூன்றும்தரம். புதனும் தேய்பிறைச் சந்திரனும் பாபர்களோடு சேர்ந்தால் பாபிகள் ஆவார்கள். (இவ்விதமே) பாபரில் சூரியன் முதல் (பூர்ணபாபி), தேய்பிறைச்சந்திரனும் சனி யும் இரண்டாம்தரம். புதனும் செவ்வாயும் மூன்றும்தரம். 6-8-12-ல் இருப்பவர்கள் க்ரூரர்கள் (பாபிகள்-துஷ்டர்கள்).

(2) திரிகோணுதிபதிகள் முதல்தர சுபர்கள். கேந்திராதிபதிகள் இரண்டாம்தரச் சுபர்கள். 2-11-க்கு உடையவர்கள் மூன்ரும்தரம். அந்தந்த சுபர்களோடு (அதிபதிகளோடு) கூடிய கிரகங்களும் அப்படியே. திரிகோணங்களில் ஒன்பதாமிடம் உத்தம திரிகோணம், ஐந்தாமிடம் மத்திம திரிகோணம், லக்கினம் மூன்ரும் தரம். அப்படியே கேந்திரங்களில் தலை கீழாக 10-முதல் தரமுள்ளவைகள். (அதாவது 10-முதல் தரம், 7-இரண்டாம் தரம் 4-மூன்ரும் தரம், லக்கினம் நான்காம் தரம். அதாவது வரவரச் சுபம் குறைவு) இப்படி சுபாசுபர்களின் பலத்தைக்கொண்டு புத்தியால் அந்தந்த காலத்தின் பலன்களைச் சொல்ல வேணும்.

(3) உலகத்தில் ஜீவன வழிகள் அநேக விதமாயிருக்கின்றன. அவைகளின் ஸாரத்தை உனக்குச் சொல்கிறேன். சூரியன் புல் (வைக்கோலு மிதிலடங்கியது) வியாபாரம் வைத்தியம், தூது போகுதல், முத்து தங்கம் வியாபாரம் செய்தல் இவை சூரியன் தொழில் சந்திரன் தொழிலாவது, ஜலத்திலுண்டான வஸ்துக்கள், கிருஷி, மண்ணிலுண்டான வஸ்துக்கள், விநோதவார்த்தை, ஸ்திரீ, வட்டி வாங்குதல், இவைகள். குஜன் தொழில் செங்கல் (கட்டடம்) கட்டும் வேலை, ரஸவாதம் சண்டை (வியவகாரம்) யுத்தம், துணிச்சல், அக்னி, இவைகளாலும், அரசு செய்தல் (அல்லது அரசரைக்கொண்டும்) கொலை செய்தலாலும் ஜீவனம்) புதன் தொழில் சிற்ப சாஸ்திரத்தாலும், ஜோதிடத்தாலும், கவி பாடுதலாலும், வேதாந்த சாஸ்திரத்தின் ஆராய்ச்சியாலும், துணி வியாபாரத்தாலும், பிராணி அல்லது பக்ஷி இவைகளைப் பிடித்தலாலும் ஜீவனம். குருவின் தொழில் வேதம் சொல்லி வைத்தலாலும் புராணம் படித்தலாலும், தேவ பூஜையாலும் தர்ம மார்க்கத்தை உபதேசிப்பதாலும் ஜீவனம்.

(4) சுக்ரன் தொழில். தங்கம், மாணிக்கம், வாகனம், ஸ்த்ரீ, ஏமாற்றுவது, தயிர், நெய், பசு, இவைகளினுல் ஜீவனம். சனித்தொழில், மரம் பிளப்பது கல் உடைப்பது, விறகு சுமப்பது (விறகு-கட்டை எரித்தல்) தோல் வியாபாரம், கடிதம் எடுத்துப் போதல் (சமாசாரவர்த்தை) கிராமாதிகாரியாயிருப்பது. (மணியம் கர்ணம்) இந்திரஜாலம், தண்டிக்கும் நியாயத்தைச் சொல்வது முதலியது, மை (அஞ்சனம்) இது முதலியதால் ஜீவனம். கிரக ஸ்வரூபம் கிரகங்களின் காரகத்துவம் இதையும் பார்த்து ஜாதகனுக்கு விருத்தியை (ஜீவனத்தை-தொழிலை) சொல்லவேணும்: ராகு சனியின் தொழிலுடையவன், கேது, செவ்வாயின் தொழிலுடையவன்.

(5) 10-க்கு அதிபதியிருக்கும் அம்சம், நக்ஷத்திரம், ராசி, இவைகளின் அதிபதியின் பலத்தைக்கொண்டு ஜாதகனுடைய தொழிலை பண்டிதன் சொல்ல வேணும். அந்தந்த ஜாதி (குலம்) வர்ணம் காலம் இதற்குத்தக்கவாறு தொழில் சொல்ல வேணும்.

10-க்கு உடையவன் சுபராசி சுபாம்சம் சுபநக்ஷத்திரம் இதிலிருந்தாலும் சுபர்மத்தியிலிருந்தாலும் சுபர்பார்க்க அவனிருந்த ராசியதிபதியும் ஆட்சி உச்சம் மூலத்திரிகோணம் இதிலிருக்க அந்தந்த கிரகங்கட்கும் அந்தந்த ராசிக்கும் மேல்சொன்ன தொழில்களில் மேலான தொழி லிந்த ஜாதகனுக்கு ஏற்படுமென்று சொல்ல வேணும். மேல் சொன்ன அம்சங்கள் மத்திமமாகில் அந்தத் தொழில் மத்திமமென்றும் அதமமாகில் அதமமென்றும் சொல்ல வேணும்.

(6) யோக காரகனுக்குத் தக்கபடி தொழிலைச் சொல்ல வேணும் அதாவது-சூரியன் யோக காரகனாகவிருந்து வலுத்தவனாய் ராஜ்யராசியாகிய 10-லிருந்தால் ராஜாங்க காரியத்தை எழுதுவான் (அதாவது அரசாங்க எழுத்து உத்தியோகம்), அந்த சூரியனே குருவினால் பார்க்கப்பட்டாலும் குருவோடு சேர்ந்தாலும் தேவஸ்தானத்தில் (கோவில்களில்) எழுத்துவேலை அல்லது கோவிலைச்சேர்ந்த எழுத்துவேலை. சனி சம்பந்தம் பெற்றிருந்தால் (அதே சூரியன்) நீச ராஜ்யத்தில் வேலை. ராகு சம்பந்தம் பெற்றால் மிலேச்ச அரசனிடம் வேலை. சுக்கிர சம்பந்தம் பெற்றால் ராணிகளிடத்தில் வேலை. செவ்வாய் சம்பந்தம் பெற்றால் கிராமாதிகாரி (கர்ணம்-மணியம்) தொழில், சந்திர சம்பந்தம் பெற்றால் உப்பு பூமியில் வேலை. புத சம்பந்தம் பெற்றால் நீதிகளை எழுதும் தொழில். இவ்விதம் இங்கு ஒரு கோடி (வழி) காட்டப்பட்டது. மற்றதை யுக்தியைக்கொண்டு கல்பிக்க வேணும். மேல் சொன்ன சுப யோகம் உத்தமமாயிருந்தால் அதிகச்சம்பளம். மத்திமமாகில் சம்பளம் மத்திமம். அதமமாகில் அல்ப சம்பளம்.

(7) கிரகங்களின் (கிரகங்கட்குத்தகுந்த) உத்தியோகத்தின் தாரதம்மியங்களை (உயர்வு தாழ்வுகளை) உனக்கு நான் சொல்லுகிறேன். சூரியன் எழுத்து வேலைச்செய்பவன்; சந்திரன் பணத்துக்கு அதிகாரி (பொக்கிஷதார்); செவ்வாய் நீதிபதி; புதன் சபைகளின் அதிகாரி 2, (பஞ்சாயத்து போர்டு முதலியதின் தலைவர்) அல்லது ஜூரி முதலியது. குரு சினேகிதன் (அரசன் அல்லது பிரபுவின் ஆப்த நண்பன்) சுக்கிரன் மந்திரி; சனி தண்டிக்கும் அதிகாரமுடையவன்; ராகு கொலை அல்லது சிக்ஷை நடத்தும் இடத்திற்கு யஜமான்; கேது கொலை செய்பவன். இப்படி அந்தந்த கிரகங்கட்குத் தக்கபடி அதிகாரத்தைச் சொல்லவும்.

(8) செவ்வாய் முதலிய கிரகங்கள் 10-ல் சேரும்போது (வரும்போது) அந்தந்த பலனைக் கொடுப்பார்கள். செவ்வாய் 10-ல் வரும்போது அதிக பலவானாயிருந்தால் வெகு க்ஷேத்திரத்திற்கு அதிகாரியாக விருப்பான். சந்திரன் வலுவோடு வந்தால் கஜானா (டிரஷரி) அதிகாரியாக விருப்பான். புதன் வந்தால் (வலுவுடையவனாகி) சேனாதிபதியாவான். மற்ற கிரகங்கட்கும்

இப்படியே அந்தந்த உத்ம மத்திம அதம அதிகாரங்களை சுபம், மத்திமம், அதமம் என்கிற யோக பலத்தைக்கொண்டு சொல்ல வேண்டியது.

(9) கர்மஸ்தானாதிபதி (10-க்கு உடையவன்) தன்னிடத்திலிருந்து 12 ராசிகளிலும் (பாவங்களிலும்) சஞ்சரித்துக்கொண்டு அந்தந்த விடத்திற்குத் தக்கவாறு ஜாதகர்கட்கு விருத்தியை (தொழிலை-ஜீவனத்தை)ச் செய்கிறான். பாபர் மத்தியிலிருப்பதாலும் பாபர்கள் சேர்க்கையாலும் தசாபுத்திகளின் விபரீதத்தாலும் கிரகங்கள் தொழில் நாசத்தை (பங்கத்தை)ச் செய்யும். அந்த காலத்தை கோட்சாரத்தைக் கொண்டு சொல்லவேண்டியது. (கோட்சாரத்தில் பாபர் மத்தியம் சேர்க்கை முதலியது நேருங் காலத்தில் தொழில் நாசமேற்படுமென்று சொல்லவேணும்) தனம் (2), கர்மம் (10) ஸ்தானாதிபர்கள் சேர்ந்தால் ஜாதகன் வட்டியால் ஜீவிப்பான் 4-10-க்கு உடையவர்கள் சேர்ந்தால்பூமியால் ஜீவனம் (தொழில்), 5-10-க்கு அதிபதிகள் சேர்ந்தால் அரசன் அல்லது தெய்வம் இவர் மூலமாய் ஜீவனம். 6-10-க்கு அதிபதிகள் சேர்ந்தால் திருட்டு, வைத்தியம், தண்டனை செய்வது, முதலியதும் சண்டை, விவகாரம் முதலியதும் தொழில், 7-10-க்கு உடையவர்கள் சேர்ந்தால் அங்கு மிங்கும் போகும் வேலை-தபால்-டூர் உத்தியோகம், தூது செல்லல், வியாபாரம் முதலிய தொழில். 9-10-க்கு அதிபர்கள் சேர்ந்தால் தர்மத்தொழில், தபசு, ராஜ யோகத்தால் உண்டாகும் தொழில் முதலியது. 10-11-க்கு உடையவர் சேர்ந்தால் வர்த்தகத்தொழில், என்று அறிவாளி சொல்லலாம் 6-வது ஸ்தானத்தைக் கொண்டு சத்துரு பீடையும் 8-12-ஸ்தானங்களைக் கொண்டு தொழிலுக்கு பங்கத்தையும் சொல்லவேணும். இப்படி அந்தந்த ஸ்தான (இடத்திற்கும்)த்திற்கும் கிரகத்திற்கும் யோகத்தைக் கொண்டு விருத்தியை (தொழிலை) கற்பிக்கவேணும்.

(10) சந்திரனும் சூரியனும் இராகுவும் ஜலராசியாகி யிருக்கும் கர்ம ராசியில் (10-ல்) இருந்து அதற்கு உடையவனும் ஜல ராசியிலிருந்தால் 12-க்கு உடையவனும், ஜலராசியிலிருந்தால் கங்கா ஸ்னானம் செய்வான். புண்யதீர்த்த யாத்திரையும் செய்வான்.

பத்தாம் பாவம் முற்றிற்று.

## பதினொன்றும் பாவம்

(1) பதினொன்றும் பாவம் சுபயோகம் பெற்றிருந்தால் விசேஷமான தனலாபமுண்டு. மூத்த சகோதரன் பிரசித்தி பெற்றிருப்பான். அவன் மூலமாய் தனலாபமுண்டு. எந்த பாவத்தினுடைய அதிபதி சுபயோகம் பெற்று 11-ல் இருக்கிறானே அந்த பாவகாரகன் மூலமாய் தனலாபத்தைச் சொல்லவேணும்.

மிச்ரயோகமாகில் பலன் கலந்திருக்கும். பாபயோகம் இருந்தால் பலன் விபரீதமாயிருக்கும்.

(2) 11-க்கு அதிபதி சுபயோகம் பெற்று 10-ல் இருந்தால் வர்த்தகத்தால் சுவல்பலாபம் உண்டாகும். அல்லது யாகத்தினுல் (வைதீக வியாபாரத்தால்) அல்பமான லாபமுண்டு.

(3) 11-க்கு உடையவன் 9-ல் இருந்து சுபயோகம் பெற்றிருந்தால் தகப்பனுர் மூலமாயோ குருவின் மூலமாகவோ தர்மங்களின் மூலமாகவோ தனம் சேரும்.

(4) 11-க்கு அதிபதி 8-ல் இருந்தால் பாக்கியம் குறையும். மிச்ரயோகம் இருந்தால் மத்திமம். சுபயோகமிருந்தால் அல்பமான லாபம் உண்டாகி பிறகு அது நசிக்கும் இது நிச்சயம்.

(5) 11-க்கு உடையவன் 7-ல் சுபயோகம் அடைந்திருந்தால் ஸ்திரீ (மனைவி) மூலமாய் தனலாபமுண்டு. அல்லது தேசாந்தரத்திலிருந்தாவது லாபமுண்டாகும். 11-க்கு அதிபதி 6-ல் இருப்பின் தாயாதி (பந்து-பங்காளி)களின் சொத்து (தனம்) வரும். யுத்தம், வியவகாரம் (வழக்கு) இதுகளாலும் பணம வரும். மிச்ரயோகமானுல் மிச்ரபலன். பாபயோகமானுல் கெட்ட பலன் சத்ருவானவன் லாபத்திற்குக் குறைவைச் செய்வான்.

(6) 5-ல் சுபயோகம் பெற்றிருந்தால் பிரபுவினிடமிருந்தோ தெய்வத்தின் மூலமாகவோ பிள்ளையிடமிருந்தோ பணம் வரும் என்று புத்தியைக்கொண்டு விசேஷமாய் சொல்லவேணும்.

(7) 4-ல் சுபயோகமடைந்திருந்தால் தாயாராலும் பூமியாலும் கிருஷி வியாபாரத்தாலும் லாபமுடையவனுவான். மிச்ரயோகமானுல் மிச்ர பலன். பாபயோகமாகில் விபரீத பலன்.

(8) 3-ல் சுபயோக மடைந்திருந்தால் சகோதரனுலும் பாட்டாலும் தனலாபத்தைச் சொல்லவேணும்.

(9) 2-ல் சுபயோக மடைந்திருந்தால் வட்டிக்கு விடுவதால் தனலாபமுண்டாகும்.

(10) லக்னத்தில் சுபயோகம் பெற்றிருந்தால் ஜாதகனுடைய யோக காரகன்மூலமாய் தனலாபம். மிச்ர யோகமாகில் மிச்ர பலன் பாபயோகமானுல் விபரீத பலன்.

(11) 12-ல் சுபயோக மடைந்திருந்தால் மூத்த சகோதரன் இறப்பான். லாபங்களின் குறைவையும் சொல்லவேணும். எல்லாவற்றையும் யூகித்து நிச்சயித்து சொல்லவேணும்.

(12) 11-க்கு அதிபதி பாபயோகம் பெற்று விபத் முதலிய மூன்று (3-5-7) நக்ஷத்திரங்களிலிருந்தால் எக்காலத்திலும் தரித்திரனுய் பிச்சையெடுப்பான். இது நிச்சயம்.

பதினொன்றும் பாவம் முற்றிற்று.

## பன்னிரண்டாம் பாவம்

(1) 12-ல் எந்த பாவாதிபதி இருக்கிருனே அல்லது 12-க்கு உடையவன் எந்த பாவத்திலிருக்கிருனே அந்தந்த பாவங்கட்கு ஹானியுண்டு. சுபயோகமிருந்தால் முக்தி(மோக்ஷ)முண்டு. மிச்ர யோகமாகில் கொடையாளியாக (தானம் செய்கிறவனுக) இருப்பான். பாபயோகமிருந்தால் துர்கதியை அடைவான் (நரகமுண்டு) 12-ம் ராசி சரமாயிருந்தால் சரகிரகமுமங்கிருந்தால் தேசம் தேசமாய் சுற்றுவான (அல்லது தேசாந்தரம் செல்வான்) சுபயோகம் பெற்றிருந்தால் (12-ல் சுபரிருந்தால்) தேசாந்தரத்தில் சுகத்தையடைவான். பாபர் இருந்தாலும் பார்த்தாலும் பிச்சையெடுப்பான். மிச்ரயோகம் பெற்றல் மிச்ர பலன்.

(2) 12-க்கு அதிபதி 3-5-7-(விபதாதி) நக்ஷத்திரத்திலிருந்து பாபர் மத்திமம் அல்லது பாபர் பார்வை பெற்றிருந்தாலும் 12-ம் ராசி சனி மாந்தி (குளிகன்) முதலிய கிரகத்தோடு கூடியிருந்தாலும் அநர்த்தங்களால் (பெரிய கஷ்டங்களால்) பணம் செலவழியும், அல்லது நரகத்தையடைவான். பாபத்தொழில் செய்வான். லக்னதிபதியும் பரமோச்சமடைந்து 12-க்கு உடையவனும் பரமோச்சம் பெற்றிருந்து 12-ம் ராசி சுபகிரகங்களோடு கூடியிருந்தால் நிச்சயமாய் ஜீவன் முக்தனுகிருன். யோகம் கலப்பாயிருந்தால் சுவர்கசுகம். பாபயோகமானல் நரகத்தை அடைவான்.

(3) 12-ல் சூரியனிருந்தால் ராஜமூலமாய் பணச்செலவும், குஜனிருந்தால் துர்மார்க்கத்தாலோ சத்துருவின் மூலமாகவோ பணச்செலவு புதனிருந்தால் படிப்பின்மூலமாய் பணச்செலவு. குரு இருந்தால் எப்பவும் பணம் சேர்ப்பான். சனி அல்லது ராகு (12-ல்) இருந்தால் பலவகையில் செலவு கேது இருந்தால் பணம் சம்பாதிப்பான். இப்படி எல்லாம் யுக்தியைக்கொண்டு பலன் கர்பிக்கவேணும். இதைத் தவிர (இதில் சொல்லப்படாத இராத) மற்றதையும் ஜோதிடச் சாஸ்திரத்தில் சொல்லியபடி எல்லாம் யுக்தியைக்கொண்டு ஏற்படுத்தவேணும் (சொல்லவேணும்).

பன்னிரண்டாம் பாவம் முற்றிற்று.

மூலம்:—இவ்விதம் 12 பாவங்கட்கும் சொல்லப்பட்ட கிரகங்களின் சேர்க்கை, இருப்பு, பார்வை இவைகளால் அந்தந்த கிரகங்களின் பலனை ஜாதகனின் ஆயுள் உள்ளவரை அறிந்து சொல்ல வேண்டும்.

இதன் விவரமான பொருள்:—பிறந்த காலம் முதல் உயிருள்ளவரை வரப்போகும் பலனை நிர்ணயிப்பதுதான் ஊஹமென்று சொல்லப்படுகிறது, அதிலும் இந்த பலனை இந்த கிரகம் கொடுக்குமென்று வரையறுத்து (ஓரிடத்தில் மறுத்து மற்றொரிடத்தில்-அல்லது சில விடத்தில் தள்ளி) சில விடததிலுண்டென்று

கற்பிப்பதுதான் அபோஹமென்று சொல்லப்படுகிறது. ஆதலால் "அநேகஹோராதத்வஜ்ஞ:...." என்கிற மூல சுலோகத்திலிருக்கும் மூன்றும் விசேஷத்தை விவரிப்பதற்கு (விளக்குவதற்கு) இந்த சுலோகம் ஆரம்பித்தது. ஆதலால் (இதன்பிறகு) மூன்றுவது (நான்காவது) விசேஷமாகிய "ஸித்தமந்திர" என்கிறபதம் விவரிக்கப்படுகிறது மந்திரமாவது இதற்கு இது பலன் என்று கற்பித்ததில் ஓர் பலன் ஓர் கால விசேஷத்தில் உண்டாகுமென்றும் சில பலன்களைத் தனித்தனியாக ஏற்படுத்துவதுதான். அப்படிப்பட்ட பலன் பிரச்னம் செய்தகாலத்தின் முன் உண்டாகியிருந்து அது அனுபவத்திற்கு ஒத்ததாக இருந்தால் அப்போது அனுபவத்தில் சித்தமானது பலிக்கிறது இந்த இந்த தசைகட்டு இந்த இந்த பலனென்று பலன் கல்பிப்பது சரியாக ஏற்படுமானால் அவன் (ஜோதிடன்) ஜாதகத்தை அறிந்தவனுகிறுன் என்று "அநேக ஹோராதத்-வஜ்ஞ: பஞ்ச சித்தாந்த பாரக: ஊஹாபோஹபடு: சித்தமந்த்-ரோஜாநாதிஜாதம்" என்கிற மூல சுலோகத்தில் முடிக்கப்பட்டிருக்கிறது (சத்தியாச்சாரியார் முடித்திருக்கிறுர்) இப்படி முன் சொல்லப்பட்ட நான்கு அம்சம் (விசேஷமும்) பொருந்திய-நான்கு பதங்களின் அர்த்தம் பொருந்திய ஜோதிடன் கேட்டவுடனேயே ஜாதகத்தின் மேல் பலன்களை நன்ருகச் சொல்வதில் தைரியம் பெற்றவனுகிறுன் என்று இந்த சுலோகத்தினுல் சொல்லப்படுகிறது.

இந்த நான்காவது விசேஷத்தினுல் "சித்தமந்த்ர" என்பதனுல் தசைகளின் பேதங்களும் புக்திகளின் பேதங்களும் சொல்லப்பட்டதாகின்றன, (அதாவது அந்தந்த தசா புக்திகட்குத் தக்க பலன்களைக் கற்பிக்கத் தெரிந்தவன் என்கிற அர்த்தம் அதில் வருவதால் அந்த தசாபுக்தி முதலியவைகளைச் சொல்லவேண்டியிருக்கிறதென்பது கருத்து)

## தசாபுக்தி காலங்களின் பேதம்

(1) நக்ஷத்திரதசை (உதய) லக்னமோ சந்திர லக்னமோ எது ஜனனகாலத்தில் வலுவாயிருக்கிறதோ அது முதல்கொண்டு தசையை ஏற்படுத்தவேணும். அதில் லக்னம் வலிவுள்ளதாயிருந்தால் அதை ஒன்பதாகச் செய்து எந்த பாகத்தில் ஜாதகன் உதிக்கிருனே அதை அதாவது அந்த நக்ஷத்திரத்தின் பாகத்தை அறிந்து அது முதல் தசைகளை கிரமமாய் ஏற்படுத்த வேண்டியது. சந்திர லக்னம் வலுத்திருந்தால் சந்திரன் இருக்கிற நட்சத்திரம் முதல் இப்படியேதான் தசைகளை கல்பிக்கவேணும்.

(2) (மேல் சொன்ன) பாக நக்ஷத்திரத்திற்கு ஜன்மமென்றும், இரண்டாம் நக்ஷத்திரத்திற்கு ஸம்பத்து என்றும், 3-வதுக்கு விபத்து என்றும் 4-வதற்கு க்ஷேமம் என்றும் 5-வதுக்கு ப்ரத்யரம் என்றும் 6-வதுக்கு ஸாதகம் என்றும்

7-வதற்கு வதம் என்றும் 8-வதற்கு மைத்ரம் என்றும் 9-வதற்கு பரமமைத்ராம் என்றும் பெயர்களை ஜோதிடம் அறிந்தவர்கள் கொடுத்திருக்கிறார்கள். அந்தந்த திரிகோணங்களும் அந்த (விபத்து முதலிய) அந்த பெயருடையது. அதன் தசைகளுக்கும் அந்தந்த பெயர்கள் அதாவது விபத் தசை முதலியது என்ற பெயருண்டு.

(3) இரண்டாவது, நாலாவது, ஆறுவது, எட்டாவது நக்ஷத்திரங்கள் ஆக இந்த நக்ஷத்திரங்கள் அவைகளின் தசையில் மனிதர்கட்கு சுப-பலனைத்தரும். ஜன்மம், (1-10-19-வது நக்ஷத்திரம்) பரமமைத்திரம்-(9-18-27-வது நக்ஷத்திரம்) இந்த நக்ஷத்திரம் மத்திமம்-மத்திம பலனைத்தரும். 3-5-7-வது நக்ஷத்திரங்கள் மனிதர்கட்கு துக்கத்தை (துன்பத்தை)த் தருகின்றன. (இப்படி அசுவனி முதலிய நக்ஷத்திரங்கள் மூன்று தரம் உதிக்கின்றன (திருப்பி திருப்பி வருகின்றன.)-அசுவனி முதலியதின் உதயத்தினுலிவ்விதம் மூன்று தரம் ஜன்மம் முதலியது நேரும்.

(4) 2-4-6-8-வது நக்ஷத்திரங்களின் திரிகோணங்கள் உத்தம பலம், அவைகளின் கேந்திர ஸ்தானம் மத்திம பலம், அவைகளின் 6-8-12-ஸ்தானம் அல்ப பலம், (அதி சூக்ஷ்ம பலம்), விபத் முதலிய நக்ஷத்திரங்கட்கு (.-5-7 நக்ஷத்திரங்கட்கு) தலைகீழாக மேல் சொன்னபடி உத்தம மத்திய அதம பலத்தை யறியவும் (அதாவது 6-8-12-ஸ்தானங்கள் உத்தம பலம், கேந்திரஸ்தானம் மத்திமம், திரிகோணம் அதமம்).

(5) திரிகோண ராசியிலிருப்பதாலும் சுபகிரகங்களின் ஆதிபத்தியத்தாலும் சுபமான பாவங்களிலிருப்பதாலும் (அதாவது இந்த காரணங்களைக்கொண்டு) சுப நக்ஷத்திரங்கள் தானகவே சுபமாயிருப்பதால் அதிக பலமுள்ளதாகவாகின்றன. விபத்து முதலிய நக்ஷத்திரங்கள் ஏற்கனவே பாபமாயிருப்பதால் பாபர்களின் மத்தியில் அல்லது பாபரோடு கூட இருப்பதாலும் பாப கிரகங்களின் ஆதிபத்தியத்தாலும் மேலும் மேலும் பலத்தைச் சொல்லவேணும்.

(6) ஜன்மம் முதலிய ஆறு நக்ஷத்திரங்களிலும் (சுபர் மத்திமம் சுப கிரகங்களின் ஆதிபத்தியம் திரிகோணத்திலிருப்பது ஆகிற) மூன்று பலமும் சேர்ந்தால் அந்த நக்ஷத்திர தசா காலத்தில் ஜாதகனுக்கு சுபங்கள் உண்டாகும். வாகனம் ஐசுவரியம் (அல்லது வாகனங்களின் ஐசுவரியம்) உண்டாகும். விபத்து முதலிய மூன்று நக்ஷத்திரமும் மேல் சொன்ன மூன்று பலத்தைப் பெற்றிருந்தால் அந்த ஜாதகனுக்கு எப்பவும் துக்கம் (துன்பம்) உண்டாகும்.

(7) பலாதிக்கமுள்ள சுப நக்ஷத்திரங்களில் சுப கிரகம் ஸஞ்சாரம் செய்யும்போது கோசார காலமும் சுபமாயிருக்க

விசேஷமான சுபங்கள் உண்டாகும். சுபக் கிரகங்கள் 3-5-7- நக்ஷத்திரங்களில் சஞ்சாரம் செய்தால்மத்திம பலன் இவைகளில் பாபர்கள் சஞ்சரித்தால் விசேஷமான அசுப பலன்களுண்டாகும். பாபக்கிரகங்கள் 1-2-4-6-8-9 நக்ஷத்திரங்களில் சஞ்சரிப்பாராகில் அசுபங்கள் அதிகமாக உண்டாகாது.

(8) ஜன்மம் முதலிய நக்ஷத்திரங்களில் (அதாவது 1-2-4-6-8-9. இவைகளில் ஒரு கிரகமிருந்து அக்கிரகமிருக்கும் திரிகோணத்தில் குரு வருங்காலத்தில் (கோட்சாரத்தில்) சுபம். குரு (மேல் சொன்னபடி) புதனுடைய திரிகோணத்தில் சஞ்சாரம் செய்தால் அதிகமான வித்தைகளின் லாப முண்டாகும். குரு தன்னுடைய (குருவினுடைய) திரிகோணத்தில் சஞ்சாரம் செய்தால் புத்திரலாபமும் பணமும் ஏற்படும், தேவதைகளின் உத்ஸவங்கள், ஸத்ஸங்கம் இவைகளால் மனதிற்கு ஒரு சந்தோஷத்தையும் தருவார். குரு சனியின் திரிகோணத்தில் சஞ்சாரம் செய்தால் அரசர்களின் பிரீதியையும், பணம் உண்டாவதையும், உத்யோக லாபத்தையும், புகழையும், கிராமாதிகாரியாயிருப்பதையும் குரு உண்டு பண்ணுவார். ராகுவின் திரிகோணத்தில் சஞ்சாரம் செய்தால் விவாதம் (வியவகாரம்) முதலியதில் ஜயத்தையும் (கலியாணம் முதலிய சுபத்தையும் ஜயத்தையும்) தருவார், தாழ்ந்த ஜாதி பிரபுவின் மூலமாய் வெகுமானமும் உண்டாகும். மேல் சொன்ன நக்ஷத்திர திரிகோணம் பலமாயிருந்து குருவும் பலவானுகி அப்படி சேர்ந்தால் இப்பொழுது சொன்ன பலனுண்டாகுமென்று சொல்லவேணும். மத்திமமாயிருந்தால் மத்திம பலன். நக்ஷத்திர கோணங்கள் பலமில்லாமலிருக்க குருவும் பலமில்லாமலிருந்தால் மேல் சொன்ன அந்தந்த படி பலன்களைப்பற்றிய பேச்சு மாத்திரம் ஜாதகனுக்கு ஏற்படுமேயன்றி காரியம் முடியாது, பலன் கிடைக்காது.

(9) சுபக் கிரகங்களின் தசைகளிலும் புக்திகளிலும் மேல் சொன்ன பலன் பொய்யாகாது. மற்ற சமயத்தில் அந்தந்த பலன்களின் பேச்சுமட்டுமோ. அல்லது அந்தந்த பலன்களுக்குப் பிரஸக்தி (அதாவது பலனுண்டாகக்கூடிய சந்தர்ப்பம்) உண்டாகும்.

(10) விபதாதிகளின் மூன்றிலொன்றில் (3-5-7-ல் ஒன்றில்) ராகு எதில் இருக்கிறுனே அந்த திரிகோணத்தில் சனி சஞ்சரிக்கும்போது ஜாதகன் பிரேத கார்யங்களை (இறந்தவர்களின் கர்மங்களை அதாவது-இறந்தவர்க்குச் செய்யவேண்டிய தகனம் முதலியதை)ச்செய்வான். அரசர் அல்லது ஜனங்களின் தலைவன் (பிரபு-ஜமீன்தார்-நாட்டான்) மூலமாய் தன நாசம் ஏற்படும். அல்லது சத்துரு மூலமாயும் தன நாசம் ஏற்படும், (சத்துருக்காவது தன நாசம் ஏற்படும் என்றும் அர்த்தமாகிறது) திருட்டுத்தனத்தைப் பற்றிய தோஷமும் ரோகத்தால் உபத்திரவமும் விஷங்களால் பாதையும் உண்டாகும்.

(11) சனி-ராகு-இவர்கள் பாப நக்ஷத்திரங்களிலோ விபத்து முதலிய மூன்று (3-5-7) நக்ஷத்திரங்களிலோ கூடினால் பாப கிரகங்களின் தசாகாலத்தில் தசாந்தரத்தில் மேல் சொன்ன இந்த பலன் உண்மையாக உண்டாகும். சுப கிரகங்களின் தசா காலத்தில் சனி சுப நக்ஷத்திரத்திலிருந்தாலும் ராகு சுப நக்ஷத்திரம் அல்லது சுபஸ்தானத்திலிருந்தாலும் மேல் சொன்ன பலன்களின் பேச்சுமட்டும் உண்டு அந்த கெட்டபலன்கள் உண்டாகாது.

(12) உண்மையான (ஸ்த்யாச்சாரியர் சொன்ன) நக்ஷத்திர (தசா) பலன் இங்கு கொஞ்சம் கோடி (வழி) மட்டும் காண்பிக்கப்பட்டது (சொல்லப்பட்டது) இந்த பலனை சுபர் அல்லது பாபியான கிரகங்களின் தசாபுக்திகளில் சேர்த்துச் சொன்னால் ஜோதிடன் உண்மை சொல்கிறவனாகவும் ஐயமுள்ளவனாகவும் ஆகிறான். இது நிச்சயம்.

நக்ஷத்திரபலன் முற்றிற்று.

## தசாபுக்திகளின் கிரமம்

(1) கிருத்திகை முதலிய ஒன்பது நட்சத்திரங்கட்கும் (ஒவ்வொரு மூன்று நட்சத்திரங்கட்கும்) சூரியன் முதலியவர்கள் நாயகர்கள் (அதிபதிகள்) என்று சொல்லப்பட்டிருக்கின்றது. கிரகங்கட்கு நைசர்கிக (சுபாவமான) சுபத்துவமும் அந்தந்த பாவங்கட்கு அதிபதியாகவிருப்பதால் சுபா அசுபனாகவிருப்பதும் பஞ்சசித்தாந்தங்களின் வழியும் முன்பே என்னால் சொல்லப்பட்டிருக்கிறது. அதெல்லாவற்றையும் அந்தந்த தசாகாலங்களில் சேர்த்து புத்திமானாக விருப்பவன் சொல்ல வேணும்.

(2) ஜன்ம நக்ஷத்திரத்தின் அதிபதியான கிரகங்கள் ஒன்பதையும் பார்த்து வரிசையாக (கிரமமாக) அந்தந்த தசைகளில் வருஷம் முதலியதை ஏற்படுத்தி பலனை ஊகிக்க வேணும். (அதாவது மேல் சொன்ன கிருத்திகை-உத்திரம்-உத்திராடம்-என்றிப்படி ஒவ்வொரு மூன்று நக்ஷத்திரங்கட்குமுடைய சூரியன் முதலிய கிரகங்களின் தசை முதலியதை ஊகித்து அறிந்து பலனைச் சொல்லவேணும்)

(3) சுயமாகவே சுபனாகவிருக்கிறவன்; சுப நக்ஷத்திராதிபதி; சுப பாவங்களின் ஆதிபத்தியமுள்ளவன்; சுப க்ஷேத்திரத்தை அடைந்தவன், (அல்லது விட்டவன்:) வர்க்காதிக்கத்தால் பலம் பெற்றவன்; (ஏரும் வழியிலிருப்பதால்) ஆரோகண பலத்தையுடையவன்; வக்ரன்; பரம உச்சமடைந்தவன்; என்றிப்படி எட்டு (ஒன்பது) விதமாய் பலமுள்ளவர்கள் சுப பலனைக் கொடுப்பார்கள்.

(4) சுயமாய் பாபி, அசுப நக்ஷத்திரத்திலிருப்பவன், 6-8-12-ராசியின் அதிபதிகள்; சத்துரு ராசி நீச ராசி, அஸ்தமன ராசியாகிய சூரியனுக்கு ஏழாவது ராசியிலிருந்து லக்கினத்தின்

கேந்திரத்தில் அல்லது திரிகோணத்திலிருப்பவன்:(ஜன்மகாலத்தில்) அதிசாரமுள்ளவன் ஜன்மகாலத்தில்; பரம நீசமாயுள்ளவன்; என்றிப்படி எட்டுவிதமாக பாபிகள் மிகவும் பலமுடையவர்களாவர். இப்படிச் சொன்ன பலமுள்ள பாபிகளிருக்கும் நக்ஷத்திரம் அம்சம் ராசி இவைகளின் அதிபதிகளும் பலமுள்ள அசுபர்கள். இப்படியே பலமுள்ள சுபரிருக்கும் நவாம்சாதிபதிகளும் நக்ஷத்திராதிபதிகளும், முன் சொன்ன பலமுள்ள சுபர்களும் பலம் பெற்றிருந்தால் அவர்களின் தசாகாலத்தில் விசேஷமான சுப பலனைத் தருவார்கள். மேல் சொன்ன அசுப கிரகங்கள் பலமுள்ளவராகில் எப்பவும் மனிதர்கட்கு துக்கத்தைத் தருவார்கள். அசுப கிரகம் (ஸ்தானம்) நக்ஷத்திரம் அம்சம் இவைகளின் அதிபதிகள் நல்ல பலமுள்ளவராகில் மனிதர்கட்கு அவர்களின் தசாகாலத்தில் எப்பவும் அவர்கள் துக்கத்தைத் தருவார்கள்.

(5) அந்தந்த கிரகங்களின் தசைகளுக்குண்டான வருஷங்கள் முன்னோர்களால் வெகு விதமாய் செய்யப்பட்டிருக்கின்றன (சொல்லப்பட்டிருக்கின்றன). எல்லாவற்றிலும் நக்ஷத்திர தசை சிறந்ததென்று சோதிடமறிந்தவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது, ஆதலால் அந்த வழியைக்கொண்டே தசையானது பண்டிதர்களால் அறிய (எடுத்துக்கொள்ள)த்தக்கது. முதலில் தசைகளின் கிரமத்தை பிறித்து அதன்படி கிரமமாய் அந்தந்த பலனை எழுத வேண்டும்.

தசாபல நிர்ணயம் முற்றிற்று.

## லக்கினாதிபதியின் தசாபலன்

(1) அஷ்டாங்க பலத்தோடு கூடிய (முந்தி எட்டு விதமாய் சொல்லப்பட்ட பலமுள்ள கிரகத்தை இது குறிக்கும்) லக்னாதிபதியின் தசை வருங்காலத்தில் ஸ்திரமான ராஜ்யலக்ஷ்மியையும் நல்ல கீர்த்தியையும் தன சம்பத்தையும் ஆரோக்கியத்தையும் பராக்கிரமத்தையும் தன் ஜாதி குலங்களில் தனக்கு பூஜையையும் (கௌரவத்தையும்) வளர்பிறை சந்திரன்போல் மேலும் மேலும் ஜாதகன் அடைவான்.

(2) லக்னாதிபதி பலமில்லாமல் சத்துரு, நீசம், அஸ்தம், இந்த ராசிகளை அடைந்திருந்தால் அவன் தசையில் ஜாதகன் பிரசித்தியிராதவனாய் தரித்திரனாய் ஏவல் தொழில் செய்வான். குரூபியாயும் பலமிராதவனாகவும் துஷ்டனாயும் மனதில் சஞ்சலமுடையவனாயு மிருப்பான். உதயாம்சத்திலிருந்து வியயாம்சத்திலிருந்தால் ஜாதகன் எப்பவும் ஸஞ்சாரம் செய்கிறவனாயிருப்பான். அந்த புக்தி (அவன் புக்தி)யில் மலினமாயும் (அழுக்கு-தோஷம்-உடையவனாகவும்) துக்கமுள்ளவனாகவும் பிச்சை எடுப்பவனாகவு மிருப்பான்.

(3) லக்னாதிபதி இரண்டாம் பாவத்தின் அதிபதியோடு கூடி இரண்டாம் பாவத்திலிருந்தால் அந்த தசையில் தனம் வரும். விசேஷமாக நிச்சயமாய் நல்ல பணம் வரும். அநேகம் பேருடன் சாப்பாடும் நாட்டியமும் நல்ல சாப்பாடும் அதற்கு தங்க பாத்திரங்களும் வெள்ளி பாத்திரங்களும் ஏற்படும். (வெள்ளி, தங்க பாத்திரங்களில் அன்னம் அல்லது ஜலம் முதலியது சாப்பிடுவான்). அதிலும் குரு சேர்ந்தால் தங்க பாத்திரமென்றும் சுக்கிரன் சேர்ந்தால் வெள்ளி பாத்திரம் என்றும் அந்தந்த கிரகங்கட்குத் தகுந்த லோஹ பாத்திரங்கள் (தாமரம் முதலியனுகள்) அந்தந்த தசாந்தரத்தில் உண்டாகும். குடும்பம் தனம் இவை விருத்தியடையும். எல்லாவற்றிலும் ஜயமுள்ளவனுகவிருப்பான். எல்லாவற்றிலும் இவன் சொல் பலிதமாகும். கூத்து முதலியதைப் பார்ப்பான், லக்னாதிபதி தன பாவாதிபதியோடு கூடியிருப்பினும் தனுதிபதி நவாம்ச சக்கிரத்திலுள்ள ராசிக்கு 6-8-12-வது ராசியில்நவாம்ச சக்கிரத்தில் லக்கினுதிபதி இருந்தால் அவன் தசா காலத்தில் மேல் சொன்னதெல்லாம் விபரீதமாயிருக்கும், சுவல்ப லாபம் உண்டாகும். சில சமயம் அல்லது சிலவிடத்தில் லாபத்திற்கு பங்கமும் ஏற்படும். சில சமயம் கஷ்டமும் சில சமயம் சௌக்கியமும் கலந்தாப்போலிருக்கும்.

(4) லக்னாதிபதி பலம்பெற்று, மூன்றுக்கு உடையவனேடு கூடி மூன்றிலிருந்தால் அந்த தசை (அவன் தசை)யில் விருத்தியுண்டு. (அதாவது) சகோதரன் உண்டாவான். அவனுல் தனம் உண்டாகும். மனேதைரியம் நிலையாயிருத்தல் புராணம் படிப்பது முதலியது ஸங்கீத வித்தையின் விநோதங்கள் பரிகாச வார்த்தைகள் காதிற்கு ஆபரணம் இவைகள் கிடைக்கும் (உண்டாகும்). லக்னாதிபதி, சகோதரஸ்தானுதிபதி அம்ச சக்கரத்திலிருக்கும் ராசிக்கு 6-8-12-ல் அம்ச சக்கிரத்திலிருந்தால் முன் சொன்ன ஸ்தான பலன் கொஞ்சமாகவே இருக்கும். சில சமயம் (அல்லது கொஞ்சம்) சகோதரரோடு சத்துருபாவம் அதாவது விரோதம் உண்டாகும். (அந்தந்த) யோகங்களின் விருத்தியும் கொஞ்சம் பங்கப்படும் எல்லாம் கலந்தாப்போலிருக்கும்.

(5) லக்னாதிபதி 4-க்கு உடையவனேடு கூடி 4-ல் இருந்தால் வாகனம் வஸ்திரம் பசு (மிருகம்-மாடு முதலியதும் பூமி தோட்டம் சுகம் முதலியதும் புது வீட்டின் லாபமும் தன் பந்து ஜனங்கள் தன்னை பூஜிப்பதும் எங்கும் சிநேகிதர்களும் வித்தையின் பயிற்சியில் நல்ல உழைப்பும் வித்துவான்களின் கூட்டத்தில் சேர்க்கையும் அதனுல் சுகமும் நல்லவர்களின் சேர்க்கையும் பொறுமையும் உண்டாகும். இந்த பலன்கள் லக்கினுதிபதி தசையில் நிச்சயம்.

(6) 4-க்கு உடையவன் நவாம்ச சக்கிரத்தில், தானிருக்கும் அம்சத்திற்கு 6-8-12-ல் லக்கினுதிபதி நவாம்ச சக்கிரத்தில்

பிருந்தால் முன் சொன்ன பலன் கொஞ்சம் தான் கிடைக்கும். தாயாரோடு விரோதம் ஏற்படும். வாகனத்திலிருந்து விழுவதும் பூமி, தோட்டம் முதலியதால் கொஞ்சம் நஷ்டமும் உண்டாகும். கொஞ்சம் துக்கமும் கொஞ்சம் ஸுகமும் கொஞ்சம் கஷ்டமும் கொஞ்சம் சுகமிராமலிருப்பதும் எல்லாம் கலந்தாப்போலிருக்கும். மற்றதையும் யுக்தியால் சொல்ல வேணும்.

(7) லக்கினாதிபதி 5-க்கு உடையவனோடு கூடி 5-ல் இருந்தால் பிரபு அல்லது அரசனுடைய ப்ரீதியும் மனதில் சந்தோஷமும் தன் குலத்தில் (வம்சம் அல்லது கூட்டத்தில்) பெரியவனாக விருப்பதும் உண்டாகும். பிள்ளையுண்டாகும் அரசர்கட்கு மந்திரியாகவோ அல்லது தானே அரசனாகவோ ஆவான். தெய்வங்களின் பூஜையில் ப்ரீதியும் (பூஜையால் தெய்வங்களின் ப்ரீதியும்) தகப்பனார் ப்ரீதியும் உண்டாகும். வெகு கிராமங்கட்கு அதிபதியாயிருப்பதும் அரசாங்க வேலையில் ப்ரவேசமும் உண்டாகும்.

(8) முன் சொன்னபடி நவாம்ச சக்கிரத்தில் 5-க்கு உடையவனின் அம்சத்திற்கு 6-8-12-ல் லக்கினாதிபதியிருந்தால் முன் சொன்னதெல்லாம் சுவல்பமாயிருக்கும் பிரபுவின் த்வேஷம் கொஞ்சம் அல்லது சில சமயம் நேரும். தகப்பனார் பிள்ளை இவர்களின் விரோதம் தேவதை (தெய்வங்களின்) பூஜையில் ஒய்வு அல்லது அருசியும் ராஜாங்க காரியத்தில் அபவாதமும் நடுச் சபையில் அவமரியாதையும் வீணாக மந்திரங்களை உபாசனை செய்வதும் நிச்சயமாய் உண்டாகும்.

(9) லக்கினாதிபதி 6-க்கு உடையவனோடு கூடி 6-லிருந்தால் ரிணம் (கடன்) ரோகம் முதலிய உபத்திரவங்களும் பிரபு அல்லது அரசரால் உபத்திரவமும் உண்டாகும். தாயாதி பந்துக்களின் துவேஷத்தால் சில உபத்திரவமும் வியவகாரமும் உண்டாகும். யுத்தத்தில் அபஜெயம் (அவமானம்) நேரும். ஆயுதத்தினால் காயம் (வெட்டு முதலியது) உண்டாகும். அங்கங்களில் (சரீரத்தில்) குறைவு உண்டாகும். தரித்திரம் ரோகபீடை இவை உண்டாகும்.

(10) 6-க்கு உடையவன் நீச (பாக)த்திலிருந்து லக்கினாதிபதி தன் உச்சாம்சத்திலிருந்தால் ஜாதகன் ரோகமிராதவனும் திடகாத்திரனும் சேனாதிபதித் தொழிலுடையவனாகவு மிருப்பான். யுத்தத்தில் ஜயமடைவான். (சத்துருக்களைவெல்லுவான்) சூரன். வியவகாரங்களில் ஜயம் பெறுவான். முன் சொன்னபடி நவாம்ச சக்கிரத்தில் லக்கினாதிபதி 6-க்கு உடையவனுடைய அம்சத்திற்கு 6-8-12-ல் இருந்தால் சத்துரு ஜயமடைவான். முன் சொன்ன பலன்கள் ஒன்றும் கிடையாது. லக்கினாதிபதியின் தசை வருங்காலத்தில் ஜாதகனுக்கு முன் சொன்ன நல்ல பலன் களைப்பற்றி பேச்சுமட்டும் வரும் பலன் கிடையாது.

(11) லக்கினாதிபதி 7-க்கு உடையவனோடு கூடி 7-ல் இருந்தால் அவன் பாகத்தில் (தசையில்) யாத்திரையும் அதில் சுபமும் உண்டாகும். மனைவி கிடைப்பாள். (விவாகம் நடக்கும்) அனுபவிக்க ஸ்த்ரீ கிடைப்பாள் (ஸ்த்ரீயின் போகம் உண்டு) சந்தனம் பூமாலை முதலிய சுகமும் உண்டாகும். 7-ம் வீடு சரமாயிருந்தால் வெகு தூரத்தில் பிரயாணம் நேரும் ஸ்திர ராசியாயிருந்தால் தன் தேசத்திலேயே வேரிடத்தில் பிரயாணம். உபய ராசியாயிருந்தால் தேசாந்திரத்தில் ஸ்திதி (இருப்பு-வாஸம்) நேரும். லக்கினாதிபதி பலவானாயிராவிடில் ஜாதகன் வீணாகச் சுற்றுவான், (பிரயாணம் பயன்படாது).

(12) முன் சொன்னபடி நவாம்ச சக்கிரத்தில் 7-க்கு உடையவனுடைய அம்சத்திற்கு 6-8-12-ல் லக்கினாதிபதி இருந்தால் ஜாதகன் ஓரிடமும் போகமாட்டான் ஓரிடத்தில் நிற்கவும் மாட்டான் மரணமும் உண்டாகாது சுபம் முதலியதும் உண்டாகாது. மனைவி, தனக்கு விரோதமாயிருப்பாள். போகத்திற்குத் தடங்கள் உன்டாகும். சுபகாரியங்கட்கு இடையூறுகள் நேறும் இன்னும் மற்றதையும் யுக்தியால் கற்பிக்கவேணும்.

(13) லக்கினாதிபதி 8-க்கு உடையவனோடு கூடி 8-லிருந்தால் தரித்திரத்தால் கஷ்டப்படுவான். பெரிய வியாதி யுண்டாகும். எப்பொழுதும் பாபமான (கொடிய) காரியங்களைச் செய்வான். கடன் அதிகமாகும். ஹீனமான (தாழ்ந்த) தொழில் செய்ய ஆரம்பிப்பான், இது லக்கினாதிபதியின் தசாகாலத்தில் உண்டாகும்.

(14) முன் சொன்னபடி நவாம்ச சக்கிரத்தில் 8-க்கு உடையவனுடைய அம்சத்திற்கு 6-8-12-ல் லக்கினாதிபதி யிருந்தால் முன் சொன்ன பலன் கொஞ்சமாகவே யிருக்கும். பெரிய வியாதியும் இராது. 8-க்கு உடையவன் பலமிராமலிருந்தால் கடன் வியாதி ஒன்றும் கிடையாது. ரகசியமாய் பாபத்தொழில் செய்வான். கடன் தீர்ந்துபோகும் (அல்லது கடனிலிருந்து விலகுவான்) தாராபலத்தையும் (நக்ஷத்திர வலிவையும்) அறிந்து சுபாதிகளைச் சொல்லவும்.

(15) 9-க்கு உடையவனோடு கூடி லக்கினாதிபதி 9-ல் இருந்தால் பிதுர் பாக்கியத்திற்கு (தகப்பன் பாக்கியத்திற்கு) விருத்தி யுண்டாகும். தர்ம வழியில பரீதி உண்டாகும். தேவதைகளிடமும் தகப்பனாரிடமும் பக்தியுண்டு தகப்பனாருக்கு உபசரணை செய்வான். வெகு பாக்கியத்தால் பிரசித்தி யுண்டாகும். நல்ல பாத்திரத்தில் தானம் செய்வான்,

(16) முன் சொன்னபடி நவாம்ச சக்கிரத்தில் 9-க்கு உடையவனுடைய அம்சத்திற்கு 6-8-12-ல் லக்கினாதிபதி யிருந்தால் பிதுர் (தகப்பனார்) பாக்கியம் இல்லை. தகப்பனாருக்கும் ஜாதகனுக்கும் ஒற்றுமையிராது (தகப்பன் நேர்முகமாயிரான்) தர்ம

வழியில் ப்ரீதி யிராது (துவேஷம் உண்டு) நாஸ்திகரிடம் சிநேக வார்த்தை லக்கினாதிபதியின் தசை வருங்காலத்தில் பித்ரு பாக்கியம் குறையும். அந்த லக்கினாதிபதியே பரமோச்சாம்சத்திலிருந்து பாக்கியாதிபதியோடு கூட்டியிருந்தால் கணக்கற்ற திரவியம் கிடைக்கும். தர்மத்தில் வெகு தனம் செலவாகும். சிவன் கோவில் அல்லது விஷ்ணு கோவில் முதலியது கட்டுவான். நிச்சயம்.

(17) 10-க்கு உடையவனோடு லக்கினாதிபதி கூடி (10-ல்) இருந்தால் அவன் தசை வருங்காலத்தில் புகழ் உண்டாகும். குலாசாரத்தில் (தங்கள் குலத்தின் பழக்க வழக்கங்களில்) ப்ரவிருத்தி (முயற்சி-ஆரம்பம்) இருக்கும். யாகத்தை செய்வான். ராஜ்யம் கிடைக்கும். நல்ல ஸ்திதி ஏற்படும். எங்கும் இவன் உத்திரவு நடக்கும். ஆஸ்திகனாகவிருப்பான். காரியங்களில் நல்ல புத்தி. வைதீக ஆசாரமுள்ளவன். உத்தியோக லாபமுண்டு. ராஜாங்க காரியங்களில் இவன் சக்தியுடையவன் (அதாவது திறமையுள்ளவன்).

(18) முன் சொன்னபடி நவாம்ச சக்கிரத்தில் 10-க்கு உடையவனுடைய அம்சத்திற்கு 6-8-12-ல் லக்கினாதிபதி யிருந்தால் மானஹானி, கெட்ட கீர்த்தி (அபராதம்) உத்யோகத்தில் திறமையின்மை, ஆக்ஞையின் பங்கம் (உத்திரவுக்கு பங்கம்) ப்ரவாதம் நித்திய கர்மங்களில் ஆதரவு (பற்றுதல்) உண்டாகாது. லக்கினாதிபதியினுடைய தசை வருங்காலத்தில் ஏகாந்தமாய் (ரகஸியமாய்) பாப காரியங்களில் ப்ரவிருத்தி (ஆரம்பமும்) உண்டாகும்.

(19) 11-க்கு உடையவனோடு கூடி லக்கினாதிபதி 11-ல் இருந்தால் வியாபாரத்தில் லாபமுண்டாகும். மூத்த சகோதரனுடைய பணம் சேரும். அநேகவித லாபமுண்டென்று அந்தந்த கிரகங்களின் யோகத்தைக்கொண்டு சொல்லவேணும். முன் சொன்னபடி நவாம்ச சக்கிரத்தில் 11-க்கு உடையவனுடைய அம்சத்திற்கு 6-8-12-ல் லக்கினாதிபதி யிருந்தால் லாபம் சுவல்பம்-கொஞ்சம் சந்தோஷம். மூத்த சகோதரனோடு விரோதம். 11-க்கு உடையவனும் லக்கினாதிபதியும் ஒருவர்க்கொருவர் விரோதியாயிருந்தால் தினந்தோறும் லாபஹானியுண்டு.

(20) 12-க்கு உடையவனோடு கூடி லக்கினாதிபதி 12-ல் இருந்தால் தரித்திர யோகமடைவான்) (ஏழையாக விருப்பான்) பிதுரார்ஜித பணம் செலவழியும்-தேசாந்தரத்தில் வாசம் செய்வான். தேசாந்தரத்தில் பலன் உண்டு. இந்த "பலன் உண்டு" என்பது சுப க்ஷேத்திரத்தில் இருந்தால் தகும் (சொல்லலாம்) முன் சொன்னது சத்துரு ராசியிலிருந்தால் என்று சொல்லவும். பின்னும் தேசாந்தரத்தில் வீண் அலச்சல் அல்லது துக்கம் உண்டாகும்.

(21) இவ்விதம் 12 பாவத்தின் அதிபதிகளோடு லக்கினதிபதி சேர்ந்தால் ஏற்படும் பலன்களைச் சொல்லவேணும். லக்கினதிபதியானவன் எந்த ராசி-அம்சம்-திரியம்சம் (திரிம்சாம்சம்) இவைகளில் எந்த பாவாதிபதியோடு கூடியோ அல்லது அவர்களால் பார்க்கப்பட்டோ இருக்கிறனே அதன் பலன் எல்லாம் இதில் சேர்த்துக்கொள்ளவும். பஞ்ச சித்தாந்தப்படி அந்தந்த பாவத்தினல் ஏற்படும் பலனையும் லக்கினம் அல்லது ராசியின் அதிபதிகளின் சுபாசுபத்தினல் ஏற்படும் பலனையும் எல்லாவற்றையும சேர்த்து லக்கினதிபதி தசை வருங்காலத்தில் சொல்லவேணும்.

(22) ராசி ஸ்வபாவம், லக்கினபாவம், காரகன் (காரகத்துவம்), கிரக ஸ்வபாவம், கிரகங்களின் சம்பந்தம் (சேர்க்கை), பார்வை, ஒருவர் வீட்டில் மற்றொருவரிருப்பது, ராஜயோகத்தைச் செய்வதாயிருப்பது (ராஜயோகம்) இவைகளைக்கொண்டு எட்டு விதமாகப் பலன் உண்டாகும். (அதாவது இந்த 8 காரணங்கட்கும் தகுந்தபடி பலன் தீர்மானிக்கவேணும்) எல்லாவற்றையும் புத்தியால் யோசித்து (தீர்மாணித்து) அந்தந்த தசாகாலத்தில் ஏற்படுமென்று சொல்லவேணும். இப்படிச் சொன்ன என் மதத்தைப் அனுசரித்துச் சொல்லும் பலன் பொய்யாகாது.

லக்கினதிபதி தசா பலன் முற்றிற்று.

## புக்திகளின் கிரமம்

(1) தசாநாதனின் பலத்தையும் தசாகாலத்தையும் அதன் பலனையும் அறிந்து தசாநாதன் முதல் கிரமமாய் புக்திகளைப் பிறிக்கவேணும், தசையின் எண்ணை மூன்ருல் பெருக்கி அதை புக்திநாதனுடைய தசா எண்ணல் பெருக்கி அதை முப்பதால் வகுக்க வந்த ஈவும் மீதமும் முறையே மாதங்களும் நாட்களும் ஆகின்றன. (அதாவது மூன்ருல் பெருக்கிய தசா எண்ணை புக்திநாதனுடைய தசையின் எண்ணல் பெருக்கினல் ஏற்படும் தொகை அந்த புக்தியின் நாட்கள். அவைகளை (அந்த எண்ணை முப்பதால் வகுப்பது மாதங்களாக்குவதற்காக ஆதலால் அதன் மிச்சம் நாட்களாகின்றன) அந்த மாத எண்ணை 12-ஆல்-வகுக்க வருஷங்களாகின்றன, இவ்விதம் அந்தந்த புக்தியின் வருஷம், மாதம், நாள், இவைகளை யறிந்து அதற்குத்தக்க பலன்களை எழுதவேண்டும்.

## பலனறியும் கிரமம்

(1) தசாநாதன், அவனுடன் சேர்ந்தவர்கள், அவனல் பார்க்கப்பட்டவர்கள், ராசி அம்சம் திரிம்சாம்சம் பாக்கியம் ஆகிய இவைகளின் அதிபதிகள் நால்வர்கள், திரிகோணத்திலிருப்பவர்கள் ஆகிய இந்த பத்து பேர்களும் தசையில் (பாகத்தில்-புக்தியில் போகத்தைக் கொடுப்பார்கள். ராகு கேதுக்கள் தானிருக்கும் ராசியதிபதியின் (தன் ராசியதிபதியின்) பலனைக்

கொடுப்பார்கள். இவர்களின் பலத்தையறிந்து அதில் விசேஷ பலமுள்ளதை முதலில் கற்பித்து பிறகு கிரமமாய் குறைந்த பல முள்ள கிரகத்தின் பலன்களைக் கற்பிக்கவும். இப்படி பலத்தின் கிரமப்படி அந்தந்த புக்தி கிரகங்களை வரிசையாய் எழுத வேண்டியது.

(2) பாகாதிபதி அதாவது புத்திநாதன் சொன்ன பலமுள்ள வனுயிருந்து தன் க்ஷேத்திரம் உச்சம், நட்பு, திரிகோணம், ஆகிய வீட்டிலிருந்து எந்த பாவத்திர்க்கு அதிபதியாய் தற்கால பலத் தோடு எந்த பாவத்திலிருந்தவனுகிறுனே அவ்விரண்டு பாவ பலனும்-தன்பாவ பலனும் சேர்ந்தவிடத்தின் பலனும் கோட்சார ராசிக்குத் தக்கபடி அவன் கிரமமாய் கொடுக்கிறுன். பாபியா யிருந்தால் பாபபலனைத் தருகிறுன். கலப்பாயிருந்தால் கலந்த பலன். ஆனுல் தசாநாதன் தன் புக்தியில் தன் பலனைத் தரமாட் டான். முன் புக்திக்குத் தக்கவாறு தன் காலத்தை (புக்தியை)க் கழித்து விடுவான். அப்படி அதிக சந்தோஷப்பட்டு கொடுத் தானுகில் வேறு காலத்தில் தன் பலனைத் தரமாட்டான்.

(3) இது தசாநாதன் ஒருவனுக்கே பலாதிக்கமிருந்த விஷயம். தசாநாதன் சுபனுயிருக்க புக்தி அதிபர்கள் பாபிகளானுல் அந்த புக்தி நாதர்கள் தன் பலனைத்தரார்கள். அவர்கள் மௌனமா யிருப்பார்கள். ஆனுலும் (அந்த தசாநாதன்) பாபர்களின் நடுவி லிருந்தால் சில சமயம் அல்லது சிலவிடம் சுவல்ப பலனை (பாப பலனை)த்தருவான். (அல்லது பாபர் மத்தியில் ஷை தசாநாத னிருந்தால் அவன் சில சமயம் அல்லது சில விடம் சுவல்ப பலனைத் தருவான்) இப்படியே பாபர்களின் பாகத்தில் (புத்தி யில்) சுபரிருந்தாலும் சில சமயம் கொஞ்ச பலனைத்தருவான்.

(4) தசாநாதன் மாரகனுயிருந்தால் சுபனுகவுமிருந்தால் லக்கினத்தின் எட்டிறகு உடையவனுகிய புக்தியதிபதி பலனை (மரணத்தை)த் தருகிறவனுவான். அந்த 8-க்கு உடையவனும் மாரகனுகவே இருப்பின் அந்த தசையில் மரணமில்லை. சுபரா யிருந்தாலும் பாபிகளின் நடுவிலிருந்தால் பலன் கொடுப்பதில் பராமுகனுக (அக்கரையிராதவனுக) இருப்பான். பாபியாயிருப் பினும் சுபர் மத்தியிலிருந்தால் விசேஷமாய் அசுபத்தைத் தரமாட்டான். தசாதிபதிக்குச் சொன்னபடியே புக்திக்குடைய வனுக்கும் சொல்லவும்.

(5) பலன் அநேக விதம். கிரகங்களின் குணமும் அநேகம் எல்லாவற்றையும் மேல் சொன்னபடி யுக்தியைக்கொண்டு தெரிந்து கொண்டு மற்றதையும் தீர்மானித்து அந்தந்த காலததில் சொல் லும் தைரியமுள்ள ஜோதிடன் உண்மை சொல்லுகிறவனுகிறுன். இங்கு சொல்லவேண்டியது வெகு உண்டு. இங்கு கொஞ்சம் வழி மட்டும் காண்பிக்கப்பட்டது. என் அபிப்ராயத்தை யறிந்து சொல்லுகிறவன் நல்ல புகழை அடைவான். பலன் சொல்லு

வதற்கு கிரமத்தை தெரிந்துகொள்ள இது ஓர் உதாரணமாகச் சொன்னேன். இப்படி பலன் அறியும் கிரமம் சொல்லப்பட்டது, என்கிறார் சத்தியாச்சாரியார்.

## பலன் ஏற்படுத்தும் விதம்

மிதுன லக்னத்தில் ஜனித்த ஒருவனுக்கு லக்னாதிபதி மேஷத்தில் செவ்வாய் வியாழன் சந்திரன் இவர்களுடன் கூடியிருக்கிறார், வேறு கிரகங்களால் பார்க்கப்படவில்லை. செவ்வாய் விருச்சிக அம்சத்திலும் புதன் லக்ன நவாம்சத்திலும், சந்திரன் விருஷப அம்சத்தின் கடைசியிலும் சுக்ரன் கன்னியாம்சத்திலு மிருக்கின்றனர். செவ்வாய் தசையில் குரு புக்தியில் கோசாரத்தில் கடகத்தில் குரு இருக்கும் சமயம் நியாயஸ்தலத்தில் எழுத்து வேலை. விசேஷ திரவிய லாபமளிக்கும, அந்த எழுத்து வேலையும் நீசப்ரபுவின் பாஷையால் உண்டாகும் எப்போதும் சத்ரு அதிகமுண்டு, இரண்டு வாகனங்கள் உண்டு தேவமாதுருக தேசத்தில் எங்கோ ஓரிடத்தில் உத்தியோக சுகம் சந்திர புத்தியில் சத்ரு பயத்தால் உத்யோக நாசம். இவன் சுவாதீனமான எழுத்தாளியே இவனுக்கு எதிரியாவான் நிச்சயம். மறுபடி ஜீவனத்தை எதிர்நோக்கி சிறிது காலம் வீட்டில் வசிப்பான். இவ்விதமே இப் பலன் சொல்லத் தக்கது. யுத்தியால் வேறும் சேர்த்துக்கொள்ளலாம். (தேவமாதுருக தேசம் என்பது எப்போதும் ஜீவநதிகளும் மழைப் பெருக்கும் மிகுந்து நீர்வள நிலவள மிக்க தேசம்).

மேற்படி மிதுன லக்ன ஜாதகனுக்கு லக்னாதிபனுக்கு 7-10-க்குடையோர் சேர்க்கையால் ஜீவன லாபம். தனாதிபனுடன் (2-வதி வீட்டதிபதியுடன்) லாப (11-வது) வீட்டிலிருத்தலாலும் 11-ம் வீட்டாதிபனுடன் சம்பந்தம் பெற்றிருப்பதாலும் விசேஷ தன லாபம் சொல்லப்படுகிறது. சந்திரனுக்கு விய (12-வது) அம்சத்திலிருக்கையாலும் சுக்கிரனுக்கு 4-ல் நீசத்தன்மையாலும் அரசன் மூலமும் வாகன மூலமும் தன்னனுபோக மூலமும் திரவியச் செலவு அதிகமாகிறது. புதனுக்கும் சுக்கிரனுக்கும் நவாம்சத்தில் ஒருவர்க்கொருவர் கேந்திரத்திலிருக்கையால் வாகனமடைதல் சொல்லப்படுகிறது. காரகனுக்கு உபய ராசி நிலையால் இருவாகன முரைக்கப்பட்டது. அங்காரகனுக்குச் குரு சேர்க்கையால் எழுத்துமூல ஜீவனம். குஜனுக்கு 6-வது வீட்டுரிமையால் நீதிமன்றத்தில் ஜீவனம். தசாநாதனுக்கு குரு சேர்க்கையால் அந்தந்தபுத்தி காலத்தில் நேருதல் அவரைக்காட்டிலும் மற்றவர் பாபிகளாயினும் தசாநாதன் சுபனுயிருத்தலால் பேசாமல் (பலன்தராமல்) இருந்தனர். யோகத்தை செய்விக்கும் குருவுக்கு 7-வது வீட்டதிகாரத்தால் வேறு தேசத்திலிருத்தல். அந்த ராசி அம்சங்கள் சரமாகையால் தூர தேசம். மேஷ ராசியால், ஜீவநதி விசேஷ மழைப் பெருக்குள்ள செழித்த தேசம். துலாம்சத்தால் அனேக கடைத்தெருக்கள் உள்ள நகரமென்று சொல்லப்படுகிறது. ஜீவனந்தரும் தசா

னாதனுக்கு 6-வது வீட்ட திகாரத்தால் நீதித்தல ஜீவனம். புதனுக்கு சத்ருராசி யோகத்தாலும் சத்ரு நவாம்சத்திலிருக்கும் குஜனால் பார்க்கப்பட்டபடியாலும் விரோதி அதிகம். சத்ருவும் எழுத்து வேலையிலுள்ளவன். தனாதிபன் (2-வது வீட்டதிபன்) 12-வது வீட்டம் சதிலிருக்கையாலும் அவ்வீட்டுடையோன் நீசாம்சத்தி லிருத்தலாலும் குரு இருப்பிடத்திலிருந்து 8-வது அம்சத்தி லிருக்கையாலும் உத்யோக நஷ்டம்-குருவுக்கு கோசாரத்தில் 5-வது அம்ச நிலையால் பின் உத்தியோக எண்ணம். லக்னத் திற்கும் 4-க்கு முடையோனான புதனுக்கு தன் னம்சநிலையால் பின்னால் சிறிது காலம் தன் வீட்டில் வசித்தல் :—இவை முதலிய பலன் அறியப்படுகிறது.

கல்பனா கிரமம் முற்றிற்று.

## இரண்டாம் வீட்டுடையோன் தேசை

(1) 2-வது வீட்டுடையோன் பலவானாகில் தனவானென்று பிரசித்தியுறுவான்-லக்னாதிபன் பலமற்றவனாகில் தனத்தை இறுத் துவான், அனுபவிப்பான், செலவழியான், இது அத்திசையில் நேரும். பலவானாகில் அற்பசுகம், முக்கியமாய் பணத்தை அழுத்து வான், எப்போது வாக்விஸ்தரியும் வித்தை லாபமும் உண்டாகும், குடும்பப்பெருக்கும் உண்டாகும். 6-8-12-வது அம்சங்களிலிருந் தால் தனமுடையோனென்றும் பெயர் மாத்திரமாவது தன நாசமாவது நேரும், ஜாதகனுக்கு மரணமும் களத்திர ஜன பீடை யும் நேரும்.

(2) 2-வது வீட்டுக்குடையோன் 3-வது வீட்டுடையோனு டன் சேரில் முன் சேகரித்த பொருள் விருத்தியும் சகோதரனுக்கு தன வரவும் உண்டாகும், அவன் குடும்பபாரம் சகோதரனால் தாங்கப்படும், சங்கீத வித்தை நிமித்தமாக சில இடங்களில் லாபம் கிடைக்கும் நிச்சயம், பலமற்றவனாகில் அல்ப லாபம், 8 முதலிய அம்சங்களில் கெடுதி.

(3) லக்னாதிபனுடன் சேரில் அங்கு 2-வது வீட்டுடை யோன் இருந்திடில், பூமி மூலமும், வித்தை மூலமும், வாகன மூலமும் பணம் வரவு (லாபம்) தாய் பாட்டன் தனம் கிட்டும் சில இடத்தும் புதையலும் கிடைக்கும், 6-8-12-வது அம்சங்களில் 4-ம் வீட்டுடையோனிருந்திடில் முன் சொன்ன பலன் கிட்டாது பல மற்றவனாகில் அல்ப லாபம்.

(4) 5-வது வீட்டுடையோனுடன் கூடி 5-வது பாவத்தில் இருந்தால், பிரபுவினாலோ, அரசனாலோ, தெய்வத்தாலோ புத்திர னாலோ, வித்வாவிடமிருந்தோ தனம் கிட்டும், 5-வது வீட்டுடை யோனிட மிருந்து 6-8-12 அம்சங்களிலிருக்கில் கிட்டாது, பல மற்றவனாகில் அற்ப லாபம், சுக்கிரனுக்கு ராகு சேர்க்கையாலோ சனி குஜன் சேர்க்கையாலோ (சேரில்) அத்திசையில் களத்திரத்

திடம் சோரம் செய்யும் பிரபுவால் தன வரவு, அவ்விதமே லக்னம் லக்னம்சம் இவைகளின் அதிபருடன் சேர்ந்திடில் வேறிடத்தி லில்லை அந்தந்த அம்ச மூலம் சொல்லவும்.

(5) தனாதிபன் (2-வது வீட்டுடையோன்.) ஆறும் வீட்டு டையோனுடன் கூடி ஆறும் வீட்டிலிருந்து தனாதிபனுக்கு பல யோகமிருக்கில் அம்மான் பிரபலனாக இருப்பான். விரோதி அதிக தனமுடையோனெனலாம் பிராப்தியோகத்தில் (கிடைக்கும் யோகத்தில்) தன வரவு, வைத்தியத்திலாவது திருடுத் தொழிலா லாவது சச்சரவாலாவது தனமடைவான் பலமற்றவனாகில் அல்ப லாபம் (வியாதி) 12 முதலிய அம்சங்களில் அதுவுமில்லை.

(6) இரண்டாமிடத்தோன் ஏழாமிடத்தில் அவ்வீட்டுடை யோனுடன் சேர்ந்திருந்தால் மாமனாருக்கு தனங்கிடைத்தல் அல்லது அவன் மூலம் தனமடைவான், குடும்பத்துடன் வெளி வாஸம் நேரும். தேசாந்தரத்தில் தனம் கிடைக்கும், மரண காலத்தில் மரணம் சொல்லவும், களத்திர மரணம் நேரும், ஆறு, எட்டு, பனிரண்டு அம்சங்களில் பலமற்றிருந்தால் ஒன்றும் நேராது முன்சொன்ன பிராப்தியோகமிருந்தால்பிராப்தி சொல்ல வும் வேறு விதமாகில் இல்லை.

(7) இரண்டாமிடத்தோன் எட்டாமிடத்தில் 8-க்குடையோ னுடன் கூடியிருக்கில் கடன் விருத்தி அல்லது களத்திரமரணம் அல்லது களத்திரம் துர்ச்செய்கை செய்யும், மனோதுக்கம் எந் நாளும் விரயம். 6-8-12-ம் அம்சத்தில் முன் சொன்ன பலன் வேறு விதமாக சொல்லவும், எட்டுக்குடையோன் துர்ப்பலமாகில் தேசாந் தரத்தில் வீண் வாழ்வு, பிரேத போஜனம் உண்டாதல்.

(8) இரண்டாமிடத்தோன் ஒன்பதாமிடத்தோனுடன் கூடி ஒன்பதிலிருந்தால் அதிக தனம் சொல்லலாம் தகப்பனுக்கு பிரபல யோகம் செய்யும், தர்மம் காரணமாக தனம் கிடைத்தல், துர்ப் பலனாகில் அல்ப லாபம், பிராப்தியோக மிருந்திடில் கிட்டும், 12 முதலிய அம்சங்களில் அதுவுமில்லை.

(9) இரண்டாமிடத்தோன் 10-ம் வீட்டில் 10-ம் அதிப னுடன் கூடியிருக்கில் லக்னம் ராஜயோகத்துடன் கூடிடில் ராஜ்ய மூலம் தன வரவு, அபராத தனம் கிட்டும், ராஜ ஸன்மான முண் டாகும், பட்டு வஸ்திரம் முதலியன கிடைக்கும், வியாபாரத்தால் தன வரவு, தனாதிபன் பலமற்றிடில் அல்ப லாபம், மஹா தானாதி லாபம், சில இடத்தில் உதவி செய்தலால் தனம்,10-ம் இடத்தோன் பலமற்றிடில் இழிவு செய்கை காரணமாய் தனம். பத்தாமிடத்தோ னுடைய அம்சத்திலிருந்து 6-8-12 அம்சங்களிலிருந்தால் முன் சொன்னது இல்லை. அங்கு தொழிலில் முயற்சிப்பான்.

(10) இரண்டாமிடத்தோன் பதினொன்றுமிடத்திலிருந்து அந்த லாபாதியுடன் கூடிடில் மூத்த சகோதரன் தனம கிடைக்கும்

செய் தொழிலில்லாபம். எந்தெந்த பாவேசனுடன் கூடியிருக்கிருரோ அல்லது எவ்விடத்தில் அம்சத்திலிருக்கிருரோ அந்தந்த கிரகங்களுக்குச் சொல்லியபடி திசையில்லாபஞ் செய்பவனுவான். லாபாதிபனின் அம்சத்திலிருந்து 6-8-12-ம் அம்சங்களிலிருக்கில் முன் சொல்லிய முறைப்படி பலனில்லை, பலமற்றிருக்கில் அற்ப பலன்.

(11) தனுதிபன் 12-ஆமிடத்தில் வியாதிபனுடன் கூடியிருக்கில் எந்தெந்த பாவேசனுடன் சம்பந்தமோ அந்தந்த மூலம் பொருள் செலவு. இதர கிரகங்களின் சேர்க்கை இல்லை எனில் பனிரண்டாமிடத்தோனுலேயே பலன் சொல்லவும், பனிரண்டாமிடத்தோன் பலமற்றிடில் இரண்டாமிடத்தோனும் அவ்விதமிருக்கில் செலவு கொஞ்சமாகும், அந்த பனிரண்டாம் வீட்டுடையோன் அம்சத்திலிருந்து தனுதிபன் 6-8-12 அம்சத்திலிருந்தால் செலவில்லை, பயம் மாத்திரம் செய்வர், குடும்பத்தில் கஷ்டம் அல்லது களத்திர பீடை அல்லது புத்தி மாற்றம் செய்யும்.

(12) தனுதி லக்னுதியுடன் கூடி லக்னத்திலிருக்கில் குடும்ப விருத்தி, வாக்வித்தி, ஸத் பாத்திரத்தில் பொருள் செலவு, வெகு பேருக்கு அன்னதானம் செய்வான் தனவானென்று பிரசித்தியுறுவான், தனுதிபன் பல ஈனனுகில் சிறிது பொருள்தான் சம்பாதிப்பான். 6-8-12 அம்சங்களில் லோபியும் முரடனுமாவான்.

(13) எந்த பாவாதிபனுடன் கூடியோ பார்க்கப்பட்டோ இருக்கிருனே, எந்த பாவாதிபன் வீட்டிலிருக்கிருனே ராசி, அம்சம், திரிம்சபாகங்களில் எந்த அம்சத்திலுளனே அந்தந்த கிரகத்திற்குச் சொல்லியவை எல்லாம் தன் திசையில் செய்வான், இவ்விதமே பலனெல்லாம் நவாம்சங்களிலும் ஏற்படுத்திக்கொள்ளவும், யுக்தியால் எல்லாம் தீர்மானித்து தசாகாலங்களில் கூட்டவும், முன்னுறைத்த முறைப்படி புக்திகளையும் பிரித்து பலனுறைக்கவும், கிரந்தம் விஸ்தாரபாபத்தாலும் சொல்லியதை திருப்பிச் சொல்வதாலும் அதிகம் சொல்லவில்லை.

இரண்டுக்குடையோன் தசாபுத்தி முறை முற்றிற்று.

## மூன்றுமிடத்தோன் தசா பலன்

(1) மூன்றுமிடத்தோன் நாலாமிடத்தில் நான்காமதிபனுடன் கூடியிருந்தால் அத்தசையில் ஜாதகனுக்கு சகோதரன் பிரபலனுவான், வாகன ஐசுவரியமுடையவனும் கிராம கார்யத்தில் தேர்ச்சி பெற்றவனுமாவான், கல்வி லாபம் அடைவான், பூமி மூலம் பொருள் வரவு. நான்காமிடத்தோன் பலமற்றவனுகில் சில சமயம் மாதுரு பீடை பயிர், பூமி ஹானி, கல்வித்தடை உண்டாகும் மூன்றுமிடத்தோன் பல ஈனனுகில் அவன் மூலம் பங்கம் சேரும் பயிர், பூமி, பங்கு, பிரிவு, புது வீடு கட்டுதல் உண்டாகும்,

பல ஈன கிரகத்தின் தசா புத்தியில் வாகனத்திலிருந்து விழுதல், மூன்றுமிடத்தோன் நான்குக்குடையோன் அம்சத்திலிருந்து 6-8-12-லிருந்தால் வாகனுதியோகமில்லை, பிரயோஜனத்தைக் குறித்து கலகம் நேரும், முக்கியமாய் ஜாதகனுக்கு வாகப்ராப்தி ஏற்படாது.

(2) மூன்றுக்குடையோன் ஐந்தாமிடத்தில் அந்த அதிபனுடன் இருந்திடில் பலத்துடனுமிருக்கில் பிரபுவாவது அல்லது யாரோ ஒருவனால் ஏற்றுக்கொள்ளப்பட்டவனுயாவது ஆவான் அல்லது அவன் சோதரனுவது எவரோ ஒரு பிரபுவை அண்டியவன், சில சமயம் தெய்வமூலம் தனலாபமடைவான், மூன்றும் வீட்டோன் துர்பலனுகில் பரிசாரக ஜீவனம், சில சமயம் ஜாதகனுக்கு கான வித்தையால் பொருள் வரவு பல ஈனனுகில் அற்ப லாபம் அதிபலவனுகில் அரசன் மூலம் பொருள் வரவு. 6-8-12 அம்சங்களில் வீண் முயற்சியால் சிரமம்-கேந்திர திரிகோண பாகங்களில் பொருள் வரவு, சுகம்-பிராப்தியோகத்தை அறிந்து இவ்விதம் அந்தந்த பாவங்களைச் சொல்லவும்.

(3) மூன்றுக்குடையோன் ஆறில் அந்த அதிபனுடன் சேர்ந்திருக்கில் அத்தசையில் ஜாதகனுக்கு சகோதரன் விரோதியாவான், அல்லது ரோக பீடை அல்லது ஆமய (குல்ம நோய்) நோயால் வருந்துவான், அவ்விடம் சுபயோகததுடனிருக்கில் ஸேனையில் ஜீவனம் கிடைக்கும், அரசாங்க முத்திரையாவது தரிப்பான், அம்மானுல் தனம் கிட்டும், அவர் தசையில் அம்மானுக்கு சுகம் சொல்லவும், 6-8-12 அம்சங்களிலிருக்கில் விரோதியுமில்லை தோழனுமில்லை மறுபடி வேறு முன் சொன்னவை யெல்லாம் கிடைக்காது, பலவீனனுயிருந்தால் நோயதிகமாகும் நிச்சயம். 8-12-ம் அதிபன் சேர்க்கையால் அத்தசை யோகம் செய்வதாகும், அத்தசையில் பணம், வாகனம் அணி ஆபரணங்கள் கிடைக்கும், ஆறுமதிபனுடன் மாத்திரம் கூடி இருந்தால் காது நோயுண்டாகும், கிரகத்தின் இயற்கை குண மூலம் வியாதி அல்லது காதறு படல், மூன்றுமாதி தசாகாலத்தில் அவை யெல்லாம் சேர்த்துக் கொள்ளவும், இவ் விஷயத்தில் அதிகம் சொல்லவேண்டி யிருந்தும் சிறிது சொல்லப்பட்டது.

(4) மூன்றுமிடத்தோன் ஏழில் ஏழாமாதியுடன் சேர்ந்திருக்கில் அத்தசையில் ஜாதகனுடைய சகோதரன் வெகு தூரஞ் செல்வான், ஏழாமிடத்தோன் சுபர் சேர்க்கையிலிருந்தால் வெளி வாஸத்தில் சுகமடைவான், ஏழாமாதி சர ராசியில் பலமற்றிருந்தால் அவ்விடம் துக்கமாவது மரணமாவது அடைவான், அக்காலத்தில் ஜாதகனுக்கு மாமனுர் முதலியவரால் சுகம் கிடைக்கும் அல்லது களத்திரவர்க்கவிருத்தி அல்லது இரண்டாவது விவாகம். மூன்றுக்குடையோன் தசையில் நல்ல அறிவாளி இப்பலனைச் சொல்லவும்; அதிக கிரகங்களுடன் சேர்ந்திருந்தால் அவர்களுக்

குறைந்த பலனை அறிந்து கூட்டிக்கொள்ளவும், ஏழாமிடத்தோன் அம்சத்திலிருந்து 6-8-12 பாகங்களிலிருந்தால் தசை வரும்போது மரணம் யாத்திரை முதலியது ஒன்றும் நேராது, திரிகோண கேந்திர அம்சங்களிலிருந்தாலும் லாபாம்சத்திலிருந்தாலும் முன் சொன்ன பலனடைவான், மற்றும் ஏற்படுத்திக்கொள்ளலாம், மூன்றுமிடத்தோன் பலமற்றவனும் ஏழாமிடத்தோன் பலமற்றவனுமிருக்கில் கிரகங்களின் ராசிக்குச் சொன்ன தேசங்களில் சோதரன் பிச்சை எடுப்பவனாக இருப்பான் எப்போதும், சஞ்சாரம் செய்யும் குணமுடையவனும் கெட்ட வழியில் விருப்பம் (ஆசை) உடையவனுமிருப்பான், ஏழாமிடம் ஜலராசியாகில் தீர்த்த யாத்திரை முதலியன நேரும், சோதருனுக்கு எல்லா பலனையும் ஏற்படுத்தவேண்டியது, ஜாதகனுக்கு பிராப்தியோகம் வரில் சொன்ன அந்தந்த பலன் கிட்டும்.

(5) மூன்றுக்குடையோன் எட்டாமிடத்தில் எட்டாமிடத்தோனுடன் கூடியிருக்கில் காது அறுபடுதல் அல்லது காது நோய், சத்ருவிடமிருந்து அவமானம், புத்தி நிலை தடுமாறல் அனுபவிப்பான், இது சோதரன் பலன், ஜாதகனுக்கும் ஏற்படுத்தவும் (சொல்லவும்), இவனுக்கு (3 வீட்டுடையோருக்கு) எட்டாவது ஆதிபத்தியமும் வரில் அப்பலனே சொல்லவும், சகோதர மரணம் விரோதம், கெட்ட செய்கையுடனிருத்தல் இவை சொல்லவும். 6-12-ம் அதிபன் சேர்க்கையாகில் தன வரவு சொல்லவும், சுபக்கிரகத்துடன் கூடி பார்க்கப்பட்டிருந்தால் 8 முதலிய அம்சங்களிலிருந்தால் முன் சொன்ன பலன், கேந்திரகோணங்களாகில் வேறு பலன் நேரும்.

(6) 3-ஆமிடத்தோன் 9-ல் அந்த அதிபனுடன் இருக்கில் அத்தசையில் ஜாதகன் சகோதரன் பாக்கியவானுவான், தகப்பன் பாக்கியப் பெருக்கு, தர்ம விருத்தி உண்டாகும். 9-மிடத்தோன் பலமற்றவனுகில் பிதாவின் விரோதத்தை அடைவான், 9-மிடத்தோன் அம்சத்திலிருந்து 6-8-12 அம்சங்களிலிருந்தால் முன் சொன்ன பலன் விரோதமாக சொல்லவும், பலமற்றவனுகில் அற்ப பாக்கியம். அவன் சுபனுடன் சேர்ந்தால் அத்தசை பாக்கிய விருத்தி செய்யும், பாபனுடன் கூடில் பாக்கியஹானி, பிதா பீடை முதலியன நேரும்.

(7) 3-மிடத்தோன் 10-மிடத்தில் அவ்வதிபனுடன் கூடியிருக்கில் நித்தஞ் செய்யவேண்டிய கடமைகள் தடை, சிற்சில சமயம் யாகாதி பங்கம், பாபியுடன் கூடியிருக்கில் முக்கியமாய் கெட்டபெயரெடுப்பான், சகோதரன் ஈனத்தொழிலையும் அருவருக்குத்தக்க செய்கையும் செய்வான், சுபருடன் கூடில் அரசாங்க காரியத்தில் இறங்கியிருப்பான், அந்தந்தக் கிரகத்திற் கேற்றபடி யுக்தியால் எல்லாம் ஊகிக்கத்தக்கது,

(8) 3-மிடத்தோன் 11-மிடத்திலிருக்கில் முன் பின் சகோதரர்கள் அத்தசையில் பிரபல யோகமுடையவராக யிருப்பர் சந்தேகமில்லை, மூத்த சகோதரனுக்கு பாலியத்திலேயே அந்த யோகம் சொல்லவும், வியாபாரத்திலும் லாபம் மேல் மேலும் விருத்தி, புத்திமான் ராசிகளின் கிரகங்களுக்கு ஏற்ற பொருள்களையும் பண்டங்களையும் சொல்லவும், பல ஈனனாகில் அற்ப லாபம் மத்திய யோகம் சொல்லவும், மூன்றுமிடத்தோன் 6-8-12 அம்சங்களிலிருந்தால் தம்பி தரித்திரனும் மூத்த சகோதரன் சுகமுடையவனுவான், ஸ்திரீ ராசியில் ஸ்த்ரீ கிரகங்களுடனிருக்கில் இப்பலன் சகோதரிக்குச் சொல்லவும்.

(9) 3-மிடத்தோன் 12-ல் 12-ஆமதிபனுடன் கூடியிருக்கில் பலமற்றவனுகில் அத்தசையில் பின் பிறப்பு மரணம் சொல்லவும். சத்ரு பயம் காது நோய் காதணியிற்றல்-நிலையில்லா மனதுடனிருத்தல் இந்த யோகம் அத்தசாந்தரங்களில் சொல்லவும்-சர ராசியாகில் சகோதரனுக்கு வெளி தேசம் சென்றிருத்தல், ஸ்திரமாகில் சமீப தேசத்திலிருத்தல், இவை புத்திமான் சொல்லக் கடவன், வேறு கிரக சேர்க்கை யிருந்திடில் அதற்குறைத்த பலன் சொல்லவும்.

(10) லக்னுதிபனுடன் கூடி லக்னத்திலிருக்கில் பலத்துடனும் கூடில் யோக விருத்தி அடைவான், சங்கித வித்தை சுகம் பெறுவான் - சத்ருஜயம், தைரியம், கல்லிழைத்த காதணி ஆபரணங்கள் உண்டாகும், லக்னுதி ஸ்திரீ ராசியில் ஸ்திரீ கிரகங்களுடனிருந்ரால் லக்னுதிபன் பலமற்றவனுகில் தாவியாயிருத்தல் அல்லது அத்தொழில் மூலம் லாபம் சொல்லவும், க்ரூர, பாப கிரகங்களுடன் சேர்ந்திடில் அத்தொழிலினும் ஈனத்தொழில் சொல்லவும், லக்னுதிபனிடமிருந்து 6-8-12 நவாம்சங்களிலிருந்தால் வீண் உழைப்பு அற்ப லாபம் சொல்லவும்.

(11) மூன்றுமிடத்தோன் 2-மிடத்தில் 2-மிடத்தோனுடன் கூடியிருக்கில் சகோதர மரணம் சொல்லவும், தாய்க்கு பீடையும் குறிக்கவும், ஸ்வக்ஷேத்திரத்தில் பலத்துடனிருக்கில் அக்குடும்பத்தை ரக்ஷிக்க நேரும், சகோதரனுக்கு தனலாபம் அந்தந்த காலத்தில் ஏற்படுத்தவும், பல ஈனனுகில் எதிர் பலன் சொல்லவும், 6-8-12-அம்சங்களாகில் அவ்விரோத பலனில்லை.

(12) இவ்விதம் பாவாதிபன் சேர்க்கையாலும் இருப்பினுலும் அறிந்து சொல்லவும் வேறு பாவாதிபத்யத்தில் அந்த பாவத்திற்குறைத்ததை கூட்டி சொல்லவும், கூடியதும், பார்க்கப்பட்டதுமான கிரகங்களுக்கு எங்கும் இது சொல்லப்பட்டது, பாவ லக்னம், அப்பாவ லக்னுதிபன் முதலியவருக்கு 6-8-12-ராசிகளிலும் அதன் அம்சங்களிலும் அவ்வதிபரின் திரேக்காண, திரிம்சாம்சத்தினிருப்பு அக்கிரக சம்பந்தம் இவை தசா காலத்தில் கெடுதி செய்யும். கேந்திர திரிகோண இருப்பு விருத்தி காரண

மாகுமென்றும் சொல்லவும் இவ்விதம் தசா பலனறிந்து எல்லாம் புக்திகளிலும் சேர்த்துச் சொல்லவும்.

மூன்றுமாதி தசை முற்றிற்று.

## நான்காமதிபன் தசை

(1) நான்காமதிபன் கேந்திர கோணங்களிலிருந்தாலும் ஸ்வக்ஷேத்திரத்தில் பலத்துடனிருந்தாலும் கல்வி லாப மடைவான், பூமி மூலம் சுகம் முதலியன கிடைக்கும், பயிர்த்தொழில் பலிதம், புதிய வீடு கட்டுதல், கிணர் தோண்டுதல், பழ மரங்கள் வைத்தல் முதலிய பலன் சொல்லவும், வாகனம், தாய் சுகம், கல்வி ஆரம்பம், இவையும் சொல்லவும், காரகனுக்கு பலமதிக மெனில் அந்தந்த பலனில் பிரசித்தி செய்யும், பலமற்றிருக்கில் விரோதபலன் சொல்லவும், செய்கையும் பலனற்றதாகும், துஷ்ட பாவாதிபத்யமாகில் எல்லாம் மிச்ர (கலப்பு) பலன் ஆகும், இவ் விதமே சுபாம்சத்திலும் சுபதிரிம்சாம்சம்சத்திலும் இருக்கிற ராசி குணங்களுடனும் அவ்வதிபன் குணங்களுடனும் முயற்சித்து (நன்ருய் கவனித்து) அத்தசாந்தர் தசைகளில் பலன் ஏற் படுத்தவும்.

(2) 4-மிடத்தோன் 5-மிடத்தில் அவ்வதிபனுடன் கூடி யிருக்கிலும் ஒருவர்க்கொருவர் ராசியில்(மாறி)இருப்பினும் அரசாங் கத்தில் பிரசித்தி ஏற்படும், வித்தையால் தனமடைவான், இதர தேசத்தில் பூமியடைவான், வீட்டு பசு - தானிய நிறைவு, முக்கிய மாய் பிரபு சிநேகம் கிடைக்கும். 5-மிடத்தோன் பலத்துட னிருக்கில் சவுக்ய காலத்தில் புத்திர ப்ராப்தி - புத்திர விருத்தி, பிதாமூலம் சுகமதிகம் முதலியன அடைவான், பல ஈனனுகில் தரித்திரனும், பிதா வீட்டில் சுகமாயிருப்பான். 4-மிடத் தோனுக்கு அதிக பலமிருந்து காரகனும் பலவானுகில் பொன் னிழைத்த வாகனம் அரசனுல் கொடுக்கப்பட்டதாக இருக்கும் நிச்சயம் - கிரக, ராசிகளின் சுபாவத்தைக்கொண்டு வாகனத்தின் லக்ஷணத்தைச் சொல்லவும் - சர ராசியிலும் சர கிரகத்திலும் அதிக விலையுயர்ந்த குதிரை - ஸ்திர ராசியில் பல்லக்கு - உபய ராசியில் வேறு வாகனம் கிடைக்கும், 5-மிடத்தோனிடமிருந்து 6-8-12-ம் அம்சங்களிலிருந்தால் யோக பங்கம் நேரும் - வாகனம் வாங்கப்பட்டதாகும், லக்னுதி பலமற்று கெட்ட ஸ்தானத்தி லிருந்தால் அரச கோபத்தால், வெளியேறுதல், கழுதை முதலிய வாகனப்பிராப்தி அரசசபையில் கிட்டுமென்று சொல்லவும். 4-மிடத்தோனும் 5-மிடத்தோனும் துர்ப்பலராகில் சத்ருக்களாகில் அரசனை அண்டியும் பலனில்லை, பூமியில்லை வாகனமில்லை மந்திர பலனில்லை மந்திரத்தில் வினைப்பு என்று சொல்லவும், அத்தசை வரும்போது பலாபலமறிந்து சொல்லவும்.

(3) 4-மிடத்தோன் 6-மிடத்தில் அவ்வதிபனுடன் கூடியிருக்கில், காரகன் பலவானுகில் அக்காலத்தில் பூமி விருத்தி, தாய் சுகம், தனக்கு சவுக்கியம் பசு விருத்தியுண்டாகும் வித்யாவிருத்தியடைவான், வாகனங்களுக்கும் விருத்தியுண்டு, அம்மானுக்கு அதிக சுகம், பல ஈனனுகில் மேற் சொன்னதற்கு எதிர்ப்பலன், வாகனத்திலிருந்து விழுதல், தாய்க்கு பீடை, பசு முதலியன விக்கிரயம், பூமிகளில்சண்டை, கல்வித்தடை முதலியன நேரும். 6-8-12-அம்சங்களில் அற்ப தோஷம் சொல்லவும், பல ஈனனுகில் இவ்விதமே, எல்லாம் யுக்தியாலறிந்து சொல்லவும்.

(4) 4-மிடத்தோன் 7-ம் வீட்டில் அந்த அதியனுடனிருக்கில் அத்தசையில் தேசாந்திரத்தில் சில இடத்தில் சுகப்பிராப்தி சொல்லவும், க்ஷேத்திராதி தூரம் இங்கும் முன்போல் ஏற்படுத்திக் கொள்ளவும், இவை காரகர்களின் பலாதிகத்தால், இல்லாவிடில் மரணம் நேரிடும் - 8 முதலிய அம்சங்களில் ஒரு அம்சங்களில் சில இடத்தில் மரணமில்லை.

(5) 4-மிடத்தோன் 8-மிடத்தில் 8-மிடத்தோனுடனிருக்கில், பூமி, வாகனம், பசு முதலியன நஷ்டம், தாய்க்கு பீடை கல்வித்தடை நேரிடும் வீடு முதலியன கடனுல் பாதிக்கப்பட்டிருக்கும் - 8 முதலிய அம்சங்களிலாகில் தோஷம் அற்பம் நிச்சயம், முக்யமாக ஒரு அம்சத்தில் அதாவது தன்னவாம்சத்தை அடைந்திருந்தால் அப்பொழுது அவ்விரண்டின் பலாபலமறிந்து கிரகங்களின் சம்பந்தமுமறிந்து சுபருக்கு பலமாகில் சுபத்தையும் அசுபருக்கு பலமாகில் அசுபத்தையும் சொல்லவும்.

(6) 4-மிடத்தோன் 9-மிடத்தில், அந்த அதிபனுடனிருந்தால் காரகர்கள் பலத்துடனிருந்தால் - ப்ராப்தி யோகம்வரும்போது சுக்ரன் அதிக பலவானுகில் அங்கு வாகனுதி சுகம் அதிகம், குஜனுகில் பூமி முதலிய லாபம் - புதன் பலவானுகில் வித்யா சுகம் சந்திரன், மாதா தனப்ராப்தி, இவ்விதம் எங்கும் ஏற்படுத்தி சொல்லவும், திரிகோண கேந்திர பாகங்களில் பலவான்களாகில் அதிகம் சொல்லவும், 8 முதலிய அம்சங்களாகிலும் துர்பலர்களாகிலும் அற்ப பலன் உண்டாகும். காலமறிந்தவ்ன் இவ்விதமே வேறு பாவங்களிலும் சொல்லவும்.

(7) 4-மிடத்தோன் 10-மிடத்தில் அவ்வதிபனுடனிருக்கில் சுபர் சேர்க்கையாகில் அரசன் அல்லது மண்டலாதிபதியாவான் அல்லது அரசன் மந்திரி, பிரதான மனிதன், அரசனிடமிருந்து புகழ் பெற்றவன் ஆவான், காரகர்கள் பலவான்களாகில் வாகனம், ஐசுவரியப்பெருக்கு உண்டாகும், அத்தசா, புத்தி, அந்தர காலங்களில் எப்போதும் எல்லாம் உண்டாகும் - கொஞ்சம் பலம் குறைந்திருந்தால் பலனும் கொஞ்சம் குறையும் நிச்சயம், மனிதருக்கு யாகம் முதலியவை குரு பலத்தால் சொல்லவும், சில இடத்தில் உத்யோக லாபமும் சில இடத்தில் வியாபாரமும்

உண்டாகும், வ்யாபாரிபத்தியமும் இருந்தால் வியாபாரத்தில் பண வரவு, பல ஈனனாகில் அற்ப பலன் 8 முதலிய அம்சங்களாகில் அதுவுமில்லை.

(8) 4-மிடத்தோன் 11-மிடத்தில் அந்த அதிபனுடன் கூடியிருக்கில் சுகமாக லாபமடைவான் - சுபர் சேர்க்கையாகில் அதிகம், கிரகங்களுக்குச் சொன்ன நிறம் முதலிய மூலம் எப்போதும் லாபமடைவான், கிரகங்கள் பலமற்றிருந்தால் அற்பலாபமுண்டாகும், 8 முதலிய அம்சங்களில் பாபக்கிரகங்களுடன் கூடியோ பார்க்கப்பட்டோ இருந்தால் நேராது, அத்தசையில் சில சமயங்களில் மூத்த சகோதரனுக்கு சுகம் கிடைக்கும், பிராப்தி யோகமிருந்தால் அவன் மூலம் தனலாபம் முதலியன சொல்லலாம்.

(9) 4-ஆமதியன் 12-மிடத்தில் அந்த அதிபனுடன் கூடியிருந்தால் காரகர்கள் பலமற்றிருந்தால் அத்தசை தாய்க்கு ஹானி செய்யும், பயிர் பூமி நாசம் கல்வித் தடை நேரும், மனோ துக்கம் சவுக்கியமின்மை பசு பீடை முதலியன சொல்லவும், 8 முதலிய அம்சங்களில் அற்ப சவுக்கியம், தன்னுச்சம் ஸ்வக்ஷேத்திரம் சவுக்கியம், பாபர் சேர்க்கை கெடுதி, சுபர் சேர்க்கை சுபம், பின் பாபர் தசா புத்தியில் சில சமயம் வியாதி சொல்லவும்.

(10) 4-மிடத்தோன் லக்னத்தில் அந்த ராசி அம்சாதிபனுடனிருக்கில் லக்ன, ராசி அதிபதி மித்திராகில், சுப பாவாதிபதிகளும் மித்ராகில் காரகர்கள் பலத்துடனிருக்கில் வாகனம் முதலியன சொல்லவும், சூரியன் தன்னுச்சராசி அம்சத்திலிருக்க தனக்கு ஆத்மஞானபலாதிகம் - பிதாவுக்கு சவுக்கியம் தேஹ திருடத்தன்மை (வலிவு) ஆரோக்கிய முதலியன சொல்லவும், சந்திரன் - போஜன சவுக்கியம் முதலியன, குஜன் - பூமி, வீடு, தோட்டம், கல்வி வாதம், ஜயம் முதலியன, புதன் - வித்தை விசேஷங்கள் அம்மானுக்கு நன்மை முதலியன, குரு, இருதய சுத்தி கபடற்ற தன்மை சொல்லவும், சுக்கிரன் வாகன சேர்க்கை, சுக பூஷண வரவு, பட்டு வஸ்திரம் முதலிய யோகம், ரஸ வர்க்கம் முதலியன, போஜனம் - சனி இருதயத்தில் கபடத்தன்மை, பொய் முதலியன சொல்லவும், எல்லோரும் பலத்துடனிருந்தால் மனிதருக்கு மேற் சொன்ன பலன்கள் உண்டு, குறைந்திருந்தால் பலனும் குறைந்திருக்கும், 8 முதலிய அம்சங்களில் குறைந்திருத்தல் பலமற்றிருந்தால் அற்ப பலன் சொல்லவும், எல்லாம் யுக்தியால் சொல்லவும்.

(11) 4 மாதி 2-மிடத்தில் தன்னுச்சம், மித்திரர் முதலிய அம்சங்களில் அவர்களுடன் கூடியிருக்கில் அத்தசையில் முன் சொன்ன சுகம் முதலிய நற்பலன்கள் சொல்லவும், குடும்ப சவுக்கியம் சொல்லவும், மனைவிமூலம் சுகம் முதலியன, எப்போதும் சுக விருத்தி, சொல் வன்மை அடைவான், அவனுடைய சொல் பலித்

கும் அதுவும் அத்தசையில் சந்தேகமில்லை, பாபர் சேர்க்கை அற்ப பலன், பல ஈனனுபினும் அவ்விதமே.

(12) 4-ஆமிடத்தோன் 3-மிடத்தில் அந்த அதிபனுடன் கூடியிருக்கில் காரகர்கள் பல்முடையோராகில் எங்கும் அற்ப பலன், பல ஈனனுகில் பூமி முதலியன நாசம் சந்தேகமில்லை, உச்சத்தில் ஆரோகத்திலும் - தன, ஸ்வக்ஷேத்திரத்திலும், சுபருடன் கூடியபொழுதும், ஒரே அம்சத்திலும், கல்வி, வாகனம், பூமி முதலிய முன்னுறைத்த பலன்கள் அற்பம் சொல்லவும்.

(13) அந்தந்த பாவவிஷயங்களிலும் சுப அசுப பலன் சொல்லவும், 6-8-12 ராசி அம்சங்களில் கெடுதியையும் லாபத்தையும் சொல்லவும், எட்டு அங்க பலத்துடன் கூடிய தசாகாலத்தில் சுபம் முதலியன,குறைந்தால் குறைந்த பலன்,யுக்தியாலும் புத்தியாலும் சொல்லவும்,இவ்விதம் தசாபலனறிந்து பிறகு புத்திகளைப் பிரித்து கூடியும், பார்த்துமிருக்கும் கிரகாதிகளின் குணங்களால் புக்தி பலன் சொல்லவும்.

நான்காமதிபன் தசை முற்றிற்று.

## ஐந்தாமதிபன் தசை

ஐந்தாமிடத்தோன் ஸ்வக்ஷேத்திரத்திலோ, தன் அம்சத்தில் தன்னுச்சத்தில் பலவானுயிருந்தால் அத்தசையில் ஜாதகனுக்கு புத்திரர் அதிகத்தை சொல்லவும், சுபர் சேர்க்கையில் பிரபு என்றும் இல்லாவிடில் புத்திரவிருத்தி செய்யும் என்றும் சொல்லலாம். லக்னம் தன் னம்சநாதனிலிருந்து 8-ம் ராசி அம்சத்திலிருந்தால் அத்தசையில் ஜாதகனுக்கு புத்திரன் விரோதியாவான், பிராப்தியோக காலத்தில் அவன் மூலம் சுகபோகம் முதலியன சொல்லவும்.

(2) 5-மாதி ஆறும் ராசியில் அந்த அதிபனுடன் கூடியிருக்கில் அத்தசையில் அம்மானுக்கு பிரபல யோகம் சொல்லவும், அரசாங்கத்தில் பிரசித்தனுயிருப்பான், அரசன் மந்திரி மூலம் சுகம், 8 முதலிய அம்சமாகில் பங்கம் (நாசம்) அரசகோபம் முதலியதால் ஏற்படும்,பல ஈனனுகில் அற்ப பலன், பலவானுகில் முன்னுறைத்த பலன் சொல்லவும்.

(3) 5-மாதி 7-மிடத்தில் அவ்வதிபனுடன் கூடியிருக்கில் சுப சேர்க்கையாகில் அத்தசையில் புத்திரன் தேசாந்தரம் சென்றுன், அவன் மூலம் தன லாபம் உண்டு, அத்தசையில் மாமனுருக்கு பிரபுத்தன்மை அல்லது அக்காலத்தில் விவாகம் அல்லது புத்திரனுக்கு சுபம், பிராமணசந்தர்ப்பணை முதலியன சொல்லவும், தேவதை சுகம் - மஹோத்ஸவம் முதலிய பலன் - 5-மாதி துர்ப்பலனுகி ஒரே அம்சத்தில் 7-மாதிபதியுடனிருந்தால் புத்திர பீடை முதலியன, 8 முதலிய அம்சங்களிலிருந்தால் அது இல்லை.

(4) 5-மாதி 8-மிடத்தில் அந்நாதனுடன் கூடியிருக்கில் புத்திரர் அரிஷ்டம், சந்ததி பிறந்து பிறந்து மரிக்கும் - பிரபுவின் விரோதம் நேரும் அல்லது தகப்பன் விரோதம் நேரும், உபாஸிக்கும் தேவதை விரோதம் அல்லது மந்திரத்திற்கு கெடுதி - பல ஈனனாய் விசேஷமாய் பாபியுடனிருந்தால் அப்பலனில்லை, 12-மிடத்தோன் அம்சத்தில் சுபர் சேர்க்கையாகில் தோஷங்கள் அற்பமாகும்.

(5) ஐந்தாமிடத்தோன் 9-மிடத்தில் அவ்வதிபனுடன் கூடியிருக்கில் லக்னாதிபன் பலமற்றிருக்கில் வாலிபத்தில் தகப்பன் மூலம் சுகம், தகப்பன் செல்வத்திற்கு விருத்தி, அத்தசை வரும்போது பிரபுத்தவமும் கிட்டும் - அரசன், மந்திரி ஜன விசுவாசம் தகப்பனுக்கு கிடைக்கும் நிச்சயம் அல்லது செல்வம் மிகுந்த பிரபுவை அண்டி பணஞ் சம்பாதிப்பான், முடிவில் புத்திரன் மூலம் அதிக பாக்கியம் அனுபவிப்பான், 8 முதலிய அம்சங்களில் அற்பம், பலமற்றிடில் அதுவுமில்லை, பலயோகத்தில் சில சமயம் தெய்வத்தின் மூலம் பாக்கியம் சொல்லலாம் - குஜ க்ஷேத்திரத்தில் அல்லது குஜனில், கிராமத்திலுள்ள தேவதையால் பலன், சூரியன் - தேவாலயத்தில் எழுத்து வேலை, சந்திரன் - கோசாதிகாரி, புதன் - நியாயஸ்தலாதிகாரி, குரு - தர்மாதிகாரி, சுக்கிரன் அந்தப்புரத்தில் தாஸி, சனி - தண்டிக்கும் செய்கை இவ்வித பகிரங்கங்களில் பலனைக்கொண்டு எல்லாம் யுக்தியாலும் புக்தியாலும் சொல்லவும், குருவில் - உத்யோக மூலத்தாலும், சுக்கிரனில் தாஸி மூலத்தாலும் தனம் - இவ்விதம் வேறு கிரகங்களின் சேர்க்கையில் யுக்தியாலும் புக்தியாலும் அறிந்து சொல்லவும், இக் மாத்திரம் (சிறிதுதான்) சொல்லப்பட்டது அறிவாளிகளுக்கு சொல்லவேண்டியதில்லை.

(6) 5-மாதி 10-மிடத்தில் அவ்வதிபனுடன் கூடி, லக்னம். லக்னாதி அம்சம் கூடில், அல்லது லக்னாம்சத்திலாவது இருந்திடில் அத்தசாந்தர் தசா காலத்தில் ராஜ்யம் கிட்டும் சந்தேகமில்லை - சிங்காசனாதிபத்யம் நேரும் வர்க்கோத்தம பலத்துடன் கூடி உச்சராசி வர்க்கம் கூடில் வெகு தேசங்களுக்கு அதிபதியாவான் அல்லது புத்திரனுக்காவது இவ்விதமுண்டாகும், லக்னாதி பலமற்றிடில் இச் சந்நியாஸ யோகத்தில் மடாதிபதியாவான், 11-மிடத்தில் பலவானாயிருந்தால் வியாபாரத்தால் பிரபுவாவான், 2-மிடத்தோன் பரமோச்சாம்ச ராசியிலிருந்து இந்த யோகத்தில் அளவற்ற திரவிய லாபம் கிட்டும், அது ராஜ்யத்தாலாவது வியாபாரத்தாலாவது நேரும் - ஜல ராசியில் சர ராசியில் கப்பல் வியாபாரம், 8 முதலிய அம்சங்களில் பலமற்ற யோகத்திலிருந்தால் பலமற்ற கிரகங்களுக்கேற்ற பலன் சொல்லவும், பல ஈனனாகில் இவ்விதம் எல்லாம் முன் சொன்ன பலன் சொல்லவும், கிரகங்களுக்கு வியாபார யோகத்தில் அதன் பாவங்களுக்கேற்ற பண்டம்

முதலியன பலன் சொல்லவும் - ரூபம் பிரதானமான கிரகங்களுக்கு ரத்தின வியாபாரம், ஸ்பர்ச ப்ரதான கிரகங்களுக்கு சால்வை பட்டு வஸ்திரம் முதலியன, ரஸ ப்ரதான கிரகங்களுக்கு சர்க்கரை முதலியன, கந்தம் பிரதான கிரகங்களுக்கு கஸ்தூரி முதலியன, கிரகங்களின் பலாபலமறிந்து தாது முதலியன நிச்சயித்து வியாபாரத்தில் பண்டம் முதலியன சொல்லவும், உத்தியோகப்ராப்தி யோகத்திலும் கிரகங்களின் சேர்க்கை முதலியன மூலம் பலன் சொல்லவும் ராஜ்யஸ்தானம் (10-மிடம்) பலமுள்ளதாயிருந்தால் நான்கு விதங்களாக பலன் சொல்லவும் - (1) ராஜ்யாதிபத்தியம் (2) உத்தியோகம் (3) வியாபாரம் (4) பயிர்த்தொழில் இவை கிரகம் இருப்பு சேர்க்கை முதலியவற்றால் அனேக விதங்களாய் ஏற்படுகின்றன, முன்னுரைத்த பஞ்சசித்தாந்தங்களை நன்கறிந்து பலாபலம் சொல்லும், சோதிடன் என் விருப்பத்தை அடைந்து அனுசரித்து சொன்னால் சத்தியவாக்குடையவனுவான்.

(7) 5-மிடத்தோன் 11-மிடத்தில் அவ்வதிபனுடனிருக்கில் புத்திரனுடமிருந்தோ பிரபு மூலமோ சகோதரன் மூலமோ லாபம் சொல்லவும், இங்கு பிரபுக்களை கிரகங்களின் ராசிப்படி அறிய வேண்டும் - குரு - பிரபு பிராமணன், சுக்கிரன் ஸ்திரீ, சூரியன் அரசன், புதன் வைசியன் குஜன் அரசன். சந்திரன் வியாபாரி, சநி சூத்திரன் அல்லது மிலேச்ச சண்டாளர் என்று சொல்லவும், பாப ராசி அதிபதித் தன்மையால் அவர்களும் பாதிப்பார்கள், ஸாதக பாதகங்களைக் கிரகங்களைக் கவனித்து பலன் சொல்லவும் சுபர் சேர்க்கையாகில், சுப பலனும், பாபர் சேர்க்கையாகில் கெடுதியும் சொல்லவும்.

(8) 5-மிடத்தோன் 12-மிடத்தில் அவ்வதிபனுடனிருக்கில் ரோக யோகம் வருங்காலம் புத்தி மாறுபட்டம் ஆமய நோய் முதலியன சொல்லவும், அத்தசையில் பயித்தியம் பித்தரோகம் முதலியன சொல்லவும் - புத்திரருக்கு கெடுதி, பிதாவுக்கு பீடை முதலியன மனோ துக்கம் புத்தி மாறுபட்டம் பிரபு துவேஷம் முதலியன சொல்லவும், சுபர் சேர்க்கையாகில் ஞானவிருத்தி, விஷயங்களில் பற்றில்லாமை, சுகமான படுக்கை, வரவு ஸன்மார்க்கத்தில் செலவு உண்டாகும், பாபர் சேர்க்கையாகில் துர்மார்க்கத்திலும் மிச்ரமாகில் (கலப்பு) மிச்ரத்தாலும் செலவு, இங்கு லக்னாதிபன் பலமற்றிருந்தால் தரித்திரபல னனுபவிப்பான், தேசாந்திரங்களில் சஞ்சாரம், தினம் வீணலைச்சல் சொல்லவும்.

(9) 5-மிடத்தோன் லக்னத்தில் அந்த அதிபனுடனிருக்கில் சுபர் சேர்க்கையாகில் அத்தசையில் மனிதருக்குத் தலைவனுவான், தன் ஜாதி, குலத்திற்கு முக்கியனுயும் வாகனம் ஐசுவரியம் முதலிய லாபமுடையவனுவான், பாலியத்தில் ஸ்வீகாரத்தை (தத்து) அடைவான், சொல்ப புத்ரோற்பத்தி - 8 முதலிய அம்சங்களில்

துர்பலத்தன்மையாகில் அற்ப பிரபுவை அண்டுதல்-ஸ்வீகாரமில்லை பிரபுத் தன்மையுமில்லை, சுபர் சேர்க்கையாகில் பிரபு நேசம், அரச ரன்பு, தன வரவு, மந்திரஸித்தி அடைவான், தெய்வஸாந்நித்யம் கிடைக்கும், ஸந்நியாஸ யோகம் வரில் மடாதிபதி யாவான், நினம் அனேக சிடர் சேருவர், சிடர்களிடம் சன்மானம் பெருவான். துர்பலனாகில் அல்ப சிஷ்யஜனம், அற்ப ஸன்மானம் கிடைக்கும்.

(10) 5-மிடத்தோன் 2-மிடத்தில் அந்த அதிபனுட னிருக்கில் குடும்பவர்க்கத்திற்கு சவுக்கியம், போஜனாதி சுகம், தெய்வமூலம் தேவவாக்கு, சில சமயம் தனலாபம் கிடைக்கும், பல மற்றவனாகில் அற்ப பலன். 8 முதலிய அம்சங்களிலும் அவ் விதமே.

(11) 6-மிடத்தோன் 3-மிடத்தில் அந்த அதிபனுட னிருக்கில் அந்த தசை அந்தர் தசை காலங்களில் புத்திரோத் பத்தி சொல்லவும், சகோதரன் பிரசித்தனாவான், அத்தசை வருங் காலம் பிரபுவான், அதுவும் வாலிபத்தில் நேரும். காதணி, ஆபர ணங்கள்; உண்டாகும், மனச்சந்துஷ்டி, தைரியம், பல வீர்யவிருத்தி உண்டாகும், துர்பலனாகில் பலமற்றவனாவான். 8 முதலிய அம்சங் களிலும் அவ்விதமே.

(12) 5-மிடத்தோன் 4-மிடத்தில் அவ்வதிபனுடனிருக்கில் எப்போதும் வாகனம் முதலிய சுகம், பிரபு மூலம் சுகமடைதல். அரச சன்மானம், வாகன, ஐசுவரியப் பெருக்கம், அடைவான் 5-மாதி பல ஈனனாகில் புத்திர ஹானி அடைவான். கல்வியை பிரபுவுக்கு ஓதிவைப்பான், இவன் வீட்டிற்கு பிரபு வருவான், பிரபு மூலம் பூமி லாபம், சில சமயம் வாகனங் கிடைத்தல் உண் டாகும், பல ஈனனாகில் அற்ப பலன். 8 முதலிய அம்சங்களில் அதுவுமில்லை, இங்கேயே (நாலில்) சுபர் சேர்க்கையாகில் அனேக ராஜ்யங்களுக்கு அதிபதியாவான், அதிக கல்விசுகமாயடைவான், துர்பலனாகில் அனேக வாகனங்கள் அற்பம், துண்டு தேசத்திற்கு அரசன், ராஜயோகம் வந்தால் அகன்ற (விசாலமான) உயர்ந்த மாளிகை இவை முதலியன உண்டு. கிரக சேர்க்கையில் லக்ஷணம் முதலியன அறிந்து யுக்தியால் தசா பலன்களை நிச்சயித்து புத்தி களை பிரித்து புத்திநாதனாரம்பித்து அந்தரநாதர்களையும் பிரித்து பலமுள்ள கிரகமறிந்து அந்தந்த பலனை இங்கு சொல்லவும், ஜன்ம காலத்திலும் கோசாரத்திலும் பலமுள்ள கிரக பலனையும் எழுதவும்.

5-மதிபன் தசை முற்றும்.

## ஆறுமதிபன் தசை

(1) ஆறுமதிபன் தன் வீட்டில் சுபக்கிரகத்துடனிருந்தால் அத்தசையில் ஜாதகனுக்கு எப்போதும் சுகமுண்டாகும், கூடி யிருக்கும் பாவாதிபனுக்குத் தகுந்த பலன் தசை வரும்போது

தரும். கூடிய கிரக புத்தியில் அந்த பாவத்திற்கு விரோதஞ் செய்யும். மற்ற கிரகங்களின் புக்தி காலங்களில் தனம், சுகாதிகள் தரும், ஆரோக்கியம் காரியசித்தி சத்ருபீடை நிவர்த்தி, பூமி, வாகனம், பயிர் விருத்தி, உயர்ந்த வஸ்திர லாபம் முதலியன சொல்லவும், பல ஈனனுகில் அற்ப பலன், 8-12-ம் அதிபனுடன் கூடில், விசேஷமாய் காலம் வரையில் தனங்கொடுப்பர் சவுக்கியமுண்டாகும், கேந்திர திரிகோண அம்சங்களில் சத்துரு பீடை முதலியன சொல்லவும், 6-8-12 அம்சங்களில் மத்திம பலன்.

(2) 6-மிடத்தோன் 7-மிடத்தில் அவ்வதிபனுடனிருக்கில் சில சமயம் களத்திர பீடை, சில சமயம் சுகம் கிடைக்கும், சில சமயம் வேறு தேசத்தில் சத்துரு பீடை நிவர்த்தி, சுப காரியங்களில் தடை, சுப வித்தியும் உண்டாகும் 7-ஆமாதியுடன் கூடில் களத்திரத்திற்கோ தனக்கோ பீடை, மனைவியுடன் விரோதமாவது அந்த தசாந்தரங்களில் உண்டாகும், லக்னுதிபன் பாபக் கிரகத்துடன் கூடி பலமற்றவனுக இருந்திடில் தேக பீடை, மனஸ்தாபம் சத்ரு பாதை, அடி முதலியன, கடன் விருத்தி அங்கஹீனம், ஸ்த்ரீ தோஷம் முதலியன செய்வார். 6-மாதி 8 முதலிய அம்சங்களிலிருக்கில் களத்திர விரோதமில்லை, கேந்திர திரிகோண அம்சங்களில் காரகன் ராகுவுடனிருக்கில் களத்திரம் குற்றமடையும், அபவாதத்துடன் கூடியதாயுமிருக்கும், காரகன் பலமற்றவனுய் உபயராசியிலிருந்தால் விரோதத்தாலேயே இரண்டாவது மனைவியை விவாகஞ் செய்வான் நிச்சயம், சனி, குஜன் ராசியிலிருந்து சுக்ரன் அவருடன் கூடியாவது பார்க்கப்பட்டாவதிருந்தால் மனைவி விரோதத்தால் வேறு இடத்தில் பரஸ்திரீபோகமனுபவிப்பான், இரண்டாமிடத்தோனுடனிருக்கில் அத்தனை மாரகம் செய்யும், இவ்விதம் வேறு இடத்தில் யோகத்திலும் அந்தந்த பலனை ஏற்படுத்தி சொல்லவும்.

(3) 6-மிடத்தோன் 8-மிடத்தில் சுபக்கிரகத்துடன் கூடி, பார்க்கப்பட்டிருந்தால் சுபக்கிரகங்களின் அந்தர காலத்தில் சுப பலன் தருவர், லக்னம், ஆறு, எட்டு, இந்த இடத்திலிருந்தால் மகா ரோகங்களைச் செய்வார், லக்னேசனின் அந்தர காலங்களில் நோய் முதலியவற்றல் துக்கம் தருவர், ஏழ்மைத்தனமாவது சத்ரு பீடையாவது உண்டாகும், 6-8-12 அம்சங்களிலிருக்கில் லக்னுதி சுபாம்சத்திலிருக்கில், வியாதி சாந்தி, சத்ரு பீடை நிவர்த்தி. ராசி அம்சங்களில் லக்னுதி சம்பந்தமிருக்கில், சத்ருவாலும் நோயாலும் எப்போதும் விடுபடமாட்டான் சந்தேகமில்லை. 8-மிடத்திலிருப்பவன் எந்த பாவாதியுடனிருக்கிறனே அக்கிரகம் மாரக கிரகமாக சொல்லவும், பாவாதிபன் அந்தராந்தரங்களில் நோய் முதலிய பீடையாவது சொல்லவும்.

(4) ஆறுமிடத்தோன் ஒன்பதாமிடத்தில் பாபக்கிரகங்களுடன் கூடி காரகன் பலத்துடன் இருந்தால் தகப்பனுருக்கு

பீடையும், சத்ரு பயம் உண்டாகும், சத்ரு விருத்தி, தகப்பன் பொருளுக்கு அழிவு. முன்னோர்களுடைய அனுஷ்டானங்களும் தசா புக்தி அந்தரங்களில் கெடும், காரகனுடன் சேர்ந்தால் தகப்பன் மரணம், ஒன்பதாமிடத்தோன் 8-ஆமிடத்தோனுடன் கூடியோ பார்க்கப்பட்டோ இருந்தால் ஒன்பதிலிருந்தாலும் அக்காலத்தில் கர்பத்திலேயே பிதா மரணம், இவ்விதம் யோகம் முதலியவைகளைக் கண்டு பிதாவின் மரணத்தை நிச்சயிக்கவும், 7-மிடத்தோனுடன் கூடில்பிதாவுக்கு தேசாந்தரத்தில் மரணம், 6-மிடத்தோனுடன் மாத்திரம் சேர்ந்திருக்கில் தகப்பனுக்கு பாராமுகமாக யிருத்தல் நேரும், இங்கு சிறிதுதான் சொல்லப்பட்டது. மனிதன் எல்லா வற்றையும் யுக்தியால் சொல்லக்கடவன்.

(5) 6-மதிபன் 10-மிடத்தில் அந்த அதிபனுடனிருக்கில் நித்தியக் கடமையில் பங்கம், அருவருக்கத்தக்க செய்கை சொல்லவும். முன்னுறைத்த தொழில் வகைகளில் ஈனவிருத்தி சொல்லவும், அரசாங்கத்தால் பயம் அபகீர்த்தி செய்யும், ஸந்ததி (உண்டாகும் போது) வகையில் தாய்க்கு பீடை, சுபருடன் 6-8-12-அம்சங்களி லிருந்தால் முன் சொன்னதில் மத்திம பலன், சுபர் தசையில் சுபம், பாபர் தசை கெடுதி, எல்லாம் கிரகங்களுக்கு சொல்லியபடி சொல்லவும்.

(6) 6-மதிபன் 11-ல் 11-மாதியுடனிருந்தால் தன் தசாந் தரங்களில் லாபத்திற்கு கெடுதி செய்வார், சுபர் சேர்க்கையாகில் அம்மானிடமிருந்து சில சமயம் லாபம் சொல்லவும், மூத்த சகோதரன் விரோதம் சில சமயம் நிச்சயம் நேரும், 8 முதலிய அம்சங்களில் முன்னுறைத்த பலனுக்கு எதிரிடை, லாபாதிபன் பலத்துடனிருக்கில் சத்ருவின் ஜயமடைவான், கிரகங்களின் சேர்க்கை முதலியவைகளைக் கொண்டு எவ்விடத்திலும் பலன் சொல்லவும்.

(7) 6-ஆமதிபன் 12-மிடத்தில் அவ்வதிபனுடனிருக்கில் சத்ரு நாசம், சில சமயம் துர்மார்க்கச்செய்கை செய்வான், அத்தசை வரும்போது பாபச்செய்கையாவது செய்வான், 12-ஆம் ராசியை யடைந்தவன் எந்த பாவாதியுடன் கூடியிருக்கிறனோ அந்த புத்தி காலத்தில் பீடையையோ கெடுதியையோ செய்வான், அறிவாளி அவையவை எல்லாம் நன்கு ஆலோசித்து தசையில் சொல்லவும், அவனுக்கு சுபருடன் கூடியதசை சுபலனுள்ளதாய் அனேகமாக இருக்கும், 8 முதலிய அம்சங்களில் அற்ப பலன், திரிகோணத்தில் பூர்ண பலன்.

(8) ஆறுமதிபன் லக்கினத்தில் லக்னாதியுடனிருக்கில் அத் தசையில் ஜாதகனுக்கு ரோகபீடை நிச்சயிக்கவும், அவயவத்தில் ஊனமேற்படலோ, வாய்ப்புண், அரசரால் பீடை நேரும், ராகு சேர்க்கையில் திருட்டு உபத்திரவம் அதன் மூலம் விலங்கு முதலி யன நேரும், சூரிய சந்திரர் பலமற்றிருக்கில் ஏழ்மைத்தனத்தால்

கஷ்டம் உண்டாகும், 6-8-12-அம்சங்களில் லக்னேசன் தன்னம் சத்திலும் சுபர் சேர்க்கையால் முன் சொன்ன மத்திம பலன் சந்தேகமில்லை, 6-8-12-ஆமதிபருடன் கூடில் அவர் பெருவியாதி தருவர் (செய்வார்), லக்னத்திலிருந்தோ லக்னம்சத்திலிருந்தோ பக்கலிலிருந்தால் அத்தசை சத்ரு பீடை - நோய் பாதை, ஏழ்மை - வருந்துதல் தரும், மேலும் மேலும் விருத்தி - நிவர்த்தியில்லை மாணமுமில்லை, இவ்விதமே வேறு இடங்களிலும் யுக்தியாய் ஏற்படுத்திக் கொள்ளவும்.

(9) 6-ஆமாதி 2-மிடத்தில் அவ்வதிபனுடனிருக்கில் வீட்டில் நித்தம் சண்டை, குடும்ப ஜன விரோதம், அகால போஜனம், சத்ருமூலம் பொருள் செலவு, பல்நோய் கண்ணோய், ரணபீடை இவை தருவான்; சுபர் சேர்க்கையாகில் சில சமயம் சவுக்கியம் ரணங்காரணமாய் சில சமயம் பொருள் செலவு, சுபர் அசுபர் சேர்க்கையாகில் கலப்பு பலன்; பாபர் சேர்க்கையாகில் எப்போதும் நன்மை, லக்னாதி சேர்க்கையாகில் அத்தசை மரணத்திற்கு காரணம், லக்னாதியின் புத்தியில் மரணம், வாஸிபத்தில் கெடுதி, சில சமயம் கஷ்டத்திற்கு காரணமாகும், எல்லாம் ஆலோசித்து சொல்லவும்.

(10) ஆறுமாதி மூன்றுமிடத்தில் அவ்வதிபனுடனிருக்கில் சகோதரன்சத்துருவாவான், காதுநோய் முதலியனநேரும், சத்துரு மூலம், பொருள்செலவு உண்டாகும், சில சமயம் அதைரியம் உண்டாகும், அல்லது காதில் கடூர ஓசையுண்டாகும், சுபர் சேர்க்கையாகில் கலப்பு பலன், 8 முதலிய அமிசைகளிலும் அவ்விதமே, கேந்திர கோணங்களில் முன் போல் நேரும், காரகன் பல ஈனனாகில் சகோதரனுக்கு வியாதி, மாரககிரகத்துடன்சேரில் அப்போது மரணமும் தருவர்.

(11) 6-மிடத்தோன் 4-ஆமிடத்திலிருந்து சந்திரன் ராகுவுடன் கூடில் தாய் தோஷமுடையாள், முதுமையில் ரோகந்தரும், குஜன் பல ஈனனாகில் பூமி சத்துருவால் கைகொள்ளப்படும். புதன் பல ஈனனாகில் கல்விக்குத்தடை, சுக்கிரன் பல ஈனனாகில் வாகனத்தால் பயம், 4-மிடத்தோன் பலத்துடனிருந்தால் விதவைத் தன்மை நிச்சயம்வரும், லக்னாதியும் 4-மிடத்தோனும் ஒருவருக்கொருவர் எதிரியாகில் அவ்விருவரும் 6-8-ல் இருந்தால் தாய்விடப்படுவாள், சுபர் சேர்க்கையில் கலப்பு பலன், பாபர் சேர்க்கையில் வேறு, பசு ஹானி, பயிர் நாசம், பயிர்த்தொழில் பயனற்றதாகும், இவ்விஷயத்தில் இவை முதலியதை நன்கு ஆராய்ந்து அத்தசை வரும்போது பலன் சொல்லவும்,

(12) 6-க்குடையவன் 5-ல் அவ்வதிபனுடனிருக்கில் பிரபு விரோதியாவான், புத்திரனாவது தகப்பனாவது விரோதியாவர், புத்திரருக்கு நோய் முதலியன அல்லது தடங்கல் செய்வர், ஜபம் ஆரம்பத்தில் தடை, தேவதையிடம் பயனற்ற அறிவு. பயனற்ற

அறிவு வீண் காரியங்களில் வாதம் செய்வர், 8 முதலிய அம்சங்களில் அற்ப பலன், சுபர் சேர்க்கை கலப்பு பலன், பாபர் சேர்க்கை புத்திர ஹானி அல்லது சில சமயம் புத்திரனின்மை நேரும்.

(13) 6-க்குடையோன் கேந்திர கோணங்களிலிருக்கில் லக்னாதிபன் பல மற்றிருக்கில் விலங்கு யோகமடைவான், அரசாங்க பயமடைவான், கூடியவர் பார்த்தவர் அந்தராசிக்கதிபர் இவர்கள் காரணமாய் விலங்கு கிடைக்கும், லக்னாதிபனும் ஆறுமிடத்தோனும் கூடி எவ்வீட்டிலிருக்கிறார்களோ அவ்வதிபன் எங்கிருக்கிறானோ அவர் காரணமாய் நோய், எதிரி, மரணம், இவை சொல்லவும், கூடி, பார்த்த கிரகங்களின் புத்தி காலங்களில் கெடுதி, பாப கிரகம் கூடியும், பார்த்துமிருந்தால் கோசாரத்தில் பாபர்களிடையிலிருந்தால் எந்த பாவத்தில் அக்குரூர கிரகமிருக்கிறதோ அந்த பாவத்திற்கு அழிவு அல்லது சீக்கிரம் கெடுதி, லக்கினத்திலிருக்கில் தேக பீடை, இவ்விதம் ஜனன லக்கினத்திலிருந்தால் பிறந்ததும் மரணம், இவ்விதம் எங்கும் நன்கு ஆராய்ந்து அறிவாளி பலன் சொல்லவும்.

ஆறுமதிபன் தசை முற்றிற்று.

## 7-ம் அதிபன் தசை

(1) ஏழாமிடத்தோன் 7-ல் சுபக் கிரகங்களுடன் கூடில் வாலிபத்தில் விவாகமாகும், மனைவி பாக்கிய குலத்திலுதித்தவள், அழகு நன்னடக்கையுடையவள், கணவனுக்குப் பிரியமானவள், அனேக வாத்தியங்கள் முழங்க அதிக தனம் செலவழித்து விவாகம் நடைபெறும், அத்தசையில் சுபம், வெகு பந்து ஜன வரவு வீட்டில் எப்போதும் சுபம், பாபயோகம் (சேர்க்கை) மாரணந்தரும், கூடியும் பார்த்துமிருக்கும் கிரகங்களின் பலனை புத்தியில் கூட்டிச் சொல்லவும், பல ஈனனாகில் அற்ப பலன், 6-8-12-ல் வெகு காலத்திற்கு பிறகு விவாகம் அல்லது மனைவி மரணமடைவாள், அந்த தசாந்தரங்களில் மரண மில்லாவிடில் விரோதமாவது உண்டாகும்.

(2) 7-மாதி 8-லிருந்தால் பாபக் கிரகத்துடன் கூடிய காரகன் பலமற்றிருக்கில் அத்தசாந்தரங்களில் நன்மை யில்லை, மனைவியாவது மரணமடைவாள் அல்லது தானாவது மரணமடைவான் அல்லது பெண்கள் மூலம் பெரிய நோய்கள் அல்லது அதிக கஷ்டமான வெளி வாசம் நேரும், 8 முதலிய அமசங்களில் அப்பலனில்லை, எல்லாம் யுக்தியால் சொல்லவும்.

(3) 7-மதிபன் 9-ல் சுப கிரகங்களுடன் கூடியிருக்கில் மனைவி பொருளடைவான், ஆயுள்வரை சுகம், வெளிச்சென்ற தகப்பனுடைய அளவு மீறிய பொருள் கிடைக்கும், வேறு தேசத்தில் தர்ம விருத்தி சில சமயமுண்டாகும் நிச்சயம், அறிவாளியால் கூடியிருக்கும் கிரகங்கள் மூலம் பலன் நன்கு ஆராய்ந்து சொல்லவும், இஃது நன்கு ஆராய்ந்து என்பது முக்கியம், பல ஈனனாகில்

அற்ப பலன், 8 முதலிய அம்சங்களில் அது இல்லை, 8 முதலிய பாவ ராசி நிலை உடலக்ஷணம் பாப கிரகங்களின் சேர்க்கை இவைகளால் மரணம் முதலியன ஊகிக்கவும்.

(4) 7-மிடத்தோன் 10-ல் அவ்வதிபனுடனிருக்கில் தேசாந்தரங்களில் புகழும் தர்மச் செய்கை முதலியன சொல்லவும், மனைவி குணமுடையாள், புகழுரை பெறுவான், அவன் கட்டளை தேசாந்தரங்களில் சிரசால் வகிக்கப்படும். 10-மிடத்தோன் பலமற்றிடில் எல்லாம் அற்பமாகும் நிச்சயம், லக்னுதி சுபருடன் கூடி 6-மிடத்தோனுடன் சேர்ந்திடில் சேனைத் தலைவன், குதிரை வீரன், தேசம் விட்டு தேசம் செல்லுவான். எதிரி அரசர்களை வென்று யுத்தத்தில் புகழுறுவான், மரணயோகம் நேரில் யுத்த பூமியில் மாள்வான்.

(5) 7-ஆமாதி 11-ல் சுபக் கிரகங்களுடனுறைந்திடில் 7-ஆமாதி பரமோச்சத்திலிருந்தால் தேசாந்தரங்களில் லாபம், பல ஈனனுகில் அற்பம், பாப கிரகங்களுடனிருந்தால் வேறு பலன்.

(6) 7-மாதி 12-ல் அவ்வதிபனுடனிருக்கில் சுக்கிரன் பல ஈனனுகில் மனைவிக்கு ஆபத்து, போகஹானி, பாபர் சேர்க்கையில் முக்கியமாயடைவான், சுபர் சேர்க்கையாகில் மத்திம பலன், சில சமயம் வெளிவாசம்.

(7) 7-மதிபன் லக்னத்தில் அவ்வதிபனுடன் கூடில் தேசாந்தரத்தில் வாசம், வெளி தேசத்தில் சுகம் சொல்லவும், அவனில்லாள் சுதந்திரமுடையவளாய் வீட்டு காரியங்களில் தலைமை பெற்றிருப்பாள், எப்போதும் யாத்திரையிலேயே கருத்து, சுபர் சேர்க்கையாகில் கப்பலோட்டி அல்லது அவர்கள் தலைவன், பாபர் சேர்க்கையில் பிச்சைக்காரன், எப்போதும் பிச்சை எடுப்பான். கலப்பு சேர்க்கை, கலப்பு பலன், லக்னுதிபன் பல ஈனனுகில் அந்த தசை மரணம் தரும். 7-ஆமாதி பலமற்றிருக்கில் அல்லது 8 முதலிய அம்சங்களிலிருந்தால் யாத்திரை வீணுகும் அல்லது முன் சொன்ன பலன் விரோதம்.

(8) 7-மாதி 2-ல் அவ்வதிபனுடனிருந்தால் களத்திரத்தால் தன வரவு, சில சமயம் தூலவிலிருந்து பொருள் வரவு, அத்தசை வருங்கால் களத்திரத்திற்காவது தனக்காவது மரணம், தூர தேசத்தில் பிரிவு, வேறு மனைவி கிடைத்தல், 8-ஆம் அம்சத்தினில் களத்திர மரணமில்லை என்றுரைக்கவும், மரண காலம் வந்தால் சகோதரியே மரணம் என்று சொல்லவும், கூடி, பார்த்த கிரகங்களின் பலனைக் கூட்டி சொல்லவும்.

(9) 7-மிடத்தோன் 3-ல் அவ்வதிபனுடன் கூடியிருக்கில் அத்தசையில் ஜாதகன் மாமனுர் முதலியோருக்கு விருத்தி, அல்லது வேறு விவாக யோகம், சகோதரன் மரணம், அல்லது 3-மிடத்தோன் புத்திகளில் வெளி வாசமாவது செய்யும், சுபர் சேர்க்கை

யில் சில சமயம் சகோதர சுகம், பாபர் சேர்க்கையில் மரணம், 8 முதலிய அம்சங்களில் இல்லை.

(10) 7-மிடத்தோன் 4-ல் அவ்வதிபனுடனிருக்கில், களத்திரத்தைச் சேர்ந்தவர்களால் சவுக்கியம், பூமி காரணமாக எப்போதும் அலைச்சல், தசை ஆரம்பத்தில் விவாகம், களத்திர சுகமனுபவிப்பான், தூரத்தில் கல்வி மூலம், தனம் அல்லது வாகனம் கிடைக்கும், அப்போது தாய்க்கு மரணம் அல்லது பீடை செய்யும், 7-ஆமதிபன் பல ஈனனுகில் எல்லாம் யுக்தியால் ஊகித்துச் சொல்லவும், முன் சொன்ன பலன் அற்பம், 8 முதலிய அம்சங்களில் இல்லை.

(11) 7-மதிபன் 5-ல் அவ்வீட்டோனுடனிருந்திடில் அத்தசையில் மனைவி, மகன் மரணம், அறிவாளிகள் சுபர் சேர்க்கையால் புத்திரர்களுக்கு சுபம் சொல்லுகின்றனர், தேசாந்தரம் சென்ற பிரபு பத்திரிகை முதலியன அனுப்புவான், புத்திரனோ, தகப்பனோ, தனம் முதலியன அனுப்புவர், 8 முதலிய அம்சங்களி எதிர் பலன், பல ஈனனுகில் அற்ப பலன்.

(12) 7-மதிபன் 6-ல் அவ்வதிபனுடனிருக்கில் பாபர் சேர்க்கையில் அத்தசையில் மனைவிக்கு ஆபத்து, நோய், வாதை அல்லது குற்றம் அல்லது நீக்குதல் உண்டாகும், அல்லது தூரதேசத்திலுள்ள சத்துரு சபை நடுவில் சண்டையிடுவான், அல்லது அம்மானுக்கு கெடுதி அல்லது மரணம் நேரும் சந்தேகமில்லை, அத்தசாந்தரங்களில் களத்திரத்தை நீக்குதல் அல்லது கெடுதி சொல்லவும், சில சமயம் வீட்டில் தேசாந்தரம் சென்ற திருடன் பொருளைக் களவாடுவான், சுபர் சேர்க்கையில் மத்திம பலன், 8 முதலிய அம்சங்களில் வேறு பலன், கூடி பார்த்த கிரகங்களின் பலத்தைக் கூட்டி பலன் சொல்லவும். இதில் சொல்லாததை வேறு இடத்திலிருந்து பஞ்சசித்தாந்த வழியைக் கொண்டு சொல்லவும்.

ஏழாமதிபன் தசாபலன் முற்றிற்று.

## 8-ஆமதிபன் தசை

(1) 8-ஆமதிபன் 8-ல் தன்னுச்சத்தில் சுபக் கிரகங்களுடன் கூடியோ பார்க்கப்பட்டோ இருக்கில், கூடி, பார்த்த கிரகங்களுக்கு ஏற்றவையான பலன் உண்டாகும், அங்கு சுப பலனே சொல்லவும், தசா காலத்தில் மனிதருக்கு தனம், வாகனம் முதலிய சுகம், அரசாங்க வெகுமானம் நிச்சயிக்கவும், 8-ஆமதிபன் 8 முதலிய அம்சங்களிலிருந்தால் சுபர் சேர்க்கை பலனில்லை, அற்ப பலன் தான், பல ஈனனுயினும் இவ்விதமே, பாபர் சேர்க்கையில் கஷ்ட பலன், பெரிய நோய் முதலியன நேரும். தகப்பனழிவு, காரிய நாசம், யோகநாசம் முதலியன சொல்லவும்.

(2) 8-ஆமதிபன் 9-ல் அவ்வதிபனுடன் கூடில் சூரியன் பல ஈனனுகில் அத்தசை பிதாவுக்கு ஹானி, பிதா விரோதம், பிதாவின்

பொருளழிவு உண்டாகும், சுபர் கூடில் கலப்பு பலன், தர்மத்திற்கு கெடுதி உண்டாகும். 9-ஆமதிபன் பலமற்றிடில் அத்தசை கஷ்டந்தரும், ஏழ்மைத்தனத்தால் வருத்தம், அரசாங்க விரோதம் நேரும், கூடிப்பார்த்த கிரகங்களுக்கு ஏற்றவாறு அறிவால் பலன் ஏற்படுத்தவும்.

(3) 8-ஆமிடத்தோன் 10-ல் அவ்வதிபனுடன் கூடில் அத்தசை தொழில் நாசம், ஈனத்தொழில் தரும். எப்போதும் கெட்ட செய்கையிலேயே பற்று அபவாதம் முதலியன நேரும், சில சமயம் அரசாங்க கட்டளை, அவமதிப்பால் தண்டனை தரும், 10-ஆமதிபன் பல ஈனனுகில் ஏழ்மைத்தனத்தால் அதிக பீடை, தாய் நாசம், அயல் ஸ்திரீயால் வளர்க்கப்படுவான், செவ்வாய் 4-5 அதிபருடன் கூடி பலமற்றிருக்கில் அறிவாளிகள் கட்டளைச் செய்கையால் பூமி நாச மூறைக்கின்றனர் அல்லது கடனுல் உபத்திரிக்கப்பட்டு பூமியை கடன் கொடுத்தவன் கை கொள்வான். சந்திரன் பலமற்றிடில் தாய்க்கு நாசம், புத்திமானுல் இவ்விதமே வேறு இடங்களிலும் யுக்தியால் நன்கு ஆராய்ந்து பலன் சொல்லத் தக்கது. 8-ஆமதிபன் பலமற்று அல்லது 8 முதலிய அம்சங்களிலிருந்தால் முன் சொன்ன பலன் மத்திமம் அல்லது அப்போது கலப்பு பலனுவது சொல்லவும்.

(4) 8-ஆமதிபன் 11-ல் அவ்வதிபனுடனிருக்கில் மூத்த சகோதரன் விரோதம், அல்லது கெடுதியை குறிக்கும் வியாபாரத்தில் லாப ஹானி, கடன் பெருக்கு நேரும், சுபர் சேர்க்கையில் கலப்பு பலன், பாபர் சேர்க்கையில் வேறு பலன்.

(5) 8-ஆமதிபன் 12-ல் அவ்வதிபனுடனிருக்கில் 6-ஆமாதியுடன் கூடில் அத்தசை யோகம் தரும், ராஜயோகம் முதலியன, வாகனம் உண்டாகும், சுபர் கூடில் கஷ்ட பலன், கூடிய கிரகத்தின் பலன் குறைவு.

(6) 8-ஆமிடத்தோன் லக்னத்தில் அவ்வதிபனுடனிருக்கில் ஏழ்மைத்தனத்தால் துக்கம், கடனுல் பீடிக்கப்படுவான், நிச்சயம், சுபர் கூடில் கலப்பு பலன், பாபராகில் நோய் முதலியன, அரசாங்க விரோதம், மன நோய் உண்டாகும். லக்னுதி பல ஈனனுகில் முக்யமாய் முன் சொன்ன பலன், 8 முதலிய அம்சங்களிலும் பல ஈனனுயிருக்கும், போதும் மத்திம பலன்.

(7) 8-ஆமிடத்தோன் 2-ல் அந்த அதிபனுடனிருந்தால் அத்தசையில் எப்போதும் குடும்பத்திற் கஷ்டமுண்டாகும், நிச்சயம். களத்திர ஹானி அல்லது தன ஹானி உண்டாகும், இவனுக்கு மரண காலம் உண்டாகும் பொழுது தானுவது மரணமடைவான் எங்கும் தனம் கிடைக்காது, கிட்டும் யோகம அதிக மிருக்கும், மனையாளின் விரோதமுண்டாகும், எப்போதும் வீட்டில் சண்டை நேரும், அக்காலத்தி வாக்விதியும் அடிக்கடி சபா கம்பமும்

உண்டாகும், 8 முதலிய அம்சங்களில் மத்திம பலன், சுபர் சேர்க்கையாகில் கலப்பு பலன், பாபர் சேர்க்கையில் கஷ்டம், ஒருவனே குடும்பத்தை கவனிக்கவேண்டும், ஏழ்மைத்தனத்தால் வருத்தம், தகாத போஜனம் புசித்தல், நித்தம் அகால போஜனம், பல் நோய் விருத்தியாகும், கண்களுக்குப் பீடை, மனஸ்தாபம் முதலியன பலன் செய்வார்.

(8) 8-ஆமிடத்தோன் 3-ல் அவ்வதிபனுடனுறைந்திடில் நித்தம் கடன் அதிகம், சகோதரர்களுக்கு பீடை செய்வர் தினம், அதைரியம் காது நோய் முதலியன உண்டாகும், சகோதரர் மனஸ்தாபம், பராக்கிரம வீழ்ச்சி முதலியன சொல்லவும், சுபர் சேரில் மிச்ர பலன், சுக துக்கம், சமம், முக்கியமாய் பாபயோகத்தில் துக்க பலன் ஏற்படுத்தவும், 6-12-ம் அதிபன் சேர்க்கையில் சுப பலன் சொல்லவும், தன விருத்தி, ராஜ யோகம் முதலியன

(9) 8-ஆமிடத்தோன் 4-ல் அவ்வதிபனுடனிருக்கில் சில சமயம் சுகம், சில சமயம் கஷ்டம். பூமி, பசு முதலியன நஷ்டம், கல்வி, வாகன பங்கம், சில சமயம் தாய் பீடை உண்டாகும், சுப சேர்க்கையில் சுபமும், பாபரில் அனர்த்தமும் சொல்லவும், அரசாங்க விரோதம், பசு, பூமி நாசம், தாய்க்கு கெடுதி, நாற்கால் பிராணிகளால் பயம், அயலார் பூமியில் வாசம், பிச்சையெடுத்தல், துக்கமனுபவித்தல் உண்டாகும், மற்றவை எல்லாம் கிரகங்களுக்குத் தக்கபடி யுக்தியாலேயே ஏற்படுத்திக்கொள்ளவும்.

(10) 8-ஆமிடத்தோன் 5-ல் அவ்வதிபனுடனிருந்தால், தகப்பனுர் விரோதமோ அல்லது புத்திரனுவது குற்றம் செய்பவனுவான், சில சமயம் பிரபுவின் மூலம் விரோதத்தால் அரசாங்க பயம் நேரும், அல்லது புத்திர பீடை அல்லது மந்திராரம்பம் வீணுகும். 5-ஆமாதி பல ஈனனுகில் புத்திர அரிஷ்டம் முக்கியமாய் நேரும், பிறந்து, பிறந்து மரிக்கும், எவ்விதத்திலும் அரிஷ்டமடைவான், சுபர் சேர்க்கையில் கலப்பு பலன், பாபர் சேர்க்கையில் அரிஷ்டம், 8 முதலிய அம்சங்களில் சுபம், மத்திமம், கேந்திர கோணங்களில் கெடுதி, லக்னுதிபன் ரோக யோகத்திலிருந்தால் மன மறதி யோகம், அபஸ்மாரம் முதலிய நோய்கள், சில சமயம் மயக்கம் அல்லது பிரமை உண்டாகும்.

(11) 8-ஆமிடத்தோன் 6-ல் அவ்வதிபனுட னிருக்கில், சத்ரு நாசம், அம்மானுக்கு கெடுதி, அத்தசையில் திருடர் அதிகம், அவ்வதிபன் பலத்துடனிருந்தால் ஆயுள் விருத்தி, சில சமயம் நோய் பீடை, 8-ஆமிடத்தோன் கேந்திர கோணங்களிலிருந்தால் அத்தசை கெடுதி செய்யும், 6-8-12-ல் அத்தசையில் நன்மை யுண்டாகும், கேந்திர திரிகோணங்களில் சுபாவ பாபியாய் லக்னுதிபன் பலமற்றிருந்து கேந்திர திரிகோணங்களில் சுபரில்லாவிடில் ரோக யோகம் வருங்காலம் மஹா ரோகம் சொல்லவும், அவ்விடத்தில் 12-ஆமதிபனுடனிருந்தால் சுப பலன் சொல்லவும்.

(12) 8-ஆமாதி 7-ல் அவ்வதிபனுடனிருந்திடில் களத்திர பீடை சொல்லவும், குரூரனுகில் தனக்கு பீடை, மரணயோகம் வரில் தூரதேசத்திலாவது மரணஞ் சொல்லவும், அவ்வதிபன் பலவானுய் லக்னுதிபனும் பலத்துடனிருந்தால் விசேஷமாக சுபம் செய்வான்.

(13) போது விஷயம்:—6-ல் சத்துரு பயத்தால் பீடை, 12-ல் பலவிதங்களாலும் அத்தசை வருங்காலம் செலவு அதிகம், 8-ல் துக்கத்திற்கு காரணமாகும், ஏழ்மைத்தனத்தால் பயம் பீடை நிம்மதியில்லை பயம் மேற்படும், சுபர் சேர்க்கையில் சவுக்கியம் செய்யும், 8-ஆமதிபன் இயற்கை சுபனுகில் கலப்பு பலனைத்தருவர் இவ்விதமாக எங்கும் அறிவாளிகளால் ஆராய்ந்து பலனுரைக்கத் தக்கது, 8-ஆமதிபன் அம்சங்களிலேயும் இவ்விதமே பலனளிப்பவ ராவார், 8-ஆமிடத்தோனிருக்கும் ராசி அதிபன் கேந்திர கோணத் தில் சுபரால் காணப்பட்டால் சுபருடன் கூடில் சுபம் தருவர், தானிருந்த பாவத்திற்கு கெடுதி செய்வர், அம்சத்தில் இவ்விதமே உண்டாகும், எல்லாம் யுக்தியால் ஏற்படுத்திக்கொள்ளவும், இவ்வி தம் தசா பலத்தை அறிந்து பிறகு புத்திகளை ஏற்படுத்தவும். அறிவாளிகளால் முன்னுரைத்த முறைபடியே பலன் ஆலோ சிக்கத்தக்கது, 8-ஆமதிபனுக்கு பலன் ஏற்படுத்துதலில் இங்கு கொஞ்சம் விசேஷமுண்டு, சுபருடன் கூடிய 8-ஆமதிபனின் தசா புக்தி சுபம் தரும், 8-ஆமதிபனுடன் கூடிய பாபகிரக தசை சுபமளிக்கும், கேவல பாபியுடன் கூடி கேந்திர கோணத்தி லிருந்தால் சுபனும் அத்தசைகாலத்தில் தன் புக்தியில் துக்கபலன் தருவர், தேகஜாட்டியம், நிலையற்றமனம், பந்துபீடை, தாய்பீடை, களத்திர அபவாதம் உண்டாகும், சுபர் சேர்க்கையில் அற்ப தோஷம், 8-ஆதி சுபனுகில் குற்றமில்லை அவ்வதிபனிருக்கும் ராசி யதிபதி 8-ஆமாதியுடன் கூடில் தசாதிபன் துக்கந்தருபவனுயும், ஏழ்மை பயமளிப்பவனுயுமிருப்பான், புக்தி நாதனும் இவ்விதமே தன் காலத்தில் துக்கந்தருபவனுவான் அற்பந்தான் சொல்லப் பட்டது எல்லாம் யுக்தியால் ஏற்படித்திக்கொள்ளவும்.

8-ஆதி தசை முற்றிற்று.

## 9-ஆமதிபன் தசை

(1) 9-ஆமதிபன் 9-ல் சுபக்கிரகங்களுடன்கூடியோ பார்க் கப்பட்டோ இருந்தால் பிராப்தியோகம் வருங்கால் அத்தசை பாக்கியவிருத்தி செய்யும், பிதாவின் செல்வத்திற்கு விருத்தி தர்ம மூலம் பொருட்செலவு கூடிய கிரகத்திற் கேற்றபடி மனிதருக்கு அதிக பலன் தரும், பாபர் சேர்க்கையில் பாக்கிய நாசம் அல்லது தகப்பனுர் மரணம், ஏழ்மைத்தனமடைவான், நிலையற்றமன முடையவனுவான், பல ஈனனுகில் அற்ப பாக்கியம், 8 முதலிய அம்சங்களிலும் அவ்விதமே.

(2) 9-ஆமதிபதி 10-ல் அவ்வதிபனுடனிருக்கில், சுபருடன் சேரில் அக்காலத்தில் அரசர் மூலம் பொருள் வரவு, வெகு கீர்த்தி பரதிஷ்டை, புண்ணிய மார்க்கத்தை கைகொள்ளல், கிணர் தோண்டுதல் முதலிய தர்மம், அரசாங்க காரியத்தில் தலையிடல் முதலிய பலன், பல ஈனனுகில் அவன் அற்ப காரியங்களும், செய்கைகளுஞ் செய்வான், பாபர் சேர்க்கையில் அற்ப செய்கை சில சமயம், உத்தியோக நாசமுடையவனுவான், துஷ்டசெய்கையில் பற்று, ஈனஜாதியை அண்டுதல் முதலிய பலன், இந்தயோகத்தில் தொழில் நாசம் அரசாங்க மூலம் ஏற்படும், அரசாங்கபயம், பசு, பூமி முதலிய அழிதல், உண்டாகும்.

(3) 9-மிடத்தோன் 11-ல் அவ்வதிபனுடன் கூடில் தகப்பன் மூலம் லாபம், வியாபாரத்தால் பொருள்வரவு, அங்கு சூரியன் பலவானுகில் (பலத்துடனிருக்கில்) தகப்பனுக்கு பிரபலத் தன்மை நிச்சயிக்கவும், ராகுவாகில் அவன் தகப்பன் பிரசித்தன் அவன் மூலம் வெகு செல்வம், அத்தசையின்போதுகூடிய கிரகத் தின் மூலம் லாபம் சொல்லவும், பல ஈனனுகில் அற்பம், பாபியாகில் நஷ்டம் உண்டு.

(4) 9-ஆமாதிபதி 12-ல் அவ்வதிபனுடனிருந்தால் செல்வத் திற்கு குறை, தகப்பனுக்கு கெடுதி அல்லது தர்ம மூலம் பொருள் விரயம், சுபர் சேர்க்கையாகில் அத்தசையில் சில சமயம் தேசாந் தரத்தில் இருப்பு, தேசாந்தரத்தில் தனலாபம் அல்லது தகப்பன் தூரதேசஞ்செல்லுவான், காரகன் சுபர் சேர்க்கையிலிருந்தால் தகப்பனுக்கு பிரபலத்தன்மை நிச்சயிக்கவும், பாபர் சேர்க்கையில் பிதாவுக்கு அல்லது தனக்கு கஷ்டம், 8 முதலிய அம்சங்களில் கலப்பு பலன், பல ஈனனுகிலும் அவ்விதமே ஆகும்.

(5) 9-ஆமதிபன் லக்னராசியில் அவ்வதிபனுடன்கூடில் சுபர் சேர்க்கையில் அத்தசையில் அரசன் மந்திரி அல்லது அரசன் வாகனம்,ஐசுவரியம், கிடைத்தல், தகப்பன் செல்வம் உயர்ந்த நிலை, நித்தம் அனேகரை காப்பவன்,ராஜகாரியத்தில் தலைமைவகிப்பவன் ஆவான், பல ஈனனுகில் அற்பம், 8 முதலிய அம்சங்களில் அதுவு மில்லை, குஜன் பாக்கியாதியாகில் பூமி பாக்கியம் அதிகம், அவ்விடத்தில் சேனுபதி உத்தியோகமாவது கிடைக்கும் சந்தேக மில்லை, ராகுவுடன்சேரில் மிலேச்ச அரசர் மந்திரி, சந்திரனுகில் பொக்கிஷ அதிகாரி, இவ்விதம் முன்னுரைத்தபடி பாக்கியத்தின் காரணத்தை ஏற்படுத்திக் கொள்ளவும்.

(6) 9-க்குடையோன் 2-ல் அவ்வதிபனுடன் கூடியிருக்கில் பணச்செல்வம் மிகுந்தசீமான், லக்ஷத்துக்கதிகமான தனவர வுடையவன், எங்கும் வாக்சித்தி பெற்றவன், குடும்பத்தில் அதிக விருத்தி செய்பவன், சுகபோஜனம் கிடைக்கும், பாபர் சேர்க் கையில் அற்பம் அல்லது மாரகயோகத்தில் மரணம் தரும், 8

முதலிய அம்சங்களில் வேறு பலன், கூடிய கிரகத்தின் பலனைச் சொல்லவும்.

(7) 9-ஆமிடத்தோன் 3-ல் அவ்வதிபனுடனிருக்கில் அத் தசையில் ஜாதகனுக்கோ அல்லது தகப்பனுக்கோ விருத்தி ஏற்படுத்தவும், மேலும் மேலும் விருத்தி அல்லது சகோதரனுக்கு யோகவிருத்தி, சங்கீதத்தால் பலன், சில சமயம் கானவித்தையால் சுகம், பல ஈனனாயினும் 8 முதலிய அம்சங்களிலிருந்தாலும் அற்ப பலன் ஆகும்.

(8) 9-க்குடையோன் 4-ல் அவ்வதிபனுடனிருக்கில், குஜன் பலவானுகில், பூமிமூலம் பாக்கியவிருத்தி, சுக்கிரன் பலவானுகில் வாகனம் கிடைத்தல், மாலை, சந்தனம் முதலிய வாசனாதிரவிய சுகம், புதன் பலவானுகில் கல்வியால் பாக்கியலாபம், குரு பலவானுகில் அரசன் மந்திரிஸ்தானம் கிடைத்தல், சனி ராகு, பலத்துடனிருக்கில் மிலேச்ச, நீச்சப்பிரபுக்களால் கொண்டாடப்படுவான், தசை வருங்கால் இவ்விதம் யோகத்துக் கேற்றபடி பலன் சொல்லவும்.

(9) 9-க்குடையோன் 5-ல் அவ்வதிபனுடனிருக்கில் பிராப்தியோக காலத்தில் பிதாமூலம் சுகம் முதலியன அல்லது அதிக செல்வமுடைய பிரபுவால் ஆதரிக்கப்படுவான், லக்னாதியுடன் கூடியோ பார்க்கப்பட்டோ இருந்தால்தானே பிரபு ஆவான். 5-மிடத்தோன் தசா காலத்தில் விசேஷ சுகம் அல்லது புத்திரனுவது பிரபல அறிவாளியாய் அரசனிடம் மந்திரியாயாவது தோழனுக ஆவது இருப்பான், சத்திர (குடை) சாமரயோகம் மகாராஜா இடத்தை ஆசரித்தல் உண்டு.

(10) 9-மிடத்தோன் 6-ல் அவ்வதிபனுடனிருந்தால் சுபக்கிரகத்துடன்கூடில் அத்தசையில் சுப பலன், நீதிஸ்தலத்தில் அதிகாரிபதவியால் பாக்யவிருத்தி நிச்சயிக்கவும், அனேகம் அடிமைகளைக் காப்பான், செல்வவான் வாகனஐசுவரியம் நிறைந்தவன், செல்வம் மேன்மேலும் ஓங்கும், சில சமயம் தாயாதி தன வரவு, குஜ க்ஷேத்திரத்தில் குஜனிருந்தால் பூமிச்செல்வம், குரு சேர்க்கையில் அதிகதனம், இம்மாதிரி ஏற்படுத்தி பலனுரைக்கவும். சூரியன்சேரில் எழுத்துமூலம், ராகுவாகில் திருடர் பொருளுக்கு அதிபன், சனிசேரில் எப்போதும் தண்டனை செய்பவன் அல்லது அரசாங்கமுத்திரை தரித்தவருக்கு தலைவன் அல்லது தூதர்களுக்குத்தலைவன், பல ஈனனாயினும் 8 முதலிய அம்சங்களிலிருந்தாலும் அற்ப பலன்.

(11) 9-க்குடையோன் 7-ல் அவ்வதிபனுடனிருக்கில் சுப யோகத்தில்பாக்கியவிருத்தி, சில சமயம் தேசாந்திரத்தில் செல்வம் அல்லது தகப்பன் தேசாந்திரத்தில் அரசன் மந்திரி அல்லது

அரசனுக்கு வேண்டியவனாக இருப்பான் அதன்மூலம் பாக்கிய விருத்தி பலமாகும், பாக்கியவமிசத்தில் பிறந்தவன், அதன்மூலம் சுகவிருத்தி உண்டாகும், போகபாக்கிய சுகத்துடனிருப்பான் போகஸ்திரீ சுகம் கிடைக்கும், மாலை, சந்தனம் முதலிய வாசனை, திரவியலாபம், பல ஈனனாகில் அற்ப பலன், 8 முதலிய அம்சங்களிலும் அவ்விதமே, அல்லது குஜன் சேர்க்கையால் வெளி வாசத்தில் பூமிச்செல்வம், குருவில் தனம் சம்பாதிப்பான், சுக்கிரனில் ஸ்திரீமூலம் சுகம், அறிவாளியால் இவ்விதம் இவை முதலியதை ஆராய்ந்து தசா புத்தியில் பலன் ஏற்படுத்திக்கொள்ளவும்.

(12) 9-ஆமிடத்ததிபன் 8-மிடத்தில் அவ்வதிபனுடன் கூடில் செல்வமழிவு அல்லது பிதா மரணம் நிச்சயம் அல்லது ஏழ்மைத் தனத்தால் துக்கம், சரத்தில் துலையில் விணலைச்சல், இம் மாதிரி பலன் சொல்லவும், சுபயோகத்தில் கலப்பு பலன், பல ஈனனாகில் தரித்திரத் தன்மை,துக்கத்தால் தேக மெலிவு, கிரகங்களுக்குமுன் சொன்ன அவயோகப்படி பலன் ஏற்படுத்தி சொல்லவும், அவர் நீச, அஸ்த சத்ரு ராசியிலிருக்கத் துக்கத்தையே செய்வர், இவ்விதம் தசாபலனை நன்றாக அறிந்து புக்திபலனைச் சொல்லவும் பலன் கொடுக்கும் கிரகத்திலிருந்து முன்னுரைத்த வழியாய் நிர்மானித்து அந்தந்ததசைகளில் பலத்திற் கேற்றவாறு யுக்தியால் பலன் சொல்லவும் - யோகம், அவயோகம், இவைகளின் சேர்க்கை தசா புத்திகளின் பலாபலம் ஸ்தானம், ஆச்ரயம் இவை முதலியன வெல்லாம் நன்கு ஆராய்ந்து பலன் சொல்லவும்.

பாக்கியாதிபன் தசை முற்றிற்று

## ராஜ்ஜியாதிபன் தசை

(1) 10 ஆமதிபன் 11ல் அல்லது 10ல் சுபமுடன் கூடியிருக்கினும்அவ்வதிபனுடனிருக்கினும் நிச்சயம் ராஜ்ஜியலாபம்,அதிக பிரசித்தி, புகழ், அனேகசேனை, பராக்கிரமம் உடையவன் எங்கும் வெகுமதிக் கப்படுவான் எல்லா ஜனத்தாலும் மரியாதை செய்யத் தகுந்தவன், தர்மகார்யத்தில் பிரவர்த்தி, ராஜயோக மடைவான் பல ஈனனாகில் அற்பம் தொழில்லாப மடைவான் - உத்தியோக லாபம், குஜனில் கப்பம்-பூமிவரவு, குருவில் உத்யோகலாபம், சுக்ரனில் வாகன பூஷணம், புதனில் வித்தியா சுகம், இவ்விதம் யோசித்து பலனேற்படுத்தவும், 8-முதலிய அம்சங்களிலும் பாப யோகத்திலும் பங்கமுண்டாகு மென்று பலனேற்படுத்தவும்,

(2) 10-ஆமாதி 12-ல் அவ்வதிபனுடனிருக்கப் பாபயோகத் அவகீர்த்தி அல்லது தொழிலிருந்து விலகல், உத்தியோக பங்கம், தொழில் பங்கம், முதலியன, சுபயோகத்தில் வேத விருத்தி வைதிகாசாரம் உண்டாகும்,பாபயோகத்தில் சூத்திரவிருத்தி பாபியாகில் வீணாக வெகுதூரமலைதல்.

(3) 10-ஆமாதி லக்னத்தில் அவ்வதிபனுடனிருக்கில் சுப யோகத்தில் பிரசித்திமான புகழுடையோன், ராஜலக்ஷ்மிக்கு இருப்பிடமானவன், அத்தசையில் பிரசித்தனன அரசமந்திரி அரசன், சந்தேகமில்லை அல்லது உத்யோகத்தால் பிரசித்தி ஸத் கர்மா சாரவிருத்தி, பல ஈனனுகில் அற்பம், 8-முதலிய அம்சங்களில் அதுவுமில்லை, பாப யோகத்தில் பங்கயோகம் சில சமயம் அப வாதம் கெட்டதானம் வாங்குவான், கிரகத்துக்கு சொன்ன பசு தர்னம், அல்லது சனி பகவானுகில் எருமை தானம் வாங்குவான் சூரியனுகில் பூனை, அங்காரகன் ஆடுமுதலியன இவ்விதமே சுபர் களுக்கு சுபதானம் ஏற்படுத்தவும்.

(4) 10-ஆமாதி 2ல் அவ்வதிபனுடன் கூடியிருக்கில் சுப யோகத்தில் தனப்பிராப்தி, தனவானென்று பெயருடையவன் குடும்பஜனத்தில் பிரசித்தன், எங்கும் வாக்ஸித்தி ராஜயோகத் தில் - ராஜ்யமூலமோ உத்யோக மூலமோ தனவரவு, பணியாளர் அத்தசையில் சமயம் எதிர் பார்த்திருப்பர், நித்தம் அனேகரைக் காப்பான் அனேகருக்கு அன்னமிடுவான், 8-முதலிய அம்சங் களிலும் துர்பலனுயிருக்கையிலும் முன் சொன்ன பலன் மத்திபம், பாபர் சேர்க்கையில் கெடுதி குடும்பஜன பீடை - தரித்திரத்தன் மை பயம் அருவருக்கத்தக்க புசிப்பு, அகால போஜனம் பொய் பேசுபவனென்கிற புகழ் இவை நேரும், கிரகங்களுக்கு சொன் னவை யெல்லாமறிந்து அந்தந்த காலங்களில் சேர்த்துக் கொள்ள வும்.

(5) 10 மிடத்தோன் 3ல் அவ்வதிபனுடனிருந்தால் சுபக் கிரகத்துடன் கூடில் அந்த செய்கையால் புகழ், உத்தியோக விருத்தி பாடகன் என்னும பிரசித்தி அல்லது தைரியசாலி யென் னும் புகழ் நேரும், சகோதரன் புகழுடையவன், எங்கும் காரகர் களின் பலமறிந்து அங்காங்கு பலன் கூட்டிக் கொள்ளவும், துற் பலனுகில அற்ப பலன், 8 முதலிய அம்சங்களிலும் அவ்விதமே ஆகும்.

(6) 10ஆமதிபன் 4ல் அவ்வதிபனுடனிருக்கில் அதிக பயிர் செழுமை, தன் பூமியிலேயே புகழுடன் ஜீவனம், சுபயோகத்தில் பயிர் மூலம் பிரசித்தி அதிகம் நற்குலத்துதித்தோ னென்றும் பிரசித்தி, தாய் பெருமைவாய்ந்த குலத்துதித்தாள்,இவ்விதம் யுக்தி யால் பலன்ஊகிக்கவும் பாபயோகத்தில் ஆனி,சுபாசுபயோகத்தில் கலப்பு பலன், பல ஈனமாகில் அற்பம் ஆகும்.

(7) 10 ஆமிடத்தோன் 5ல் அவ்வதிபனுடன் கூடி யிருக்கில் சுபயோகத்தில் ராஜ்ஜிய லாபம் அல்லது அத்தசையில் மந்திரி, வினை த்தகாரியம் கூடும்,பிரசித்தி பெற்ற புகழுடைய பிரபுவாவான்,ஒரு வர்க்கொருவர் மித்திராரிகளில் விசேஷமாக முன்னுறைத்த

பலன் சத்ருவாயினும் 8லிருப்பினும் அற்பபலன் எல்லாம் ஆலோசித்து சொல்லவும் பிரமையால் சொல்லக்கூடாது.

(8) 10 ஆமாதி 6ல் அவ்வதிபனுடனிருக்கில் நீதிஸ்தல அதிகாரியாவான், அங்குஜீவனம் சிறிது காலம் இருக்கும் அல்லது அம்மான் பிரசித்தன், சேனையில் ஜீவனம் அல்லது வைத்தியத் தொழில்,இப்பலன், எல்லாரும் பல முடையவராகில் நேரும், பாப யோகத்தில் ஈனத்தொழில், சில சமயம் அரசாங்க முத்திரை தரித்தவனுவான் அல்லது சிலசமயம் தூது தொழில், சிலசமயம் சூத்திரன்ன புசிப்பு, கிரகங்களுக் கேற்றதொழில், வியாபாரத்தில் பங்கமடைவான் அல்லது ஆமசிராத்தம் முதலிய தொழில், இது சனியோகத்தால் சிலசமயம் நேரும், யோகம் அவயோகமறிந்து தசாபலன் ஏற்படுத்தவும்.

(9) 10 ஆமா7-ல் அவ்வதிபனுடன் கூடில் மனைவிநற் குலத்துதித்தோளாக விவாகம் கூடும், சிலசமயம் தேசாந்தரத்தில் புகழ் அல்லது ஜீவனம் நிச்சயம் அல்லது மனைவி மூலம் ஜீவனம் சிலசமயம் தீர்த்த்யாத்திரையில் பற்று அல்லது போக்குவரத்து தொழில்,இங்கு பாப யோகம் நேரில் தேசாந்தரத்தில் கஷ்ட ஜீவனம் சபிண்டீகரண அன்னப் புசிப்பு-பிரேதயோஜனம், ஏழ்மைத் தனபலன் அடைவான், ஈன ஜாதியில் விவாகம், அல்லது மனைவி பிரிவு இவை முதலிய பலன் அந்தந்த காலத்தில் கிரகங்களுக் கேற்றபடி சொல்லவும்.

(10) 10 ஆமாதி 8ல் அவ்வதிபனுடன் கூடில் எப்போதும் கெட்ட செய்கையில் பற்று அல்லது தொழிலுக்கு ஆனி,ஜீவனம் போதல்,சுபயோகத்தில் போகாது, பூமி ஆனி, பயிர் தொழில் ஆனி, கல்வித்தடை வாகனங்களுக்கு அழிவு சுபயோகத்தில் மத்திபபலன் பாபயோகத்தில் அற்பம்.

(11) 10 ஆமாதி 9ல் அவ்வதிபனுடன் கூடி குருபல மற்றிருக்கில் தினம் செய்கடமை பங்கம், பலவானுகில் நற்கருமம் செய்வான் சந்தேகமில்லை, தன்தேசத்தில் பாக்யவான்-பிரசித்தன், மஹாராஜாவுக்கு பிரியன், உத்யோகத்தால் சவுக்கியம், தகப்பன் புகழுடையோன்,வரியில்லாத பூமியுடையோன் இது குஜன் பல வானுகில், குருவாகில் உத்யோகலாபம் சுக்ரன் வாகனம் பூஷணம் முதலியன, புதன் வித்யாசுகம், சந்திரன் கோசாதிகாரீ, அல்லது பயிர் தோட்டம் முதலியவையால், சூரியன்-ராஜ்யமூலம் அல்லது சிலசமயம் வைத்தியதொழிலால்,சனி-பணித்தொழில் இவை கிரக யோக பலத்தால் சொல்லவும்.

(12) அறிவாளியா யிருப்பவன் பலாபலமறிந்து எல்லாம் யுக்தியாலுரைக்கவும், கிரகங்களுக்கு உரைத்தவை யெல்லாம் சொல்லவும்.விசேஷமாகும் சுபயோகத்தில்பாபயோகத்தில் கெடுதி

சிலசமயம் கெட்ட புகழ் ஈனத்தொழில் ஈனஜீவனம் ஈனரை அண்டுதல் நேரும், 10 ஆமாதி பலவானுய் அவ்வதிபன் அதிக பலத்துடனிருக்கில் எல்லாம் சுபபலன் சொல்லவும் இல்லாவிடில் கெட்ட பலன், இவ்விதம் தசாபலன் அறிந்து பிறகு முன் சொன்ன முறையாய் புக்திகிரகங்களை நிச்சயித்து பலவசத்தால் பலன் ஊகித்து சொல்லவும்.

கர்மாதிபன் தசை முற்றிற்று.

## லாபாதிபன் பலன்

(1) 11-ஆமாதி தன்னுச்சராசியில் சுபக்கிரகங்களுடன்கூடி பார்க்கப்பட்டிருந்தால் அதிகலாபம் அடைவான், மூத்த சகோதரன் பிரசித்தன், குஜனுல் பூமிலாபம், சூரியன்-தகப்பன் மூலம், சந்திரன் வியாபார விருத்தி, புதன் வித்தை மூலம், சில சமயம் வஸ்திர வியாபார மூலம் லாபம், குரு உத்தியோக மூலம், அல்லது கல்வி பயிலுவிற்றல், சுக்கிரன் ஸ்திரீகளை மயக்குதலால், சனி விறகு, கட்டை முதலியன விற்றலால், அல்லது மரம், கல் இவைகளால் அந்தந்த ஜாதிக்கு தக்கவாறு சொல்லவும், இவ்விதமே மற்றிடங்களிலும், 11-ஆமதிபனுக்கு ஏற்றவாறும், 11-ஆமிடத்தோன் இருக்கும் பாவேசனுக்கேற்ற விதைகள், தானியங்கள் மூலமும் வியாபார லாபம், அறிவாளிகளால், யுக்தியால் ஆராய்ந்து குறிக்கத் தக்கது.

(2) 11-ஆமாதி 12-ல் அவ்வதிபனுடன்கூடில் கிடைக்கத் தக்கவைக்கு கெடுதி, சில சமயம், மூத்த சகோதரனுக்கு கெடுதி, சுப யோகத்தில் மத்திம பலன், பாப யோகத்திலும் இவ்விதமே ஆகும்.

(3) 11-ஆமாதி லக்னத்தில் அவ்வதிபனுடனிருக்கில் எப்போதும் லாபம், 10-ஆமாதி பலவானுகில் சில சமயம் உத்தியோக லாபம், சில சமயம் வியாபார ஏற்பாடு, ராசிக்கிரகங்களுக்கு ஏற்றவாறும், பலாபல வசத்தாலும் இவ்விஷயத்தில் தசை வருங்காலத்தில் யுக்தியால் தனலாபம் ஏற்படுத்தத்தக்கது.

(4) 11-ஆமாதி 2-ல் அவ்வதிபனுடனிருந்தால் அம்சத்திலும் தன்னுச்ச ராசியிலிருந்தால் கோடிக்கதிகமான பொருளடைவான், பாப யோகத்தில் அற்ப பலன் சொல்லவும், அடிக்கடி கெடுதியும் சேரிடும்.

(5) 3-ஆமிடம் சுபருடன்கூடி 11-ஆமதிபனுடனிருந்தால் அத்தசையில் அடிதோறும் அதிகலாபமடைவான், சில சமயம் தசை வரும்போது சகோதரன் மூலம் லாப மடைவான், பாப யோகத்தில் பங்கம், சுப யோகத்தில் விருத்தி, கூடியகிரகத்துக்கேற்றவாறு லாபாலாபம் ஏற்படுத்தவும்.

(6) 11-ஆமாதி 4-ல் அவ்வதிபனுடனிருக்கில் கல்வி, வாகனம், பூமி இவை மூலம் லாபம் கிடைக்கும், சில சமயம் பயிர் தொழில் மூலமும் லாபம், குருவாகில் கரும்பு, குஜனில் பயிர், சுக்கிரனில் பழ மரங்கள், சனியில் கேழ்வரகு முதலியன, சந்திரனில் கீரை முதலியன, அறிவாளி இஎவிதம் கிரகங்களுக்கு சொல்லியபடி பயிர் தொழில் முதலிய எற்படுத்தவும், விசேஷமாக சுப யோகத்தில் 11-ஆமதிபன் மூலமாய் சொல்லவும், அதுவும் வஸ்திர வியாபார மூலமும், ஆபரணம் முதலிய விற்றலாலும, பாப யோகத்தில் பங்கம் அல்லது தடை அப்போது சொல்லவும்

(7) 11-ஆமாதி 5-ல் அவ்வதிபனுடன் கூடியிருக்கில் நேசப் பிரபு, புத்திரன், தைவம் இவர்களுளொருவரால் லாபம் சொல்லவும், ரத்தின வியாபார மூலமும், பூமியில் புதையல் மூலமும், அல்லது கப்பல் முதலிய மார்க்கத்தால் கடல் கடத்தலாலும் லாப முறைக்கவும், எல்லாம் கிரக ராசி மூலம் அறிவாலும் யுக்தியாலும் ஏற்படுத்தி சொல்லவும், தானியம், வித்து மூலமும், பூர்வ புண்ணியவசத்தாலும் லாபம், பாப யோகத்தில் அதன் மூலம் பங்கம், தடை இவை சொல்லவும், சுபயோகத்திலிங்கு முக்கியமாய் மேற்சொல்லியது கிடைத்தல் சொல்லவும்.

(8) 11-ஆமதிபன் 6-ல் அவ்வதிபனுடன் கூடி சுபயோகத்திலிருக்கில் ஞாதியாலும், விவகாரத்தாலும், மாமனாலும் லாபமுண்டாகும், சௌரியவிருத்தியுண்டு, பாப யோகத்தில் இருக்கில் இங்கு சொல்லிய பலன்களெல்லாம் மத்திமமாக நடக்கும்; இவர்களுடன் கூடியிருக்கும் கிரகம், அவர்களுடைய காரகத்துவம் இவைகளையும் சேர்த்து தகுந்தபடி பலன் சொல்லவும்.

(9) 11-ஆமதிபன் 7-ல் அவ்வதிபனுடனிருந்தால் தேசாந்தரத்தில் லாபம், சில சமயம் மனைவி மூலம் கிடைக்கும், தூது செல்வதால், ஸ்திரீ வசியத்தால், ஜன வசியத்தால் லாபம் அடைவான், சனி அங்காரகனிடையிலிருந்தால் அங்கு சுக்கிரனிருந்தால் தன் மனைவியை அயலாரை ரமிக்கச்செய்து அதன் மூலம் லாபமடைவான், பாபயோகத்தில் அற்பலாபம், கிரகங்களுக்கு சொல்லியபடி ஏற்படுத்தவும்.

(10) 11-ஆமதிபன் 8-ல் அவ்வதிபனுடனிருக்கில் பாபச் செய்கை மூலம் கடன், லாப மடைவான், சில சமயம் ஏழ்மைத் தனமடைவான், மனதில் நிலை பெறுதிருத்தல் அடைவான், எப்போதும் ஈனரையே அண்டுவான், அதன் மூலம் லாபம் கிடைக்கும், சுப யோகத்தில் மத்திம பலன், 11-ஆமாதி துர்ப் பலனுகில் வியாபாரத்தில் நஷ்டமடைவான், விவகாரத்தில் அதிகமாகும்.

(11) 11-ஆதி 9-ல் அவ்வதிபனுடனிருந்தால் தகப்பன் மூலம் பாக்ய லாபம், சில சமயம் பிரபு முலம், 10-ஆதி உச்சனு

யிருந்தால் வியாபாரத்தில் பிதா பாக்யவான், உத்தியோகத்திலும் அதிக தனம், இங்கு எப்போதும் லாபம் சொல்லவும், கூடிய கிரகத்திற்கு ஏற்றவாறு அதிக பலன் சொல்லவும், பாப யோகத்தில் மத்திமம், கெடுதி அல்லது தடை.

(12) 11-ஆமாதி 10-ல் அவ்வதிபனுடனிருந்தால் வியாபார ஸித்தி, அந்தந்த கிரகத்துக்கு சொன்ன வியாபாரம், சுப யோகத்தில் அதிக பலன், குரு 11-லிருந்தால் அந்த ராசியில் 11-ஆமாதியிருந்தால் எப்பேதும் உத்தியோகத்தால் லாபம், சில சமயம் யாகம் முதலியவையால் உண்டாகும், சுக்ரனுகில் வாகனம் முதலியவையால், புதனுகில் வஸ்திரம் முதலியவையால் உண்டாகும், அந்தந்த கிரகத்திற்கு சொன்ன லாபம் புத்திசாலி அறிந்து சொல்லவும், முன் 12 பாவங்களுக்கு சொல்லியபடி தசையிலும் சேர்த்துக்கொள்ளவும், இவ்விதம் முதலில் தசையை பிரித்து பிறகு புத்திகளை ஏற்படுத்தவும்.

லாபாதி தசை முற்றிற்று.

## 12-ஆமதிபன் தசை

(1) 12-ஆமாதிபன் தன் ராசியிலிருந்து சுபக்கிரகங்களுடன் கூடில் திரவியசித்தியடைவான், அத்தசையில் செலவில்லை, சுபர் கூடியதசையில் சுபர்மூலம் பொருட்செலவு, லக்னுதி பலத்துடனிருக்கில் செலவைக்காட்டிலும் அதிக லாபம், போகத்திற்கேற்றவாறு படுக்கை, போகம் முதலிய சுகத்தையும், எப்போதும் நல்வழியில் ஜீவனமும், வேதாந்த விஷயத்தை ஆராய்தலும், பிரம்மத்திடமே (மூலப்பொருள்) பக்தியும், சாதுக்கள் முதலியோர் சேர்க்கையும் சொல்லவும், லக்னுதி பல ஈனனுய் 12-ல்பாபரிருக்கில் ஏழ்மை, கேமுத்துருமபலன் சொல்லவும்.

(2) 12-ஆமாதி 2-ல் அவ்வதிபனுடனிருந்தால் பாபர் சேர்க்கை. எப்போதும் குடும்ப ஜன கலகம், அகால போஜனம், அருவருப்பான அன்னம் புசித்தல், சிராத்த அன்ன போஜனம், சூத்திரர் முதலியோர் அனுப்பிய அன்னப்புசிப்பு, கடுஞ்சொல் லுரைத்தல், கடுமையாயிருத்தல், கண்ணேய் முதலிய பயம், சுபயோகம் மத்திபம், கூடியகிரகத்திற்கேற்ற பலன் சொல்லவும்.

(3) 12-ஆமிடத்தோன் 3-ல் அவ்வதிபனுடன்கூடில் எப்போதும் மேலும் மேலும் செலவதிகம், சகோதரர் நாசம், சுப யோகத்தில் கலப்பு பலன், 6-8-ஆமாதிபுடன்கூடி சுபயோகத்தில் பார்க்கப்பட்டாலும் தசை வரும்பேது இவ்விதம் வாகனம் முதலிய சுகம் கிடைக்கும்.

(4) 12-ஆதி 4-ல் அவ்வதிபனுடனிருக்கில் சுப யோகத்தில் சுபம், பூமி முதலிய லாபம் சொல்லவும், பாப யோகத்தில் கெடுதி,

அப்போது தாய்க்குக் கெடுதி, பூமி, பயிர்த்தொழில், வாகனம் முதலியன நாசம், மிச்ரமாகில் கலப்பு பலன், கூடிய கிரகத்திற் கேற்ற பலனுரைக்கவும், 8 முதலிய அம்சங்களில் அற்ப பலன், பாபிகளாகிலும் அற்பம்.

(5) 12-ஆமாதி 5-ல் அவ்வதிபனுடனிருக்கில் அத்தசையில் மகப்பேறும், கெடுதியும் செய்யும், பிரபுவிடமிருந்து நழுவல் அல்லது புத்திமாறுட்டம் உண்டாகும், சுப யோகத்தில் கலப்பு பலன், பாப யோகத்தில் புத்திரனின்மை, அல்லது புத்திர நாசம், அல்லது கெட்ட புத்திரப்பேறு சில சமயம் நேரும், சில சமயம் பிரபுவின் விரோதம், தகப்பனுக்கு பீடை, சில சமயம் அரசாங்க கலகத்தால் பயம், ஜீவனங்கெடல் நேரும்.

(6) 12-ஆமாதி 6-ல் அவ்வதிபனுடன்கூடில் அத்தசை சுபத்திற்கு காரணமாகும், அதுவும் விசேஷமாக 8-ஆமாதியுடன் சேர்ந்திருக்கவேணும், சுப யோகத்திலும் 8 முதலிய அம்சங் களிலும் அவ்வித பலனே.

(7) 12-ஆமாதி 7-ல் அவ்வதிபனுடனிருக்கில் களத்திரத் திற்கு கெடுதி, மரண யோகத்தில் மரணம் சொல்லவும், சில சமயம் வெளி வாசம், சுப யோகத்தில் தன வரவு, பாப யோகத் தில் எப்போதும் துக்கம், வீணலைச்சல், தேகபீடை முதலியன, களத்திரத்திற்கு அபவாதம் சொல்லவும்.

(8) 12-ஆமாதி 8-ல் அவ்வதிபனுடனிருக்கில் சுகதுக்கம், சமம், சுப யோகத்தில் சுபம், ஆறுமதிபன் யோகத்தில், அத்தசை யில் சுபம் முதலியன அதிகம், தசை வருங்காலம் கூடிய கிரகத்திற் கேற்ற பலன் சொல்லவும்.

(9) 12-ஆமாதி 9-லிருந்தால் தன் தொழில் நாசம், அவ் வதிபனுடன்கூடில் மத்திம பலன், நற்செய்கையில் ஊக்கம், அதன் மூலம் பொருட்செலவு, உத்தியோகத்தில் பங்கம், சுப யோகத்தில் கலப்பு பலன், அந்தந்த கிரகத்திற்கேற்ற பலனை அந்தந்த காலத்தில் சொல்லவும்.

(10) 12-ஆமாதி 10-ல் அவ்வதிபனுடனிருக்கில் பிதா பாக்ய நாசம், சில சமயம் தர்ம மூலம் செலவு, சுப யோகத்தில் போக மூலம், சன்மார்க்கத்தில் செலவு அல்லது ஸத்பாத்திரத்தில் தானம், கோபுரம் முதலியன கட்டுதல் நேரும்.

(11) 12-ஆமாதி 11-ல் அவ்வதிபனுடனிருக்கில் லாப ஹானி, சுபக்கிரகத்தில் சுபமூலம், பாப யோகத்தில் கெட்ட செய்கையால் சத்துருவால் தன விரயம், இவ்வித அந்தந்த கிரகத்திற்கேற்றவாறு தன நாசம் சொல்லவும், மூத்த சகோதரன் விரோதத்தாலோ, சில சமயம் வியாபாரத்தாலோ தனக்குறைவு, சில சமயம் தாரித்திரிய யோகத்தால் சில சமயம் லாபாலாபம் சமமாகும், இவ்விதம் தசாதிபர்களைக்கண்டு பலாபலம் ஆராய்ந்து கூடி பார்த்த கிரகங்களின் காரகம் ஆதிபத்தியமறிந்து தீர்மானித்து அந்தந்த தசா காலங்களில் பலன் சொல்லவும், தசாநாதனிருக்கும் ராசியதிபதி காரக ஆதிபத்யம் கண்டு தசாநாதனுக்கு என்னென்ன பலன் நேருமோ சொல்லவும், தசாநாதனிருக்கும் ராசியதிபனைக் கொண்டு இப்பலனுரைக்கப்பட்டது.

(12) இவ்விதமே மற்றிடங்களிலும் ராசிநாதன் இருப்பறிந்து பலன் சொல்லவும், 12-ஆமாதி 1-ம் பாவத்திலிருந்து சுபனாகில் சுப பலன், சுபர சுபராகில் கலப்பு பலன், இருபாபாதிபராகில் துக்க பலன் சொல்லவும், சுபனாகிலும், அசுபனாகிலும், எவன் கேந்திர, திரிகோணாதிபனோ அந்த கிரகம் சுபந்தரும், கேந்திராதிபர் மத்திபம், 2-3-11-அதிபர் லாக்ஷனிகர், 6-8-12-அதிபர் பாபிகள், இரண்டுஸ்தானங்கள் சுப பாபாதிபராகில் கலப்பு பலன், இவ்விதம் ஸ்தானாதிபரைக்கொண்டு சுபர் பாபர் அறிந்து முன் சொன்ன 8 வித பலாபலமும் கண்டு சுபயோகம், பாபயோகம், மிச்ர யோகமறிந்து, பாபயோகம் வீண், எப்போதும் செலவு, கடன் அதர்மத்தில் பற்று, ஸ்த்ஸங்க சேர்க்கை, மிச்ர யோகத்தில் மிச்ர பலன், கிரகத்திற் கேற்றபடி சொல்லவும், முன் துவாதசபாவங்களுக்கு சொல்லியதை தசையிலும் சேர்த்துக்கொள்ளவும், “என்று” அற்பந்தான் சொல்லப்பட்டது, புத்தி பலத்தால் அறிந்து என் சாஸ்திரப்படி சொன்னால் ஜோதிடன் ஜயம் பெறுவான், என்று சத்தியரிஷி சொல்லுகிறார்..

வியயாதிபன் தசை முற்றிற்று.

## ராகு, கேது பலன்

(1) ராகு, கேதுக்களின் பலனைச் சொல்லப்போகிறேன் கவனமாய்கேள். எப்போதும் ராகு, கேதுக்கள், சூரிய, சந்திரர்களை விழுங்குவதற்காக எதிர்நோக்கி திரிந்துகொண்டு எப்போதும்

விரோதியா யிருக்கின்றனர், சூரிய சந்திரர் அவர்களஸ்தத்தில் பல ஈனர், அவர்களுடன் கூடில் ராகு, கேதுக்கள் பலமற்றவராவர் அவ்விருவரும் யார் ராசி நவாம்சங்களில் பலமுடையவரா யிருக்கின்றனரோ அந்தந்த ராசி நவாம்சாதிபருடன் கூடிபார்த்த கிரகங்களால் அறிவால் பலம், அவர் தசாபுத்தி அந்தரங்களில் ஏற்படுத்தவும், சுபருடன் கூடில் சுப பலன், பாபருடன் கெட்ட பலன், கிரகத்தலைவரான சூரிய சந்திரருக்கு விரோதியாகையால் அவர்களுக்கு சுதந்திர பலனில்லை, அறிவாளிகளால் நின்ற ராசியதி பருக்கேற்ற பலனவர்களுக்கு சொல்லவும், பாப ராசியில் பாப பலனும், சுப ராசியில் சுப பலனும் தருவர், அவ்விருவருள் ராகு கேந்திர கோணங்களில் கெட்ட பலனளிப்பர், 2-ல் பொருட் செலவும், குடும்ப ஜன கஷ்டமும், 3-ல் 4-ல் தாய்க்கு பீடையும், அபவாதமும் தருவர், 5-ல் புத்திர ஹானி, 6-ல் சத்ரு பயம் முதலியன திருடுவாதை சர்ப்பபயம், காற்று, பீடை செய்யும், 7-ல் களத்திரத்திற்கு கெடுதி, வெளிவாஸத்தில் திருடு, பீடை, 8-ல் பெரிய நோய் அல்லது துர்மரணம், பீடை, 9-ல் பிதரு பீடை, குரு துரோகம் முதலியன, 10-ல் செய்யத்தகாத தொழில், சுபனுகில் கங்காஸ்நானம் முதலியன, 11-ல் லாப ஹானி, 12-ல் பலவித செலவு, இது அற்ப மாத்ரமே சொல்லப் பட்டது, கேதுவுக்கும் இப்பலனே தான், நின்றபாவேசன்பலனே பஞ்ச சித்தாந்தத்தில் சொன்ன எல்லாம் கலந்து சொல்லவும், முன்னுரைத்தவிதமே புக்திகளுக்கும் ஏற்படுத்தவும்.

ராகு, கேது பலன் முற்றிற்று.

## கோசார பலன்

(1) லக்னத்திலிருந்தாவது, சந்திர லக்னத்திலிருந்தாவது கோசார பலன் சொல்லவும், முன்போல் கோசாரத்திற்கும் 12 பாவங்கள் அறியத்தக்கன, சூரியன் முதல் லக்னம் வரையில் 8 வர்க்கங்கள் ஏற்படுத்தவும், (1) சனி, (2) குரு, (3) செவ்வாய், (4) சூரியன், (5) சுக்கிரன், (6) புதன், (7) சந்திரன், (8) உதயம் முறையே வர்க்காதிபர். லக்னம் முதல் 12-லும் இவ்விதமே முன் சொன்ன சாஸ்திரப்படி அஷ்டக பிந்துக்களை வைத்து பிந்து ஸ்தானங்களில் கோடு இல்லாத இடத்தில் ஒன்றுமில்லை, யார் அஷ்டகவர்க்கத்தில் அறையில் கோடுகள் உண்டோ அங்கு கோசார பலன் சூரியன் முறையே சஞ்சரிக்குங்காலம் தானே பலனறிவிப்பர், பாவம், பாவாதிபர், அறைக்கதிபன், சூரியன்

இவர்கள் பலாபலத்தின்பேல் பலன் ஏற்படுத்தவும், கோடுடன் கூடிய அறைக்கதிபனும், ராசியதிபனும் பலவானுகில், தாது கிரகமாகில் தாது பலனும், மூல கிரகமாகில் மூல பலனும், ஜீவ கிரகம் ஜீவ பலனும், மிசிரமாகில் மிச்ர பலனும் (கலப்பு) கொடுப்பர், இவ்விஷயத்தில் பஞ்ச சித்தாந்த முறைப்படி அந்தந்த கிரக சுபாவத்துக்கேற்ற அறிவாளிகளால் கோசாரத்தில் ஆதிபத்யத்துக் கேற்றபடி பலன் சொல்லவும்.

(2) சூரியன் 8 அறைகளிலும் 1 மாதம் வசிட்பர், அங்கு ஒரு அறையில் 3¾ நாள் வசிப்பர், சந்திரன் 2¼ நாள் 17 நாழி குறைவு, ராசி காலங்கள் தசை, புக்திகாலம் மாசம் கோசாரத்தில் அந்தராந்தரம் முதலில் ஆரம்பத்தில் சொன்னபடி அறைக்கேற்றகாலம் சந்திர (கஷ்யா) அறையிலிருந்து சூரிய சூக்ஷமம் முறையே அறியவும், அது 4 விதம், சூரிய சந்திரர் அறையை அறிந்து அந்தந்த பலாபலம்கண்டு கோசாரத்தில் தசா புக்தி, அந்தர தசை ஆரம்பத்தில் சொல்லியபடி சொல்லவும், மனித்தகனே சூரியசார விசேஷத்தை உனக்கு சொல்கிறேன்.

(3) சூரியன் ஜன்மம் முதல் 6 தாரை நக்ஷத்திரங்களில் சுப பலன், விபத். முதல் 3 தாரைகளில் சஞ்சரிக்கும் காலம் கெட்ட பலன், ஆதிபத்யம் சுபமாகில் சுப பலன், பாபமாகில் கெட்ட பலன், எல்லாம் இவ்விதமே அறியவும், லாபாதிபத்ய நக்ஷத்திரங்களில் சுபராகில் அந்த வாரத்தில் சுப பலன் திரிகோணுதிபதாரை சுபராகில் சுப பலன், பாபராகில் பாப பலன் அறிவாளியான உன்னுல் இவ்விதமே மற்றிடங்களிலும் ஊகித்து அறியவும், ஆத்மா சூரியன், தேகம் சந்திரன், பிராணன் லக்னம் என்று உறைக்கப்பட்டது, அந்தராந்தரநாதர், அறைக்கதிபரென்று சொல்கின்றனர்.

(4) டீகா :—சூக்ஷ்மநாதன் லகு என்றறியும்.—அந்தராந்தர நாதரின் பலாபலமறிந்து அறிவாளியான உன்னுல் கோசாரத்தில் நன்கு பலன் ஏற்படுத்தவும், கேதுவுக்கு அஸ்தத்திலும், நீசாம்சத்திலும், சூரியன் பலனளியார், ராகுவின் அஸ்தத்திலும், சூரிய யோகத்திலும், சந்திரன் பலன் கொடார், எல்லா கிரகங்களுக்கு நீசம் அஸ்தராசிகள் அறியத்தக்கன, ராசி அம்ச நக்ஷத்திராதிபர்களின் பலத்தாலேயே பலன் சொல்லவும், எங்கும் சுபயோகத்தில் சுப பலன், பாபயோகத்தில் பாப பலன், கர்மத்தாலுண்டாகியது அதிருடமென்றும் கண்களுக்கு எதிரில் உண்டானது திருட

மென்றும் அறியவும், இரண்டு பாவங்களிலும் மனிதருக்கு சாஸ்திரத்தாலும், யுக்தியாலும் ஏற்படுத்தவும், திருடகர்மத்தாலுண்டான பலன் மூதலில் சொல்லியிருக்கிறது, (அதை அறிந்து இங்கு கூட்டி சொல்லவும், கர்மத்தாலுண்டான அதிருடத்தை அறிவதற்காக இங்கு சூக்ஷமாய் சொல்லப்போகிறேன்.

## ரவி சாரம்

(5) 3-6-11-ல் சூரியன் சுபன், ஸ்தான லாபம், ராஜ பூஜை, தன விருத்தி, 2-ல் தன க்ஷயம், 4-ல் துக்கம், 5-ல் புத்திர பீதி, 7-ல் பிரபு விரோதம், 8-ல் பயம், ரோகம், மனஸ்தாபம், 10-ல் தொழிலில் சித்தி, 12-ல் வீணலைச்சல், துக்கம், தேக பயம், 9-லும், லக்னராசியிலும் சுபாசுப பலன், புத்தியால் கூடிய கிரகத்திற்கேற்ற பலன் ஏற்படுத்தவும், இவ்விதம் அம்சத்திலும் பலாபலமறியவும்.

## சந்திர சாரம்

லக்னத்தில் சவுக்கியம், 2-ல் தன வரவு, 3-ல் ஜயம், 4-ல் பயம், சோகம், 5-ல், 6-ல் சத்ரு பயம், 7-ல் துக்கம், 8-ல் அரிஷ்ட பயம், 9-ல் தேக பீடை, 11-ல் சந்தோஷம், 12-ல் பொருட்செலவு.

## குஜ சாரம்

குஜன் சூரியன் மாதிரி, 10-ல் மாத்திரம் தொழில் நாசம்.

## புத சாரம்

லக்னத்தில் தன நாசம், 2-ல் தன லாபம், 3-ல் சத்ரு பீடை, 4-ல் தன லாபம், 5-ல் தார, புத்திரர், முதலியவர்கள் கலகம், 6-ல் சத்ரு பயம், 7-ல் விரோதம், 8-ல் புத்திர, தன லாபம், 9-ல் தொழில் தடை, 10-ல் சுகம், 11-ல் பொருள் விருத்தி, 12-ல் சந்தோஷம், செலவு.

## குரு சாரம்

லக்னம் துக்கம், 2-ல் தனம், பயிர் விருத்தி, 3-ல் ஸ்தான நாசம், 4-ல் பந்து கஷ்டம், 5-ல் புத்திரப் பேறு, 6-ல் சத்ரு பயம், 7-ல் போக சுகம், 8-ல் நோய் முதலியன, 9-ல் புத்திரன், பொருள் கிடைத்தல், 10-ல் தன ஹானி 11-ல் தனஸ்தான லாபம், 12-ல் துக்கம் பயங்கரம்,

## சுக்கிர சாரம்

லக்னம் போகஸ்திரீ சவுக்கியம், தன்ம், 2-ல் தன வரவு, 3-ல் தைரியம் முதலிய குணம், செல்வம், 4-ல் தோஷம் விருத்தி, 5-ல் புத்திர சம்பத்து, 6-ல் சத்துரு பயம், 7-ல் ஸ்திரீமூல நோய், 8-ல் செல்வம், ஸ்திரீ சுகம், 9-ல், 10-ல் கடன், 11-ல் சுபாரம்பம், 12-ல் பொருள் வெளியேற்றம்.

## சனி சாரம்

லக்னம் பலவித நோய், 2-ல் தன ஹானி, குடும்ப ஜன விரோதம், 3-ல் ஸ்தான லாபம், தனம், பணியாள் லாபம், 4-ல் பந்து விரோதம், சுக ஹானி, களத்திர அரிஷ்டம், 5-ல் புத்திர, தன ஹானி, 6-ல் சத்துரு நிவர்த்தி, 7-ல் வெளிவாசம், 8-ல் அதிக கஷ்டம், 9-ல் தர்ம ஹானி, 10-ல் கஷ்டம், 11-ல் லாபம், சுகம் முதலியன, 12-ல் அர்த்த நாசம், வெளி வாசம்.

## ராகு சாரம்

முன்பே விஸ்தாரமாக சொல்லப்பட்டது ஆகையால் இங்கு அற்பம் சொல்லப்பட்டது, பாபிகள் நைஸர்க்கிக சுபரென்னப் பட்டது, இருவித பாபிகள் 12-8-1-லிருந்தால் தன ஹானி, வெளி வாசம், மரணம் முதலிய செய்வர், நைஸர்க்கிக ஆதிபத்யத்யால் சுபர், சுப பலன் தருவர் தசாதிபன் பலம், புத்திநாதன் பலம், ராசி இருக்கும் வீட்டதிபன், சூரியன், சந்திரன் பலா பலங்களை ஆதியில் சொல்லியபடி எல்லாம் தசா மார்க்கங்களில் சேர்க்கவும்.

கோசார பல கல்பனு கிரமம் முற்றிற்று.

---

முத்துக்குமரன் பிரஸ், 14-எ, குப்பையர் தெரு, சென்னை-1.

# சே. ஜி. ராஜன் (*Mathematics*) அவர்களால்

## இயற்றிய

# ஜோதிட நூல்களின் விலைப்பட்டி

| | | |
|---|---|---|
| 1. ஜாதக கணிதம் முதல்பாகம் என்னும் ஜோதிட கிரக சட்பலம், ஆயுள் கணிதம். (நான்காம் பதிப்பு) | 3 | 8 |
| 2. ஜாதக கணிதம் இரண்டாம் பாகம் என்னும் ஜாதகப் பலாபலன் நிர்ணயம் | 4 | 0 |
| 3. ஜாதக கணிதம் மூன்றும் பாகம் என்னும் ஜாதக மனோரஞ்சிதம் மலர் 1. | (அச்சில்) | |
| 4. ஜாதக கணிதம் நான்காம் பாகம் என்னும் ஜாதக ராஜ மனோரஞ்சிதம் மலர் 2. | 2 | 4 |
| 5. ஜாதக சிரோன்மணி என்னும் வராஹமிஹிரருடைய பிருஹத் ஜாதகம் (ஹோரா சாஸ்திரம்) | 2 | 8 |
| 6. தெசாபுத்தி சிந்தாமணி 224 பக்கம் | 3 | 0 |
| 7. நவக்கிரக ஸ்புட கணனம் என்னும் சித்தாந்த இராஜ சிரோன்மணி (கிரக கரணம்) தமிழில் | 10 | 0 |
| ஷை இங்கிலீஷில் கிளேஸ் காகிதம் 510-பக்கம் | 5 | 0 |
| 8. ஜாதக தெசாரிஷ்ட நிவாரணி 70 பக்கம். | 1 | 0 |
| 9. லக்கின ஸ்புட பாவஸ்புட கணிதம் (Tables-Bhavas) தமிழில் | 1 | 8 |
| ஷை இங்கிலீஷில் | 1 | 0 |
| 10. ஜாதக ராஜ பாவ இருவாட்சி ஆயுள் பாவம் மலர் 1 பாகம் நெ. 1 | 1 | 10 |
| களத்திர பாவம் மலர் 1 பாகம் நெ. 2 | 1 | 10 |
| ஜீவன பாவம் மலர் 1 பாகம் நெ. 3 | 1 | 4 |
| புத்திர பாவம் மலர் 1 பாகம் நெ. 4 | 1 | 12 |

| | | |
|---|---|---|
| 11. சுக்ப்பிரம்மரிஷி வர்க்கியம் என்னும் ஜாதக சுகர் வாக்கியம் முதற்பாகம். 120 பக்கம் | 1 | 6 |
| ,,— இரண்டாம் பாகம் | 1 | 2 |
| 12. ஜாதக ஜம்புநாதீயம் கிளேஸ் காகிதம் | 2 | 0 |
| 13. சாதக சர்வார்த்த சிந்தாமணி. | 2 | 4 |
| 14. 1883ஞு முதல் 1945ஞு வரை கிரகங்களின் கிராந்தி. | 2 | 0 |
| 15. சர்வ முகூர்த்த நிர்ணயம் என்னும் காலவிதானம் | 1 | 10 |
| 16. ஜாதக "சுபபோதினி" (முதல் வாசகம் பால போதினி) ஆசிரியரின்றி ஆண் பெண் எல்லோரும் ஜோதிஷம் கற்றுக்கொள்ளக்கூடியது | 2 | 8 |
| 17. அஷ்டகவர்க்கம் :—(அஷ்டகவர்க்கம் போடும் வழி, அஷ்டகவர்கச் சக்கரம் அதன் பலாபலன்கள் நிர்ணயமும் (இது பிறர் உதவியின்றி தாமே தெரிந்துக் கொள்ளக்கூடியது.) | 1 | 8 |
| 18. ஜோதிட கோசர பலா பலன்கள், இதில் யூரேனெஸ் நெப்த்யூன் இவைகளின் பலாபலன்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. | 1 | 8 |
| 19. ஸ்திரீ ஜாதகம் என்னும் பெண்கள் ஜெனன ஜாதகம் | 1 | 8 |
| 20. "சத்தியரிஷி துவாதச பாவ பலன் நிர்ணயம்" என்னும் ஜாதக சத்தியாச்சாரீயம் | 2 | 0 |

ஷை விலைப்பட்டியில் தெரிவித்துள்ள புத்தகங்களுக்கு போஸ்ட்டேஜ் பிரத்தியேகம்.

குறிப்பு :—பல ஆசிரியரின் வாக்கிய, திருக்கணித சித்தாந்த பழைய பஞ்சாங்கங்களும், எங்களிடம் கிடைக்கும்.

---

கிடைக்குமிடம் :—

ஸ்ரீமதி சி. கனகம்மாள்,

ஆப் சி, சுப்பிரமணியம் அண்டு பிரதர்ஸ்,

31, ஆயலூர் முத்தையா முதலி தெரு, ஜீ. டி. சென்னை-1.

## வாக்கியம்.

இது தென்னாட்டிற்கென்றே பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட தமிழ் வாக்கிய பஞ்சாங்கம். இதைத் தென்னாட்டு ஆஸ்திகர்களும், வைதீகர்களும், தங்கள் வீடுகளிலும், கோயில்களிலும் தங்கள் தங்கள் பூர்வீக



பஞ்சாங்க ஆசிரியர்
C. G. ராஜன் B.A., என்னும்
C. கோவிந்தராஜன், B. A.,
(Mathematics)

தர்ம சாஸ்திரம், நிபந்தனக் கிரந்தம், பரம்பரை வழக்கம் முதலிய கொள்கைகளைக் கைவிடாமல் அனுஷ்டிக்க வேண்டும் என்ற ஆசையை உடையவர்களும் அனுஷ்டிக்கு மாறு தயார் செய்திருக்கிறது. இது பூர்வீக் கணித முறைப்படி தயார் செய்யப்பட்ட (பஞ்சாங்கத்தின் பஞ்ச அங்கங்களாகிய) 1-வாரம், 2-திதி, 3 நட்சத்திரம், 4-யோகம், 5-கரணம் ஆகிய இந்த ஐந்து அங்கங்களை அநுசரித்து இப்பஞ்சாங்கத்தில் விரதாதி, உற்சவாதி, ஸ்ராத்தாதி, விஷயங்கள் வைஷ்ணவ, சைவ, ஸ்மார்த்த, மத்வ, மதாச்சார பரம்பரை வழக்கம் பிரகாரம் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன. ஆகையால் இது ஆஸ்தீகர்களுக்கும், வைதீகர்களுக்கும், தங்கள் குடும்ப தர்ம சாஸ்திரங்களையும், ஆச்சாரங்களையும் அனுசரித்து வருபவர்களுக்கும், கோயில்களிலுள்ளவர்களுக்கும் மிகவும் உபயோகமானது. இதில் அனேக பொது விஷயங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இது நாமகள் திருக்கணித பஞ்சாங்கத்தின் ஆசிரியர்களாகிய (1) C. கோவிந்த ராஜன், B.A.. (Mathematics), (2) C. விஜயம் இவர்களால் கணிக்கப்பட்டு தயார் செய்யப்பட்டனவாகும். இப் பஞ்சாங்கத்தில் கிரஹணங்கள் தற்காலத்திற்குச் சரியாயும், துல்லியமாயும் இருக்கும்படியாகச் செய்யப்பட்டிருக்கின்றன. இப் பஞ்சாங்கத்தை உபயோகப்படுத்தி நன்மையை அடையுமாறு கோரப்படுகின்றது.

ஆசிரியர் C. கோவிந்தராஜன், B. A., போட்டோ படத்தைப் பார்த்து வாங்கவும்.

சி. ஜி. ராஜனுக்கும் ஆனந்த போதினி கம்பெனிக்கும் 1941ளு முதல் வியாஜ்யங்கள் ஏற்பட்டு விரோதமாகையால் இவருடைய புஸ்தகங்களும் பஞ்சாங்கங்களும் ஆனந்த போதினி, கம்பெனிக்குச் சப்ளை செய்வது நிறுத்தப்பட்டது.

---

கிடைக்குமிடம் :— ஸ்ரீமதி C. கனகம்மாள் கம்பெனி,

31, ஆபஹார் முத்தையப்பமுதலி தெரு, ஜி. டி. சென்னை-1.

